## கலியுகத்தின் கல்பதரு

# ஸ்ரீ சத்யபோத தீர்த்தர்



கன்னடத்தில்

**மலகி ஜயதீர்த்தாச்சார்**

தமிழில் மொழிபெயர்த்தவர்

‘ஜகன்னாத கேசவ’ **சத்ய நாராயணன்**

**ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்**

பெங்களூரு

**ஸ்ரீசத்யபோத தீர்த்தர்**

| | | |
|---|---|---|
| ஆண்டு | : | 2018 |
| பக்கங்கள் | : | 164 |
| விலை | : | **ரூ. 70.00** |
| கன்னடத்தில் | : | மலகி ஜெயதீர்த்தாச்சார் |
| தமிழில் | : | **'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**<br>கைப்பேசி: 89044 58276 |
| வெளியீடு | : | **ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்**<br>பெங்களூரு |

ஸ்ரீ திக்விஜயராமோ விஜயதே
ஸ்ரீமத் ஜகத்குரு ஸ்ரீமத்வாசார்ய மூலமஹாசம்ஸ்தானம்
உத்தராதி மடம்

**ஜகத்குரு ஸ்ரீமன்மத்வாசார்ய மூலமஹாசம்ஸ்தானம்**
**ஸ்ரீமத்உத்தராதி மடாதீசரான ஸ்ரீஸ்ரீ 1008 ஸ்ரீ சத்யபிரமோத தீர்த்த ஸ்ரீபாதங்களவரின்**

## அனுக்கிரக செய்தி

*ஸ்ரீஹம்ஸநாமக பரமாத்மனின் இந்த திவ்ய பவ்ய பரம்பரையில் பிரம்மதேவனிடமிருந்து துவங்கி இன்று வரை மகாமகா தேவதைகள், ரிஷி முனிகள், வேதாந்த சம்பூதர்கள் அவதரித்திருக்கின்றனர். அவர் அனைவரின் மகிமைகளும் மிகவும் அபாரமானவை. அவர்கள் இயற்றிய கிரந்தங்களும் பற்பல உள்ளன. பாரதம் முழுக்க வைஷ்ணவ சித்தாந்த பிரசாரம் செய்து அதை நிறுவிய பெருமை இவர்களுடையது. இத்தகைய யதி பரம்பரை வரிசையில் ஒளிரும் பரமஹம்ஸ பாதரே ஸ்ரீசத்யபோத தீர்த்தர். நாற்பது ஆண்டுகள் பீடாதி பத்யத்தில், தென்னிந்தியாவின் அனைத்து ராஜர்களுக்கும் குருவாகி, தமது அபாரமான மகிமை, பாட பிரவசன தவம் ஆகியவற்றால் மிகப்பெரிய கீர்த்தியைப் பெற்றிருந்தார். வரலாற்றின் ஒவ்வொரு பக்கங்களிலும் ஸ்ரீசத்ய போதரின் மகிமைகள் எழுதப்பட்டிருக்கின்றன. அவரை நினைப் பவர்களுக்கு அவர் நிஜமான காமதேனுவாக இருக்கிறார். மகாதபஸ்விகள், தானத்தில் சிறந்தவர், பண்டித*

*சக்ரவர்த்தி. இவர் பெயரில் தங்க நாணயங்கள் நடைமுறையில் இருந்தன. நள்ளிரவில் சூரியனைக் காட்டிய மகாமகிமர். அத்தகையவரின் திவ்ய சரித்திரத்தை நமது சிஷ்யரான மலகி ஜயதீர்த்தாச்சார் எழுதியதைக் கண்டு நமக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாகியது. அவரிடமிருந்து மேலும் அனேக கிருதிகள் வரவேண்டுமென்று விரும்புகிறோம். நமது உபாஸ்ய ஸ்ரீமூலராம சீதா திக்விஜயராம தேவர் வாயுதேவர் குருகள் என அனைவரின் அருளும் இவருக்கு இருக்கட்டும் என்று வேண்டுகிறோம்.*

*ஸ்ரீ நாராயணனை வணங்கும்*
**ஸ்ரீஸ்ரீசத்யப்ரமோத தீர்த்தர்**

**முகாம்: சாங்க்லி**
**ஸ்ரீசத்யவிரதர் புண்யதினம்**
20-03-1996

ஸ்ரீ திக்விஜயராமோ விஜயதே
ஸ்ரீமத் ஜகத்குரு ஸ்ரீமத்வாசார்ய மூலமஹாசம்ஸ்தானம்
உத்தராதி மடம்

**ஜகத்குரு ஸ்ரீமன்மத்வாசார்ய மூலமஹாசம்ஸ்தானம்
ஸ்ரீமத்உத்தராதி மடாதீசரான ஸ்ரீஸ்ரீ 1008 ஸ்ரீ சத்யாத்ம தீர்த்த
ஸ்ரீபாதங்களவரின்**

# அனுக்கிரக செய்தி

**நைவேத்யக விஷம்ராமே வீக்ஷ்யதத்புக்திபாக்குரு:**

*ஸ்ரீமத் உத்தராதி மடத்து திவ்ய பரம்பரையில் வந்த மகாவிபூதி புருஷர் ஸ்ரீசத்யபோத தீர்த்தர். இவரின் ஞானம், பக்தி, வைராக்யம், ஆளுமை, மகிமைகள் அபாரமானவை. ஸ்ரீமூலராமனின் மேலிருந்த பக்தியினால் விஷத்தையே ஜீரணம் செய்த மகானுபாவர் ஸ்ரீசத்யபோத தீர்த்தர். நள்ளிரவில் சூரியனைக் காட்டியவர். ஸ்ரீஹரியின் அருள் இருந்தால் அனைத்தும் நம் வசம் என்று நிரூபித்துக் காட்டியவர். தமது காலத்தில் பல அரசர்களுக்கு, பல நவாப்களுக்கு நல்வழி காட்டினார். தமது மகிமைகளைக் காட்டியவர். இத்தகைய ஸ்ரீசத்யபோதரின் சிந்தனையே அனைத்து இஷ்டார்த்தங்களையும் கொடுக்கிறது. அனைத்து பிரச்னைகளையும் விலக்குகிறது.*

*ஸ்ரீமத்வரின் ஞானகங்கையை தலையில் ஏந்திய இவருக்கு சாட்சாத் கங்கையே பிரத்யட்சம் ஆகியிருக் கிறாள். இத்தகைய ஸ்ரீசத்யபோத தீர்த்தரின் மகா*

*சரித்திரத்தை இதிகாச பின்னணியில் எழுதியிருப்பவர் நம் பிரிய சிஷ்யரான பண்டிதர் ஸ்ரீஜயதீர்த்தாச்சார் மலகி அவர்கள். அந்த கிருதியே தற்போது மறுபதிப்பு கண்டுகொண்டிருக்கிறது.*

*பக்தர்களுக்கு இதனால் பெரும்பயன் இருக்கிறது. இதனால் நமக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாகிறது. இதனை எழுதியவருக்கும், உதவி செய்தவருக்கும், அனைவருக்கும் நமது உபாஸ்ய மூர்த்திகளான ஸ்ரீமூலசீதாராம, ஸ்ரீதிக்விஜயராம, ஸ்ரீவேதவியாசர் அருளட்டும் என்று வேண்டுகிறோம்.*

*ஸ்ரீ நாராயணனை வணங்கும்*
**ஸ்ரீசத்யாத்ம தீர்த்த ஸ்ரீபாதங்களவர்**

முகாம்: கர்னூல்
3-9-2007

# முன்னுரை

**ந**மது திவ்யமான குருகள் ஸ்ரீசத்யபோத தீர்த்தர். தெய்வபுருஷர். மகாதபஸ்விகள். நம்பியவர்களுக்கு அருளும் கல்பவிருக்ஷம். காமதேனு. கோதாவரியிலிருந்து கன்யாகுமரி வரையிலான தென்னிந்தியாவை தன் உள்ளங்கையில் வைத்து ஆண்ட யதிராஜர். இந்து, முஸ்லிம் என அனைத்து அரசர்களையும் தன் வசப் படுத்தியவர். இந்துக்களின் கலாச்சாரத்தை, சம்பிரதாயத்தை காப்பாற்றிய தீரபுருஷர். ஸ்ரீசத்யபோதர் சொல்வதே இறுதியானது என்று பல அரசர்கள் சொல்லும் அளவிற்கு இருந்த ஆளுமை இவரது. வேதாந்த உலகில் அனைத்து பீடாதிபதிகளின் கௌரவத் தையும் பெற்றவர். எந்த பீடாதிபதியாகட்டும், ஸ்ரீசத்யபோதரின் முடிவே சிறந்தது என்னும் அளவிற்கு ஜகத்குருவாக இருந்தவர். அனைத்து யதிகளும் இவருக்கு மரியாதை கொடுத்தனர். அனைத்து விதமாகவும் புகழப்பட்டார். நூற்றுக்கும் மேற்பட்ட பண்டிதர் களுக்கு பாடம் எடுத்தவர். இவரிடம் பாடம் படித்த வித்வாம்சர்கள் நால்வர், இவருக்குப் பிறகு முறையாக உத்தராதி மடத்து பீடாதிபதிகளாக வந்தனர். ஸ்ரீசத்யசந்தர், ஸ்ரீசத்யவரர், ஸ்ரீசத்யதர்மர் மற்றும் ஸ்ரீசத்யசங்கல்பர். இவர்கள் இவரது மாணவர்களே.

சாவணூரை ஒரு பல்கலைக்கழகமாக ஆக்கியிருந்தார். உத்தராதி மடத்து ஜகத்குருகளாகி ஸ்ரீமடத்தின் கீர்த்தி, அதிகாரம், செல்வம், சிஷ்யர்கள் ஆகியவற்றை அபாரமாக வளர்த்த குருகள் ஸ்ரீசத்யபோத தீர்த்தர். பாரதத்தின் முக்கிய தீர்த்த க்ஷேத்திரங்களில் ஸ்ரீமடத்து கட்டிடங்களை கட்டியவர் ஸ்ரீசத்யபோத தீர்த்தர். மிகவும் பெரியதான ஆறு தங்க மண்டபங்களை ஸ்ரீமூலராமனுக்காக நிர்மாணித்தவர். பற்பல கிராமங்களை பரிசாகப் பெற்று, ஒரு பொற்காலத்தையே நிறுவியவர் இவர்.

*பதினான்கு ஹரிதாசர்கள் இவரை மிகவும் போற்றி புகழ்ந்திருக்கின்றனர். ஸ்ரீவிஜயதாசரில் துவங்கி அனைவரும் ஞானி வரேண்யரே. ஹரிதாசர்கள் இவரின் தாசர்கள். இவர்களிடம் வளர்ந்தவர்கள். இவரின் அருளைப் பெற்றவர்கள். நூற்றுக்கும் மேற்பட்ட அற்புதங்களை தமது வாழ்க்கையில் செய்து காட்டியவர். தமது சாதனையின், சித்தியின் பலனை அனைவருக்கும் கொடுத்தவர். பிருந்தாவனத்தில் இன்றும் நிலைத்திருந்து அனைவருக்கும் அருளியவாறு இருக்கும் குரு ஸ்ரீசத்யபோத தீர்த்தர். அவரது சரித்திரம், மகிமைகள் அபாரம்.*

*ஸ்ரீசத்யபிரமோத தீர்த்தர் மற்றும் ஸ்ரீசத்யாத்ம தீர்த்தர் இன்றைக்கும் ஸ்ரீசத்யபோதருடன் உரையாடி அவரின் அருளைப் பெற்றிருக்கின்றனர் என்பதை கண்கூடாகப் பார்த்திருக்கிறேன். இவர்கள் இருவரும் ஸ்ரீசத்யபோதரின் அபாரமான கிருபைக்கு பாத்திரரான யதிகள் ஆவர். இவர்களின் அருளே இந்த கிருதியை இயற்றுவதற்கு உதவியாக இருந்தது. என் வித்யா குருகளான பரமபூஜ்ய மஹாஹுலி ஆசார்யர் ஸ்ரீசத்யபோத தீர்த்தரின் மகிமைகளை சொல்லிவந்தார். அவரது உபதேசமே இந்த கிருதியை இயற்றும் சக்தியைக் கொடுத்தது. இவர்கள் அனைவருக்கும் என் சாஷ்டாங்க வணக்கங்கள்.*

*இந்த புத்தகத்தின் அட்டைப்படத்தை அழகாக வடிவமைத்துக் கொடுத்த ஸ்ரீ K.M. சேஷகிரி அவர்களுக்கு என் நன்றிகள். இதனை சரியான நேரத்திற்கு அச்சடித்துக் கொடுத்த மோகன் ப்ரிண்டர்ஸ் அவருக்கும் என் நன்றிகள். இதனை பதிப்பிக்க உதவிய திரு மோகாக்ஷி அவர்களுக்கு ஹரிவாயு குருகளின் அருள் நிரந்தரமாக இருக்கட்டும் என்று வேண்டுகிறேன்.*

*இந்த கிருதி மிகவும் அழகாக வந்திருப்பதற்கு முக்கிய காரணமாக இருந்த என் சிஷ்யர் டாக்டர் பீமசேனாசார்ய மலகி, பண்டிதர் பூர்ணபிரக்ஞாசார்ய, டாக்டர் ஸ்ரீஷாசார்ய நாமாவளி, டாக்டர் வினாயகாசார்ய நாமண்ணவர் - இவர்களுக்கு குருகளின் விசேஷ அருள் இருக்கட்டும்.*

**– ஜயதீர்த்தாச்சார் மலகி**

சிராவண பௌர்ணமி
28-8-2007
தார்வாட்

# அட்டவணை



## குருகளான ஸ்ரீசத்யப்ரிய தீர்த்தர்

ஸ்ரீசத்யபூர்ண தீர்த்தர் தமது குருவான ஸ்ரீசத்யாபினவ தீர்த்தரின் ஆராதனையை மிகவும் சிறப்புடன் நடத்தி, அங்கிருந்து தார்வாட் பகுதிக்கு வந்தார். பங்காபுர, டம்பள, முண்டரகிகள ஆகிய இடங்களில் வாதி-நிக்ரஹம் செய்தவாறு, அதணி, சௌதி, சத்தி வழியாக பௌகாவிக்கு வந்தார். அங்கு பல சிஷ்யர்களுக்கு வைஷ்ணவ தீக்ஷை அளித்து, சுத்தமான மத்வ தத்வங்களை போதித்து, ராய்ச்சூர் பகுதிக்கு வந்தார்.

துங்கா நதிக்கரையில் இடகி என்னும் கிராமத்தில் சில மாதங்கள் தங்கியிருந்தார். அங்கு ஸ்ரீசத்யபூர்ணரிடம் பாடம் படிப் பதற்காக பண்டிதர் கார்லாபாடு ராமாசார்யர் வந்தார். ஐந்து மாதங்கள் அவருக்கு நியாய சுதா பாடத்தைச் சொல்லி விஜயதசமியன்று மங்களம் செய்தார். குருவான ஸ்ரீசத்யபூர்ணர் அவருக்கு அன்றே சன்யாச ஆசிரமம் வழங்கினார்.

ப்ரத்யர்த்தி ப்ரவரான் நிஷம்ய நிகிலாயத் ப்ரௌட க்தோரணே ।
மார்கேத்ரேகிர முச்சகை: ப்ரபயதாம் ஸ்தம்பேரமேந்த்ரா இவ ॥

ஆசன்னாஶ்ரீத காந்திஷேக ஜனதா போரி ப்ரபாவாஸ்ரய: ।
ஸ்ரீசத்யப்ரிய நாமகோத சதத: கர்மதிம் கேசர்யபூத் ॥

சன்யாசம் ப்ரதம: ப்ரீதா விஜயாதசமி தினே ।
பௌர்ணிமா திவஸே ப்ராப்தே மத்யான்ஹே குருசேகரா: ॥

**தேப்ய: க்ருத்வாபிஷேகம் தே சத்யதர்ம முனிஷ்வரா: ।**
**இதி நாம யுதா தத்வா ... ॥** *(பூ.போ.கு.க 23.29)*

*கார்லபாடு ராமாசார்யருக்கு அப்போது வெறும் 25 வயது. இளமைப் பருவம். பொங்கி வழியும் பிரம்ம தேஜஸ். திடமான ஹரிபக்தி. குருபக்தி. அற்புதமான பாண்டித்யம். கடும் விரக்தி. இவற்றினால் ராமாசார்யர், குருகளின் பூரண அருளுக்கு பாத்திரரானார்.*

*விஜயதசமியன்று சுதா மங்களத்தின்போதே சத்யபூர்ணர் சன்யாசத்திற்காக பல-மந்திராக்ஷதை வழங்கினார். நான்கைந்து நாட்களில் சன்யாத்திற்கான அனைத்து விதிகளையும் செய்து முடித்தார். ஆஸ்விஜ பௌர்ணமியன்று ராமாசார்யருக்கு பிரணவ மந்திரத்தை உபதேசம் செய்து, பண்டிதர்கள் நிறைந்த சபையில் ஸ்ரீசத்யவர்ய தீர்த்தர் என்று பெயர் சூட்டினர். பின்னர் இவரே ஸ்ரீசத்ய ப்ரியர் என்று பெயர் பெற்றார். அவருக்கு சிறிய சம்ஸ்தானத்தைக் கொடுத்து திக்விஜயத்திற்கும் அனுப்பினார்.*

*சத்யவர்யருக்கு அற்புதமான பாண்டித்யம். சென்ற இடங் களிலெல்லாம் வாக்யார்த்தங்களை, பாட பிரவசங்களை தொடர்ச்சியாக செய்து வந்தார்.*

**சக்ருர் நித்யம் மஹாபாஷ்யே த்வைதாத்வைதே குரோத்தமா: ।**
*(பூ.கு.வம்.க. 29.32)*

*ஸ்ரீசத்யவர்யர் 'ஸ்ரீசத்யப்ரியரு' கிருஷ்ணா நதிக்கரையில் கொப்பர க்ஷேத்திரத்திற்கு வந்தார். ஸ்னானம் ஆனபிறகு, அனைவருக்கும் தீர்த்த முத்ராதாரணை வழங்கியபோது, ஒரு ஸ்மார்த்த பக்தர் அங்கு வந்து ஸ்ரீகளவர் கையினால் முத்ராதாரணை வாங்கி வைஷ்ணவ தீக்ஷை பெற்றார். அந்த அத்வைத கிருஹஸ்தர் பல நாட்களாக படித்து த்வைத தத்வங்களை அறிந்திருந்தார். மிகுந்த பக்தியுடன் வைஷ்ணவர் ஆனார். மிகவும் மகிழ்ந்தார். ஆனால் அன்றைய தினமே அவரது வீட்டில் ஒரு கெட்ட சம்பவம் நடந்தது.*

**தஸ்மின் தினே தஸ்ய புத்ரோ நத்யாம் மக்னோ பபூவ ஹ ।**
**பஹிர் நிஷ்ட்யாஸயாமாசு: நிஸ்சேஷ்டம் தம் ததாஜனா: ॥**
*(கு.வ.க.க. 35)*

வைஷ்ணவ தீக்ஷை பெற்ற அந்த கிருஹஸ்தனின் மகன் கிருஷ்ணா நதிக்கு ஸ்னானம் செய்யப் போனபோது, அதில் மூழ்கி விட்டான். அனைவரும் அவனை கஷ்டப்பட்டு காப்பாற்றியும், அவன் உடலை மட்டுமே காப்பாற்றமுடிந்தது. அனைவரும் துக்கத்தில் ஆழ்ந்தனர். நாம் வைஷ்ணவர் ஆனதாலேயே இப்படி ஆயிற்று என்று அந்தத் தாய் அழத் துவங்கினாள். முத்ரா தாரணம் பெற்றதே தவறாகிவிட்டது. அதனாலேயே நம் மகன் நம்மைப் பிரிந்தான் என்று அனைவரும் அழுது புலம்பினர்.

இந்த கூக்குரல் ஸ்ரீகளவரின் காதில் விழுந்தது. தமது பரிவாரங் களுடன் ஸ்ரீகளவர் அந்த நதிக்கரைக்கு வந்தார். அந்த மகனின் உடலைக் கண்டார். அந்த உடலின் மேல் தீர்த்தத்தைப் ப்ரோக்ஷணம் செய்தார். 'தேஷாம் அனுக்ரஹாத் பாலோ நிஸ்சேஷ்டோப்யுத் திதோபவத்'. அவரின் அருளினால், தீர்த்தத்தின் சக்தியினால், அந்த மகன் மறுபடி உயிர் பிழைத்தான். எழுந்து ஓடத் தொடங்கினான். அனைவருக்கும் வியப்பு. வைஷ்ணவர் ஆனது மிகவும் நல்லா தாயிற்று என்று அந்த கிருஹஸ்தர் மகிழ்ந்தார்.

ஸ்ரீசத்யவர்யரின் (ஸ்ரீசத்யப்ரியரின்) மகிமை அனைத்து இடங்களிலும் பரவிற்று. குருவான ஸ்ரீசத்யபூர்ணருக்கு இது தெரிய வந்தது. அவரும் மகிழ்ந்தார். தன் இன்னொரு சிஷ்யர் மூலம் ஸ்ரீசத்யவர்யருக்கு செய்து அனுப்பினார். 'இது கலியுகம், இத்தகைய அமானுஷ்ய வேலைகளை அதிகம் செய்யவேண்டாம். புண்ணியம் குறைந்து விடும். சாதனைகளை விட இதையே அதிகம் செய்ய நேரிடும்' என்று கூறினார். குருகளின் ஆணைப்படியே, இவரும் இத்தகைய அமானுஷ்ய லீலைகளை நிறுத்திவிட்டார்.

ஸ்ரீசத்யப்ரியர், கர்னாடக, ஆந்திரா, மகாராஷ்டரத்திலேயே அதிக சுற்றுப்பயணம் செய்தார். இவரின் திக்விஜயத்தில் ஆயிரக் கணக்கான ஸ்மார்த்த குடும்பங்கள் இவரிடம் முத்ராதாரணம் பெற்றன. வைஷ்ணவத்தை ஸ்வீகரித்தனர். ஆந்திரத்தின் அன்றைய புகழ்பெற்ற அத்வைத பண்டிதர், சம்ஸ்கிருதத்தில் சிறந்த பாண்டித் யத்தைப் பெற்ற 'கனஷ்யாம கவி' இவரிடம் வாக்யார்த்தம் செய்து, சுத்த தத்வங்களை அறிந்து, வைஷ்ணவர் ஆனார். இவருக்கு இரு மனைவியர். அவர்களும் சம்ஸ்கிருதத்தில் கிரந்தங்களை எழுதி யவர்கள். அவர்களும் வைஷ்ணவத்தை தழுவினர். கனஷ்யாமர்

பின்னர் சிறிது காலம், தஞ்சாவூரின் துக்கோஜியின் சபையில் மந்திரியாக இருந்தார்.

'சாகுந்தலை, உத்தர ராமசரிதம் ஆகிய 30 சம்ஸ்கிருத கிரந்தங்களுக்கு உரை எழுதிய கனஷ்யாம கவி, சம்ஸ்கிருதத்தில் 64, பேசுமொழியில் 20, மற்ற மொழிகளில் 25 கிரந்தங்களை எழுதி யிருந்தார். இவர் ஸ்ரீசத்யப்ரியரிடம் சன்யாசம் வாங்கி, பிடி சன்யாசி ஆனார். த்வைத சித்தாந்தத்தை ஏற்றார். அத்வைத மற்றும் விசிஷ்டாத்வைத கிரந்தங்களான பிரபோத சந்திரோதய, சங்கல்ப சூர்யோதய ஆகியவற்றை கண்டித்தார். ஸ்ரீசத்யப்ரியரின் மகிமை களை, மத்வமதத்தின் சிறப்புகளை 'ப்ரசண்ட ராஹோதய' என்னும் நாடக ரூபத்தினாலான புதிய கிரந்தம் எழுதி, அதில் விளக்கினார். இந்த நாடகத்திற்கு ஷ்யாம கவி மற்றும் அவரது மகன் என்று இருவரும் உரை எழுதினர். ஸ்ரீசத்யப்ரியரின் அன்றைய கால மகிமைகள் அனைத்தும் இந்த கிரந்தத்தில் கிடைக்கின்றது. இந்த 'ப்ரசண்ட ராஹோதய' கிரந்தம், மும்பையின் ஸ்ரீசத்யத்யான வித்யாபீடத்தினரால் வெளியிடப்பட்டது.

ஸ்ரீசத்யவர்யர் ஆந்திராவில் இருந்தபோது, ஸ்ரீசத்யபூர்ணர் திருப்பதியில் இருந்தார். ஸ்ரீசத்யபூர்ணர், தமது வயதான நிலையை கவனத்தில் கொண்டு, மன்னார்குடியின் மூத்த மகாபண்டிதரான பாண்டுரங்கி பாபாசார்யருக்கு ஆசிரமம் கொடுத்து அவருக்கு ஸ்ரீசத்யவிஜயர் என்று பெயரிட்டார். ஸ்ரீசத்யபூர்ணர் கொல்லாபுரத்தில் பிருந்தாவனம் பிரவேசித்தார்.

ஸ்ரீசத்யவிஜயர் மிகவும் வயதானவராகையால், முதலில் அவரே பீடத்தில் அமரட்டும் என்றும், அவருக்கு முன்னரே சன்யாசம் வாங்கியிருந்த ஸ்ரீசத்யவர்யர் அடுத்து பீடத்தில் அமரலாம் என்று அன்றைய பண்டிதர்களான லக்குண்டி ஆனந்ததீர்த்தார் முதலான வர்கள் கூறியதை, ஸ்ரீசத்யவர்யர் ஒப்புக்கொண்டார். ஸ்ரீசத்யவிஜயர் தாம் பிருந்தாவனம் பிரவேசிக்கும்போது, ஸ்ரீசத்யவர்யருக்கு, ஸ்ரீசத்யப்ரியர் என்று நாமகரணம் செய்து, அவரை ஹம்ஸபீடத்தின் உத்தராதிகாரியாக மாற்றினார்.

அத்தகைய ஸ்ரீசத்யப்ரியரின் ப்ரியமான சிஷ்யரே, அவருக்கு அடுத்த இந்த மகாபீடத்தை அலங்கரித்த ஸ்ரீசத்யபோதர். இவரது காலம் மத்வ சமூகத்தின் பொற்காலம் என்று அழைக்கப்படுகிறது.

*அத்யந்த மகிமைகளைப் பெற்றவர். தேவாம்சம் பெற்றவர். அவரது சரித்திரம் இந்த ஆன்மிக உலகில் ஒரு மைல்கல். அவரது ஆளுமை, த்வைத சித்தாந்த தத்வத்தில் ஒரு மிளிரும் நட்சத்திரமாக இருக்கிறது. தென்னிந்தியாவின் அனைத்து அரசுகள், ஆன்மிக, தார்மிக சமூகத்தில் தக்க மரியாதை பெற்றிருந்தார் ஸ்ரீசத்யபோதர்.*

## ஸ்ரீசத்யபோதரின் முன்னோர்களின் வரலாறு

**பூரிபூசுவ கெஹேதா நானாராம நிஷேவித ।**
**க்ருஷ்ணா துங்கா நதியுக்ம மந்தரேணேவ ரங்கபூ: ॥** *(கு.வ. 1.37)*

**கார்ஷ்ண தௌங்க ஷுபதுங்க தரங்கோத்பதவாத வரபோதக போதா ।**
*(ச.போ.வி. 2.4)*

*கிருஷ்ணா துங்கா நதிகளின் நடுவில் இருக்கும் ஊர் ராய்ச்சூர். கிருஷ்ணா - கர்னாடகத்தின் கங்கை. அதில் கால் நனைப்பவன் புனிதன் ஆவது உண்மை. இந்த ஊரில் தண்ணீர் மற்றும் செல்வத் துடன் ஞானமும் அதிகமாக நிரம்பி வழிந்தது.*

**யத்ர தாதுமனில: ஸ்வயமேப்ய: ப்ராதுராஸ ஹனுமத்தனுமான் ஹி ।**
*(ச.போ.வி.2.9)*

*சுத்த சாத்விகமான பிராமணர்கள் இங்கு நிறைய வாசம் செய்தனர். நித்ய அக்னிஹோத்ர, வேத சாஸ்திர பாடம், பகவத் உபாசனை ஆகியவை நடந்ததாலேயே, வாசுதேவன் இங்கு ஹனுமன் ரூபத்தில் அவரித்தான். ஹனுமன் பிறந்த ஊர் ஆயிற்று இது. பற்பல ஞானிகள் வசித்த இடம். இதன் அருகிலேயே நவபிருந்தாவனம். ஸ்ரீபத்பனாப தீர்த்தர், ஸ்ரீ நரஹரி தீர்த்தர், ஸ்ரீ வியாசராஜர், ஸ்ரீக்ருஷ்ண த்வைபாயனர், ஸ்ரீ ராகவேந்திரர், ஸ்ரீரகுவர்யர், ஸ்ரீசத்யகாமர், ஸ்ரீ சத்யேஷ்டர், ஸ்ரீ சத்யபூர்ணர் ஆகிய பல யதிவரேண்யர் வசித்த தலம் இது.*

*ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசர், ஸ்ரீஜகன்னாத தாசர், ஸ்ரீமோகனதாசர் ஆகிய பல ஹரிதாசர்களின் பிறந்த இடம். இந்த ராய்ச்சூர் ஒரு கர்மக்ஷேத்திரம். அன்றே இங்கு எப்போதும் தார்மிக சிந்தனை அதிகமாக இருந்த இடம். ஸ்ரீசத்யபோதர் பிறந்த இடமும் இந்த ராய்ச்சூரே. சுற்றிலும் பாறை மலைகளால் சூழப் பட்டு நடுவில் இருந்த கிராமத்தில் :*

**ராஜராஜ விபவோ ரகுனாத ஸ்வாஹ்வய: ஷுபவிசித்ர சரித்ர: ।**
**ரம்யவாஸ ருசிரம் ததஷேஷாம்னாய சாஸ்த்ர சதுர: ஸ விபஸ்சித் ॥**
*(ச.போ.வி. 2.10)*

*சிறந்த பண்டிதரான ஸ்ரீரகுநாதாசார்யர் வசித்து வந்தார். அனைத்து சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தவர். பரம்பரையாக பாட பிரவசனம் நடத்தி வந்த குடும்பம். வேதாந்த புருஷராக ஒரு பேரனைப் பெறவேண்டி விரும்பினார். இதற்காக ஹரிவாயுகளின் நிரந்தர பூஜையினை செய்து வந்தார்.*

*தம் வீட்டிலேயே பல மாணவர்களை வைத்து, அவர்களுக்கு இருக்க இடம், உண்ண உணவு கொடுத்து பாடங்களை சொல்லி வந்தார் ஸ்ரீரகுநாதாசார்யர். இது மட்டுமல்லாமல், பிறருக்கும் எப்போதும் பாடம் சொல்லிக் கொடுத்தவாறு, ஸ்ரீமதானந்த தீர்த்தருக்கு தொடர்ச்சியான சேவையை செய்து வந்தார். இவரது கோத்திரம் - அத்ரி. தத்தாத்ரேய ஸ்ரீஹரியின் வம்சம். அகோபல நரசிம்மரே குலதெய்வம். யஜு:சாகா வழியினர். அன்னதானத்துடன், ஞான தானமும் இவரது வீட்டில் தொடர்ச்சியாக நடைபெற்று வந்தது. அன்றைய நிலைக்கு இது ஒரு மிகப் பெரிய தவம் என்று சொல்லலாம்.*

**பண்டித ப்ரவர சங்க ஸமீட்யோ வித்ததக்ர்ய இதி ஷுத்த சமக்ஞ:॥**
*(ச.போ.வி. 2.13)*

*பண்டித ரகுநாதாசார்யருக்கு சிறந்தவனான ஒரு மகன் இருந்தார். ஹரிவாயுகளின் அருளால், ஹரியாச்சார்யரும் தந்தையைப் போலவே சிறந்த பண்டிதராக இருந்தார்.*

**அஸ்தி தஸ்ய தனுபூரிஹ ஹர்யாசார்ய இத்யபிஹிதோ ஜனதாபி: ।**
**ஷஸ்தஹ்ருன்மதி மனோஜவஸோலம் சர்வசப்ய ஜனமானிதசர்ய: ॥**
*(ச.போ.வி. 2.15)*

*ஹரியாசார்யர் கர்மங்களை சிறப்பாக பின்பற்றுபவர். அனைவருக்கும் மிகவும் வேண்டியவராக இருந்தார். தந்தையைப் போலவே கருணை, தைரியம், வாக்யார்த்த, கிரந்தங்களின் பாடம் ப்ரவசனங்களில் எப்போதும் திளைத்திருந்தார். தினமும் புராணத்தை சொல்லிக் கொண்டிருந்தார்.*

**பாரதே மஹதி பாகவதே ச வியாசசூனு சத்ருஷோ புதமான்ய: ।**
**ப்ராதராசரித மஜ்ஜனகர்மா மைத்ரமந்த்ர முகசர்வ சுமந்த்ரான் ॥**
**சம்ப்ரஜ்ன்ய க்ருதமாதவபூஜ: தன்மதே கதித சாஸ்திரபுராண:॥**
*(ச.போ.வி. 2.17)*

விடியலில் ஸ்னானம் செய்து, 72 மகா மந்திரங்களை ஜெபித்து, ஸ்ரீஹரியின் பூஜையை விதிப்படி செய்து வந்தார். மகாபாரத, பாகவத பாட பிரவசங்களை செய்யும் விஷயத்தில் ஸ்ரீவேதவியாசரின் மகன் சுகாசார்யரைப் போலவே இருந்தார். மனதில் அதிக செல்வம் இருந்தது. அதைவிட மனதில் இன்னும் அதிகம் இருந்தது. தினந்தோறும் பற்பல பிராமணர்களுக்கு அன்னதானம் நடைபெற்று வந்தது. இப்படியாக, ஹரியாசார்யர், தமது குலதெய்வமான அகோபில நரசிம்மருக்கு மிகச்சிறப்புடன் ஆராதனை செய்துவந்தார்.

★★★

## ஸ்ரீசத்யபோதரின் அவதாரம்

ஸ்ரீஹரியாசாருக்கு முதல் மனைவி மூலமாக நான்கு வாரிசுகள் இருந்தனர். இரண்டாவது மனைவி அரளம்மா. பரம சாத்வி. ஸ்ரீசத்யபோதர் போன்ற தேவதையை பெறுவதற்காக பிறவி எடுத்த விரத சிரோமணி. சிறந்த ஒரு மகனுக்காக ஹரியாசார்யரும், அரளம்மாவும் பற்பல பூஜைகள், சாஸ்திர ஸ்ரவணங்களை கேட்டு வந்தனர். அனைத்து தம்பதிகளின் வாழ்க்கையில் அவர்களுக்கு கிடைக்கும் பலன்கள் மூன்று.

'வித்யா கர்மசுதா இதி' என்று பாரதத்தில் சொல்கின்றனர். கற்ற கல்வி, செய்த நற்செயல்கள், பெற்ற மகன் இவையே வாழ்க்கையின் பலன்கள். ஆகவே இவற்றைப் பெறுவதற்கு, அனைத்து தார்மிக கிருஹஸ்தர்களும் முயல்வர். ஹரியாச்சார், அரளம்மாவிற்கு வாயுதேவரின் விசேஷ சன்னிதானம் உள்ள, ஸ்ரீமூலராம திக்விஜய ராம வேதவியாசரை தொட்டு பூஜிக்கும்படியான பாக்கியத்தைப் பெற்ற மகன் வேண்டுமென்று விருப்பம் இருந்தது. ஒரு ஆண்டு தொடர்ந்து செய்த சேவையினால், அரளம்மா கர்ப்பிணியானார். ஹரிவாயு குருகளின் சேவை என்றும் வீணாகாது.

நோ பவேத் ஹரிகுருத்விஜ பந்த்வா ராதனாதரக்ருதா நனு மோகா॥
*(ச.போ.வி.2.23)*

ந தேவ தோஷணம் வ்ருத்தா ॥ -- தாத்பர்ய நிர்ணயம்.

சாஸ்திரம் சொல்லிய விதியை பின்பற்றுதல், நரசிம்மனின் உபாசனை, உற்றார் உறவினர்களை அரவணைத்தல், பிராமண

ஆராதனை ஆகியவை என்றும் வீண் ஆவதில்லை. நற்பலன் களையே தரக்கூடியவை. தேவதா புருஷரைப் பெறப்போகும் அரளம்மா முகத்தில் விசேஷ காந்தி நிலவியது. ஹரிவம்சம் முதலான புராணங்களை எப்போதும் கேட்கும் விருப்பம். ஒரு நல்ல நாளில், அரளம்மா ஒரு அழகான சுந்தர தேவதா புருஷக்குழந்தைக்கு தாயானார். அது 1710 விரோதி ஆண்டு.

‘பௌருஷாகில சுலக்ஷண பாத்ரம் ப்ராசவிஷ்ட சமயேசதி புத்ரம்’. பிறந்தபோதே குழந்தையின் முகத்தில் ஒரு அசாதாரண தேஜஸ் காணப்பட்டது. ஹரியாசார்யர் குழந்தையின் முகத்தைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்து, ஜாதகர்ம முதலான அனைத்து சம்ஸ்கார்யங்களையும் செய்தார். பற்பல தானங்களை செய்தார். வஸ்திரங்களைக் கொடுத்தார். அவரது தவம், புகழ் இவை இரண் டையும் தவிர மற்ற அனைத்தையும் தானம் செய்தார். இவை இரண் டையும் யாருக்கும் கொடுக்க முடியாது என்கிறார் ஸ்ரீவிஜயதாசர்.

**ஷப்ததத்தத்வித வேத்ய ச இத்தம் த்வாதஷேஹனி பிதா ஹரிசூரி: ।**
**ஆத்மசம்பவ முதாரமுதாட்யே ராமமாதத மஹானத நாம்னா ॥**

*(ச.போ.வி.2.39)*

மகாபண்டிதரான ஹரியாச்சார்யர், குழந்தை பிறந்த 11வது நாள் குழந்தைக்கு ஸ்ரீராமா என்று பெயரிட்டார். வீட்டில் மங்கல இசை, வேதகோஷங்கள் முழங்கின. பற்பல பிராமணர்கள் எதிரில் நாம சம்ஸ்காரம் நடந்தது. ஸ்ரீராமனை பூஜிக்கப்போகிறவன் என்னும் குறியீடு அன்றே தெரிந்தது. சஜ்ஜனர்களின் மேம்பாட்டிற்காக ராய்ச்சூர் ராமாசார்யருக்கு, ஸ்ரீசத்யபோதர் அவதரித்தார். குழந்தை ஸ்ரீராமன் மிகவும் அழகாக இருந்தான். பண்டிதர்களுக்கு முஷ்டி நிறைய பணம் கொடுப்பேன் என்று சொல்வதைப் போல, முஷ்டியை மூடி வைத்திருந்தது குழந்தை.

ஒளியுடைய முகம், தங்கம் போல் ஜொலிக்கும் மேனி, சுருள் முடி, எப்போதும் புன்னகை என குழந்தை மிகவும் அழகாக இருந்தது. கண்டவர்கள் அனைவருக்கும் குழந்தையை தூக்கிக் கொஞ்சவேண்டும் என்று ஆசை இருந்தது. குழந்தை சிறிது வளர்ந்து, தன் பிஞ்சு கால்களால் ஓடியாடத் துவங்கியது. மழலைப் பேச்சும் துவங்கியது.

**பூஷணைரிவ சபூரிசுவர்ணை: பாஷண்யைரத பபூவ சுவர்ணை:॥**
*(ச.போ.வி. 2.49)*

*குழந்தைக்கு சௌல, அக்ஷராப்யாஸம் ஆகியவை நடந்தன. கல்வி போதிக்கப்பட்டது. பூஜை, தீர்த்தம், முத்திரை என இவற்றின் மேல் அந்த வயதிலேயே குழந்தைக்கு ஆர்வம் இருந்தது. ஏழு வயதில் உபநயனம் செய்தனர். வேத அத்யயன, காவிய, ந்யாய, வியாகரண அத்யயன ஆகியவை தந்தையான ஹரியாசார்யரே சொல்லிக் கொடுக்கத் துவங்கினார்.*

**உபநீத மாஷுவிததே சுமதிம் சமிதீத மாததனயே நிகமம் ।**
**சஹிதாங்க ஷட்க முதிதாதரத: சஹிதான் க்ஷணாத் ஜக்ருஹ ஔஷசத:॥**
*(கு.வம்.க)*

*மகனுக்கு அனைத்து நியமங்களையும் போதித்தார். வேதாங்கங்களை நன்றாக சொல்லிக் கொடுத்தார். யஜுர்வேதத்தை முழுக்க கற்பித்தார். காவ்ய, கௌமுதி, தர்க்கங்கள் ஆகியவற்றை கற்றுத் தரும்போது மகன் ராமாசார்யரின் முகத்தைக் கண்டு ஹரியாசார்யர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். இத்தகைய சிறந்த மகனுக்கு தகுதியுள்ள ஒரு குருவை தேடவேண்டும். அனைத்து சாஸ்திரங்களிலும் பாடம் சொல்லும் பண்டித சார்வபௌமரை தேடவேண்டும் என்று இரவும் பகலும் தவித்தார்.*

*திருப்பதி ஸ்ரீனிவாசனின் யாத்திரை செய்துவர, தம்பதிகள் மகன் ராமாசார்யருடன் புறப்பட்டனர். பல நாட்கள் அங்கிருந்து சேவை செய்து, பின் ஊருக்குத் திரும்பினர். ஊருக்குப் பக்கத்திலேயே ஸ்ரீசத்யப்ரியர் தங்கியிருக்கிறார் என்ற செய்தி கிடைத்தது. ஹரியாசார்யருக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. வெகு நாட்களாக குருகளின் தரிசனம், தேவ தரிசனம், முத்ரா தாரணம், மகனுக்கு விசேஷ உபதேசம் செய்யவேண்டுமென்று நினைத்திருந்தார். அதற்காக நேராக ஸ்ரீசத்யப்ரியரின் சன்னிதானத்திற்கு விரைந்தார்.*

★★★

## ஸ்ரீசத்யப்ரியருக்கு சமர்ப்பணம்

*ஸ்ரீசத்யப்ரியர், ஒரு தகுதியுள்ள சிஷ்யனுக்காக காத்திருந்தார். அதற்காக அவரும் ஸ்ரீனிவாசனின் தரிசனத்தை முடித்துக் கொண்டு, அங்கு வந்திருந்தார்.*

**ஸ்வயம் கிஞ்சின்மாஹா குலமமலஷீலம் குஷலினம்**
**சுகினாவித்வாசௌ வடுமகிலமந்த்ரேஷ்டதி படும் ।**
**விதாயாதீகார ப்ரவரமசிராத்புக்த விஷயம்**
**பரிவ்ராடைஷ்வர்யம் கமயிதுமபூச்சாது க்ருதஹ்ருத் ॥** *(ச.போ.வி. 1.64)*

*நல்ல வம்சத்தில் பிறந்த, சதாசாரங்களைப் பின்பற்றும், நற்குணங்களைக் கொண்ட, பிரம்மசர்யத்தை சரியாக பின்பற்றும், அனைத்து சாஸ்திரங்களைக் கற்று பண்டிதனான, சமகாலத்திய, ஸ்ரீமடத்தின் மூல பரம்பரையின் சிறப்புகளை நன்கு காப்பாற்றக் கூடிய, ஸ்ரீமடத்தில் பெருமைகளை நன்றாக பரப்பக்கூடிய ஒரு தகுதியுடைய சிஷ்யருக்காக ஸ்ரீசத்யப்ரியர் காத்திருந்தார். ஸ்ரீசத்யப்ரியர் திருப்பதியில் இருந்தபோது அங்கு ஒரு பிராமணர் வந்து, தான் கிருஷ்ணா நதிக்கரையிலிருந்து வருவதாக அறிமுகம் செய்து கொண்டார்.*

*'ஸ்வாமிகளே, நீங்கள் உங்கள் உத்தராதிகரியாக ஒரு வடுவினை (பிரம்மசாரி) தேடிக் கொண்டிருக்கிறீர்கள். சில நாட்களிலேயே ஸ்ரீஹரியின் விருப்பப்படி ஒரு வடு உங்களிடம் வருவான். நீங்கள் தேடும் அனைத்து தகுதிகளையும் உடையவன் அவனே' என்றார்.*

**தாந்த: ஷாந்த: காந்தமூர்த்தி ஸ்திதிக்ஷு:**
**தார்மிம் பத்யாமேவ சம்சேவமான: ।**
**சாதுஸ்ரேஷ்டோ ராமனாமாகுதுனாசௌ**
**வித்யாப்யாஸே வித்யதே வர்ணிவர்ய:॥** *(ச.போ.வி.2.60)*

*'பொறுமை, அமைதி, தேஜஸ், பணிவு, கருணை ஆகிய வற்றைக் கொண்ட ராமன் என்ற பிரம்மசாரி வருவான். அவனின் லட்சணங்களைக் கண்டால், அவன் பரமஹம்ஸனாக இந்த ஹம்ஸபீடத்தை, உன்னத உத்தராதி மடத்தை அலங்கரிப்பதற்கு தகுதியுடையவன். நீங்கள் கவலைப்பட வேண்டாம்' - என்று ஸ்ரீசத்யப்ரியரிடம் சொல்லி, அந்த பிராமணர் மறைந்தார். அப்படி ஒரு சிறுவன் கிடைத்தால், தாமே அவனுக்கு பாடம் சொல்லி, சிறந்த*

*பண்டிதனாகச் செய்து, வைராக்கியம், தெய்வபக்தி, சதாசாரங்களை கற்றுத் தரவேண்டும் என்று நினைத்தார்.*

*அன்று கீதா பாஷ்யம் பாடம் மங்களம் செய்யும் வேளை. சரியாக அதே நேரத்தில், ஹரியாச்சார்யர், தமது மகன் ராமாசார் யருடன் இன்னும் பல பிராமணர்களுடன் குதிரை மேல் பயணித்து, ஸ்ரீசத்யப்ரியரிடம் வந்து வணங்கினார். அவ்வளவு மக்களிடையே இந்த வடுவின் முகம் ஒளிகொண்டிருந்தது. அழகு, தேஜஸ், காந்தி ஆகியவற்றைக் கண்டு ஸ்ரீகளவர் மிகவும் மகிழ்ந்தார். தன் வேண்டுதல்களை ஸ்ரீனிவாசன் கேட்டு அவற்றை நிறைவேற்றினார் என்று நினைத்தார். கிருஷ்ணா நதிக்கரை பிராமணரின் வாக்கினை நினைவு கூர்ந்தார்.*

ஆதத்த தத்பாரிதரம் குரோ: ஸ்வம் க்ருத்வா சுதம்
த்வாப்தமஹாமனும் ச ।
நேத்ராலிபாத்ரீக்ருத ராமவேதவியாஸாம்புஜம் சம்ப்ரயதம் ச தேனே ॥

த்வித்ரேஷு வாரேஷு கதேஷு ஹர்யா
சார்யம் வினீதம் சஹ சூனுனா ஸ்வம் ।
ஏகாந்த ஆஹூய புரம் யியாசும்
ஜாகர்த்தி ச ஸ்மேதி ஜகத்குருஸ்தம் ॥ *(ச.போ.வி. 3.21-22)*

*சிறுவனுக்கு முத்ராதாரணை செய்யும்போது திரும்பத் திரும்ப அவன் முகத்தை பார்த்தார். பற்பல மந்திர உபதேசங்களை செய்தார். கிருஷ்ணா நதிக்கரை பிராமணர் சொன்ன வாக்கு பலித்ததென்று நினைத்து மகிழ்ந்தார். ஊருக்குப் போவதற்காக, மந்திராக்ஷதை பெறப் போன ஹரியாசார்யருக்கு, இன்னும் சில நாட்கள் இருங்கள் என்று சொல்லி, திருப்பி அனுப்பினார். ஹரியாசார்யர் தமது மகன் ராமாசார்யருடன் மடத்திலேயே பல நாட்கள் இருந்துவிட்டார். சிறுவன் பலரையும் ஈர்த்தான். பல ஜோதிடர்கள் சிறுவனின் லட்சணங்களைக் கண்டு ஹரியாசார்யரிடம் கூறினர்.*

ஆசார்ய சத்யப்ரியபூஜ்ய பாதா:
சம்ஸ்தாப்ய புத்ரம் பரிபால்யதே தே ।
அத்யாப்ய ஷாஸ்த்ராணி விவாஹ்ய பாடம்
தாஸ்யந்தி சம்ஸ்தானமதோ மஹேய: ॥ *(ச.போ.வி.3.7)*

*'ஆசார்யரே, ஸ்ரீசத்யப்ரிய ஸ்வாமிகள், உங்கள் மகனான ராமாசார்யரை விடப்போவதில்லை. தம் அருகிலேயே வைத்துக்*

கொண்டு, பாதுகாத்து, அனைத்து சாஸ்திரங்களையும் தாமே சொல்லிக் கொடுத்து, சிறந்த பண்டிதராக மாற்றி, திருமணம் செய்வித்து, இந்த மகா சம்ஸ்தானத்தை அவனிடம் ஒப்படைப்பார். உங்கள் மகனுக்கு உத்தம சன்யாச யோகம் இருக்கிறது' என்று அனைவரும் கூறினர்.

ஹரியாச்சார் மிகவும் மகிழ்ந்தார். ஆனால் மகன் தன்னை விட்டு வைராக்ய வழியில் செல்வான் என்பதை நினைத்து வருந்தினார். ஒரு நாள், ஸ்ரீசத்யப்ரியர் தனிமையில் ஹரியாச்சார் மற்றும் அவரது மகன் ராமாச்சார்யரை அழைத்து, ஹரிகுருகளின் ஆணையையும், தமது ஆசையையும் தெரிவித்தார்.

'சூரே ஹரே கல்பசிசப்தசூனு:' - 'ஹரியாச்சார்யரே, உங்களுக்கு ஏழு வாரிசுகள் உள்ளனர். இந்த மகன் ராமாச்சார்யரை மட்டும் நமக்குக் கொடுங்கள். இவனைப் பற்றி நீங்கள் எந்த கவலையையும் படவேண்டாம். அவனை நாம் நன்றாக பாதுகாத்து, அனைத்து சாஸ்திர உபதேசங்களையும் செய்து, சிறந்த வித்வானாக மாற்றி, உலகில் சிறந்து வணங்கப்படுபவனாகவும் மாற்றுகிறோம்' என்று கூறினார்.

இதைக் கேட்ட ஹரியாச்சார் என்ன பேசுவதென்று தெரியாமல் நின்றார். மகனின் முகத்தைப் பார்த்தவாறு அமர்ந்துவிட்டார் (தோகான நாம்போருஹ மீக்ஷமாண:). குருவிற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.

பிறகு ராமாச்சார்யனே கூறினான். 'தந்தையே, நான் ஸ்ரீமடத்திலேயே இருக்கிறேன். ஸ்ரீமதாசார்யரின் சர்வமூலம், ஸ்ரீடீகாராயரின் நியாயசுதாதி கிரந்தங்களின் அத்யயனம் செய்ய வேண்டும். ஸ்ரீகளவரின் சேவையே என் வாழ்க்கையின் பாக்கியம். என் மேம்பாடு இதிலிருந்து ஆகும். நீங்கள் கவலைப் படாமல் போய் வாருங்கள்' என்றார்.

'த்வம் நிர்விசாரோ நகரம் ப்ரயாஹிமஹா ப்ரமோதேன நவாம் நமஸ்வ'. 'நீங்கள், தாய் மற்றும் நம் குடும்பத்தினரை அழைத்துச் செல்லுங்கள். நான் வரவில்லை. இங்கேயே இருக்கிறேன்' என்றார். அதன்படி, ஹரியாச்சார்யரும் ஸ்ரீகளவரின் அனுமதி பெற்று, மகனுக்கு இதயபூர்வமான ஆசியை வழங்கி ஊருக்குப் புறப்பட்டார்.

*ஸ்ரீசத்யப்ரியர், ஸ்ரீமடத்தில் வளர்ந்து வந்த ராமாச்சார்யரின் சேவைக்காக பல பிராமணர்களை நியமித்தார். பால், தயிர், வெண்ணெய், நெய் ஆகியவற்றை ஊட்டி சிறுவனை வளர்த்தார். 'சம்வர்த்தயாமாஸ ஹிஸார்ப்பிஷ்ட்யே: சஹ' 3.28. முதலில் 'பிரமாண பத்ததி' என்னும் டீகாராயரின் பாடத்தை துவக்கினார். இதுவே சர்வமூலத்திற்கான முதல் படி. இதை படித்தபிறகு மற்ற கிரந்தங்களை படிக்கும் அதிகாரம் வருகிறது.*

**ஸோSத்யுச்ச சம்பூர்ணமனிஷ சாஸ்த்ர**
**ப்ராஸாத சோபான சமானமார்ய: ।**
**அத்யாபிபத் கிரந்தமயும் ப்ரமாண**
**பத்தத்யபிக்யம் ப்ரதமே விஷுத்தம் ॥** *(ச.போ.வி.3.29)*

*புத்தி தெளிவடைவது இந்த பிரமாண பத்ததியினால். சுத்த சாஸ்திரம் அறிவது இந்த பிரமாண பத்ததியினால். தெளிவான ஞானத்திற்காக சித்தாந்த கௌமுதி கிரந்தங்களை துவக்கினார். 'சித்தாந்த கௌமுதிம் சாப்தே வேதாந்தே பத்ததிம் குரோ:' வியாகரண, வேதாந்த பாடங்களை துவக்கினார்.*

*தெளிவான அறிவுகூர்மை, எதையும் உடனே புரிந்துகொள்ளும் சக்தி, எப்போதும் படிக்கும் ஆர்வம் ஆகியவற்றைக் கண்டு ஸ்ரீகளவருக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. ராமாச்சாரியருக்கு நல்ல ஆடை, சால்வை, மடிகளைக் கொடுத்தார். திருப்பதியிலிருந்து சஞ்சாரம் செய்து வந்து குருமிடகல்லில் சில நாட்கள் தங்கியிருந்தார். அங்கிருந்து திக்விஜயத்திற்காக கிழக்கு நோக்கி நகர்ந்தார்.*

*ஹரியாச்சார் இன்னொரு முறை வந்து மகனைக் கண்டு, அவன் வளர்ச்சியைக் கண்டு மகிழ்ந்து, ஸ்ரீகளவர் அவன் மேல் வைத்திருக்கும் அன்பைக் கண்டு வியந்தார். மகன் மீது வைத்திருக்கும் அன்பைக் கண்ட ஸ்ரீகளவர், ஹரியாச்சார்யரைக் கண்டு இவ்வாறு கூறினார். 'ஆசார்யரே, நாம் கிழக்கு நோக்கி செல்லும் திக்விஜயத்தை முடித்துக் கொண்டு வரும்வரையில், நீங்கள் ராமாச்சார்யருடன் இருங்கள். பிறகு அடுத்த பயணத்திற்கு நாம் அவனை அழைத்துப் போகிறோம்' என்றார். ஹரியாச்சார்யரும் அதன்படியே சில நாட்கள் மகனுடன் இருந்தார்.*

*சில நாட்களிலேயே, ஸ்ரீசத்யப்ரியர் பல ராஜர்களினால் பூஜிக்கப்பட்டு, தம் மகிமைகளைக் காட்டி, அனைத்து பிரதிவாதிகளையும் வென்று, பெரும்புகழ் பெற்று, மறுபடி ராய்ச்சூருக்கு வந்தார்.*

**'சம்பாத்ய கீர்த்திம் பஹு சம்பதம் சாகாச்சிராதேவ ச ராயிசூரம்'.**
*- (ச.போ.வி.3-39)*

*மறுபடி ராமாச்சார்யருக்கு பாட பிரவசங்கள் துவங்கின. அங்கங்கு பயணித்து, ஸ்ரீசத்யப்ரியர், சாவணூருக்கு வந்தார். சாலிக்ராமத்திற்கு அபிஷேகம் செய்த பாலைக் குடித்தே வளர்ந்த ராமாச்சர்யர், மிகவும் புத்திசாலியாக வளர்ந்தார். குருகளின் அருளினால் சில ஆண்டுகளிலேயே அபாரமான பாண்டித்யத்தைப் பெற்றார்.*

**சம்யக் லக்ஷணசம்பன்ன: யத்தத்யாத் சுப்ரசன்னதீ: ।**
**சிஷ்யாய சத்யம்பவதி தத்சர்வம் நாத்ர சம்ஷய: ॥**

*என்று சாஸ்திரம் சொல்வதைப் போல, ஸ்ரீசத்யப்ரியரின் அருளினால் ராய்ச்சூர் ராமாச்சார்யர், மகாவித்வாம்சர் ஆனார். குருவின் அருளைப் பெற்ற புனிதரானார். ஸ்ரீசத்யப்ரியர் வெகு காலம், சாவணூரில் வசித்தார். அங்கேயே ராமாச்சார்யருக்கு நியாயசுதா மங்களத்தை வெகு சிறப்பாக செய்து முடித்தார்.*

*சாவணூர், நவாப்பின் தலைநகரமாக இருந்தது. பங்காபுரம் வெகு நாட்களுக்கு முன்னரிலிருந்தே நவாப்பின் தலைநகரமாக இருந்தது. அப்துல்ரயூப்கான் தனது அரசிற்கு புதிய தலைநகரத்தை நிர்மாணிக்க தீர்மானித்தார். அதற்காக இங்கே மூன்று ஆண்டுகளாக பல கட்டிடங்களைக் கட்டி, பின் ஒரு ஸ்ராவண மாதத்தில் மறுபடி சாவணூருக்கு வந்தார்.*

*'ஸ்வர்ணாபிதானம் நகரம் ததாப' ஆகவே இது சிரவணூர், சவணூர், சுவர்ணபுர என்றெல்லாம் பெயர் பெற்றது. மிகப்பெரிய வியாபார கேந்திரமாக சாவணூர் இருந்தது. இங்கு பல பிராமண குடும்பங்களும் இருந்தன. அதில் பலர் செல்வந்தர்களாகவும் இருந்தனர்.*

★★★

# ராமாச்சார்யரின் திருமணம்

*சாஸ்திரங்களில் சிறந்து விளங்கிய ராமாச்சார்யரை, நற்குலத்தில் பிறந்தவளான ஒரு பெண்ணிற்கு திருமணம் செய்து வைக்க தீர்மானித்தார். ராமாசார்யரின் அழகு, பாண்டித்யம், அறிவு, சதாசாரம் ஆகியவற்றைக் கண்டு, சாவணூரின் செல்வந்த பிராமணர் ஒருவர் தம் மகளான கிரிஜாவை அவருக்கு திருமணம் செய்து கொடுக்க விரும்பினார்.*

**த்ருஷ்ட்வாகஸ்சன தன்யாக்ரோ த்விஜ: ஸ்வாம் கன்யகாம் முதா ।**
**தித்ஸுஸ்யை குரும் ப்ராஹ ஸ்யாம் தாதாஸ்யை சுதாமிதி ॥**

*ஸ்ரீகளவர் அவரின் குலம், பணிவு, சதாசாரம் ஆகியவற்றைக் கண்டார். அந்தப் பெண்ணிற்கு தம் சம்மதத்தைச் சொல்லி மந்திராக்ஷதையைக் கொடுத்து ஆசிர்வதித்தார்.*

*நல்லதொரு முகூர்த்தத்தில் ஸ்ரீராமாசார்யர், கிரிஜாவை திருமணம் செய்தார். செல்வந்தனான அந்த கிருஹஸ்தன், மாப்பிள்ளைக்கு நல்ல முறையில் கன்யாதானம் செய்து கொடுத்து நல்ல வஸ்திரம், பற்பல ஆபரணங்கள், பாத்திரங்கள், வீடு என பலவற்றைக் கொடுத்து திருமணம் செய்து கொடுத்தார். நான்கைந்து நாட்களுக்கு திருமணம் நடைபெற்றது. தம்பதிகளின் கிருஹப் பிரவேசம், ஊர்வலம் ஒரு அரசரைப் போல நடைபெற்றது. ஸ்ரீகளவர் மாடிமேல் பாடம் சொல்லியவாறு அமர்ந்திருந்தார். அங்கிருந்தே தன் பிரியமான சிஷ்யனின் திருமண ஊர்வலத்தைக் கண்டு மகிழ்ந்தார். வந்து வணங்கியபோது ஆசியும் வழங்கினார்.*

**கிருஹப்ரவேஷோ த்ஸவார்த்தம் மாந்தம் த்ருஷ்ட்வா யதீஷ்வர: ।**
**வந்தாரு யாஷீர்பிரமு மானந்தயத்ருத ப்ரிய: ॥** *(கு.வ.2.18)*

**ஆஷீர்பிராஷா ஜயதாபிராயுர் தாத்ரிபிரானந்தய தார்யவர்ய: ।**
*(ச.போ.வி.3.58)*

*ஸ்ரீபாதங்களவர் தனது ப்ரியமான சிஷ்யனுக்கு ஆசியும், அறிவுரைகளையும் வழங்கினார். பின் சில நாட்கள் சாவணூரில் இருந்துவிட்டு, அங்கிருந்து உடுப்பிக்குச் சென்று ஸ்ரீகிருஷ்ணன் மற்றும் ஸ்ரீமதாசார்யரை தரிசனம் செய்ய விரும்பினார். ஷிவமொக்கா, தீர்த்தஹல்லி வழியாக உடுப்பிக்கு வந்தார்.*

**அத சம்யமிராட் ச சர்வசாத்வ பதிபூஜாகர சம்யமிவுஜேத ।**
*(ச.போ.வி.3.42)*

**தத்ரதேரஷ்ட மடபை: பூஜிதோ குருரத்ரதான் ।**
**ஶ்ரீகிருஷ்ணமப்யலம் த்ருவை: பூஜயாமாஸ துஷ்டிதீ: ॥** *(கு.வ.2.32)*

**லோகேஷ இந்த்ராதிபிரஷ்ட பிர்திஷா**
**த்ஷ்யைர்தாதோ யதிபிஸ்ஸ தத்ரகை: ।**
**சம்பூஜிதஸ்யான் சுகயன் சபாஜனை**
**ராயாத் புன:ஸ்வர்ணபுரம் சபாஜனை: ॥** *(ச.போ.வி.3.67)*

*பிரம்மதேவரை அஷ்டதிக்பாலகர்கள் கௌரவிப்பது போல, குருசார்வபௌமரான ஶ்ரீசத்யப்ரியரை அனைத்து அஷ்ட மடாதீசர்களும் சேர்ந்து வரவேற்றனர். சிறந்த ஊர்வலத்தில் அவரை அழைத்து, மடத்திற்கு வந்தனர். ஶ்ரீகிருஷ்ணனின் எதிரில் வெகு சிறப்புடன் மூலராம பூஜை நடைபெற்றது. ஶ்ரீகளவர், ஶ்ரீகிருஷ் ணனுக்கு பற்பல ஆபரணங்கள், அலங்காரங்கள், பட்டு ஆடை களை அர்ப்பித்தார். ஶ்ரீராமாசார்யரிடமிருந்து, ஶ்ரீகிருஷ்ணனின் எதிரில், அனைத்து மடாதீசர்கள் முன்னிலையில் சுதாதி கிரங்கங்களின் அனுவாதத்தை செய்வித்தார்.*

*ராமாச்சார்யருக்கு, ஶ்ரீகிருஷ்ணனின், ஶ்ரீமதாசார்யரின் பரிபூர்ண அருள் கிடைக்கட்டும், ஶ்ரீஹம்ஸபீடத்தின் உத்தராதிகாரியாகி சிறப்புடன் ஶ்ரீமூலராமனின் சேவை செய்யட்டும் என்றும் வேண்டினார்.*

**கந்தர்ப்ப கோடி லாவண்ய நந்திதீர்த்த முனிப்ரிய ।**
**யாதவானந்த ரூபத்வம் இந்திராரமணாவ: ॥** *(கு.வ.2.22)*

*அஷ்ட மடாதீசர்களையும் தங்கம், வெள்ளி மற்றும் ஆடை களினால் மரியாதை செலுத்தி, பற்பல பிராமணர்களுக்கு தகுதிக்கேற்ப சம்பாவனை அளித்து, மறுபடி சாவணூருக்கு திரும் பினார். விரக்தரானாலும், ராமாச்சார்யர் திருமண வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தார். ஶ்ரீகளவர், ராமாச்சார்யருக்கு, தசோபநிஷத்களை இன்னொரு முறை பாடம் சொல்லி, கொல்லாபுர மகாலட்சுமி சன்னிதியில் அதை மங்களம் செய்வித்தார். ஆயிரக்கணக்கான தம்பதிகளுக்கு வஸ்திரங்களை தானம் அளித்தார். அங்கிருந்து கர்ஹாடக்கு வந்து சாஹு மகாராஜரின் வேண்டுகோளுக்கு இணங்க, சாதாரா'க்கு வந்தார். ராஜசபையில் அனைத்து மந்திரிகள், பண்டிதர்*

களுக்கு நடுவில், சத் சித்தாந்தத்தின் சிறப்புகளை விவரித்தார். மரியாதை பெற்றார். முன்னர் பஞ்சவடி க்ஷேத்திரத்திற்கு வந்தார்.

க்வசன சாதிதமத்வ மஹாமத: க்வசன தூஷிததுஷ்ட மதாந்தரம் ।
க்வசன நிர்ஜிதஜைமினி தந்த்ரவித் க்வசன கண்டித தார்கிக ஆஸ ஸ: ॥
*(ச.போ.வி. 4.13)*

மகாராஷ்ட்ரா, ஆந்திராவில் பயணம் செய்து, பல சபைகளில் மத்வ மதத்தின் சிறப்புகளை நிரூபித்தார். சில இடங்களில் பிற துர்மதங்களை கண்டித்தார். சில இடங்களில் நடைபெற்ற வாதங்களில் வென்றார்.

ஸ தஷோபநிஷத் பாஷ்ய வியாகர்தா ப்ரதமம் புரம் ।
கரவீராக்ய மாப்த்வா தத்ஸ்திதாம் ஸ்ரீயமபூஜயத் ॥ *(கு.வ.2.26)*

தைத்திரிய உபநிஷத்திற்கு, பத்து உபநிஷத்களுக்கும், விரிவான உரையை எழுதி மகாலட்சுமிக்கு அர்ப்பித்தார். ஒவ்வொரு சபைகளிலும் சிஷ்யரான ராமாச்சார்யர் மூலமாக வாதங்களை செய்வித்தார். அப்போதே ராய்ச்சூர் ராமாச்சார்யரின் புகழ் அனைத்து இடங்களிலும் பரவிற்று. இந்த வட இந்திய திக்விஜயத்தில் அனைத்து ராஜர்களும் மிகுந்த பக்தியுடன் யானை, ஒட்டகம், குதிரைகளை, சத்ர சாமரங்களை, விலைமதிப்பற்ற ஆபரணங்களை, தொட்டிலுக்காக தங்க மாலைகளை, மண்டபங்களை அர்ப்பித்தனர். பண்டரிபுரத்தில் ஸ்ரீவேதநிதிகளின் சன்னிதியில் பல நாட்கள் தங்கியிருந்து புண்டலிகவரத விட்டலனை மகிழ்வித்தார்.

புண்டரீகாப்ஜ மார்த்தாண்ட புண்டரீகாம்பகாவ மாம் ।
புண்டரீகாந்த ராரீணாம் புண்டரீகாந்த விட்டலா ॥ *(கு.வ.2.33)*

★★★

## ஸ்ரீசத்யவிஜயரின் பிருந்தாவன பிரவேசம்

ஸ்ரீசத்யப்ரியர் கத்வால் பகுதியில் இருந்தபோது, குருவான ஸ்ரீசத்யவிஜயர், ஆரணியில் பிருந்தாவன பிரவேசம் செய்தார். ஆரணியின் சுபேதார் வெங்கடபதிராஜா, ஒரு வைஷ்ணவ பிராமணர். ஸ்ரீமடத்திற்கு தங்கத்தினாலான ஒரு பெரிய கங்காளத்தை அர்ப்பித்திருந்தார். சம்ஸ்தானத்தின் அனைத்து பொருட்களையும், ஸ்ரீசத்யவிஜயர் வெங்கடபதிராஜரிடம் ஒப்படைத்து, பின்னர்

*ஶ்ரீசத்யப்ரியர் வரும்போது அனைத்தையும் அவரிடம் ஒப்படைத்து விடுமாறு சொல்லி, தாம் பிருந்தாவன பிரவேசம் செய்தார்.*

*ஶ்ரீசத்யவிஜயருக்கு ஶ்ரீசத்யப்ரியர் மேல் அளவுகடந்த அன்பு இருந்தது. 'பதமிதம் பரிபாலமிதும் ப்ரபு: விஜதவாதிவரோ விதுஷாம்வர:'. அவரே இந்த திவ்ய பவ்ய பீடத்திற்கு மிகவும் தகுதிபெற்றவர். அவரது பாண்டித்யம் அசாத்தியமானது. அவருக்கு அனைத்தையும் ஒப்படைக்குமாறு ஆணையிட்டார். சைத்ர சுத்த ஏகாதசியன்று பிருந்தாவன பிரவேசம் செய்யும் முன்னர், ந பூதோ ந பவிஷ்யதியாகி ஶ்ரீராமதேவரின் உற்சவம், பிராமணரின் சமாராதனை, அன்னதானம், தங்க வெள்ளிகளின் தானம் ஆகியவற்றை அளித்தார். காஞ்சி, மதுரை, ஶ்ரீரங்கம், அருணாசலம் முதலான தென்னிந்திய அனைத்து பண்டிதர்களையும் அழைத்தார்.*

**ஶ்ரீசத்யவிஜயர் மேல் இயற்றிய ஸ்தோத்திரம்**

**ம்ருதுலமஞ்சரி மஞ்சுலதௌல சாமலதல்யை: பரமை: குசுமைரத|**
**பகுலபங்கஜம் பகமல்லிகா குரபகோத்பல பாடலபூர்வகை: ||**
*(ச.போ.வி.4.46)*

*ஶ்ரீமூலராம, திக்விஜய ராம, வேதவியாசருக்கு லட்ச துளசி, லட்ச பூக்களை அர்ப்பித்தார். துளசி, பகுள, சம்பிகெ, மல்லிகை, கமல போன்ற சிறந்த பூக்களை அர்ப்பித்தார். அனைத்து வித பழங் களையும் தருவித்தார். திராட்சை, பலா, வாழைகளைக் கொடுத்து சல-பிரதிமைகளான பிராமணர்களை மகிழ்வித்தார். சர்வமூல பாராயணத்தை செய்வித்தார். சித்தார்த்த ஆண்டு சைத்ர சுத்த ஏகாதசி காலையில் ஶ்ரீசத்யவிஜயர் வைகுண்ட யாத்திரை செய்தார். அவரது சிஷ்யனான ஆரணியின் மகாராஜா வெங்கடபதி, கௌண்டின்ய நதிக்கரையில், தமது அரண்மனைக்குப் பக்கத்தில் அவரது பிருந்தாவனத்தை கட்டுவித்தான். ஶ்ரீசத்யப்ரியருக்கு உடனே இதை தெரியப்படுத்தினான்.*

*ஶ்ரீசத்யப்ரியருக்கு இந்த விஷயம் தெரிந்தவுடன், அருகில் இருந்த நதிக்குச் சென்று ஸ்னானம் செய்து வந்தார். உடனே சம்ஸ்தானத்துடன் ஆரணிக்குப் புறப்பட்டு வந்தாலும், குரு பிருந்தாவன பிரவேசம் செய்து ஒரு மாதம் ஆகிவிட்டிருந்தது. ஶ்ரீசத்யப்ரியர் ஆரணிக்கு வரும் செய்தி கேட்டது, வெங்கடபதி ராஜா, அந்த ஊரில் இருந்த பண்டிதர்கள், மடத்து சிஷ்யர்கள் என*

*அனைவரும் ஊருக்கு வெளியே எல்லையில் வந்து நின்று, ஸ்ரீகளவருக்கு உற்சாக வரவேற்பு அளித்தனர்.*

*குருவான ஸ்ரீசத்யவிஜயரின் பிருந்தாவன தரிசனம் செய்து, ஸ்ரீசத்யப்ரியர், சம்ஸ்தானத்தின் செல்வம், மண்டபங்கள் என அனைத்தையும் பெற்றுக் கொண்டார். பல நாட்கள் குருகளின் பிருந்தாவன சன்னிதியிலேயே பூஜை, பாடம், பாராயணம் ஆகியவற்றை செய்து வந்தார். பல தான தர்மங்களை செய்து குருவின் சமாராதனையை செய்தார்.*

**பந்துஸ்த்வம் குருரிஷ்ட தெய்வதமிதி த்வத்வாத பங்கேருஹம்**
**ப்ராப்தம் மாம் பரிபாலயேதி சததம் யாசே நிபத்தாஞ்சலி ।**
**சித்தம் மத்குண தோஷசிந்தன விதௌ நூனம் மனாஞ்மா க்ருபா:**
**... த்வதங்க்ரியுகலம் ஹித்வா ந மே சத்கதி: ॥**

★★★

## ஸ்ரீசத்யப்ரியரின் திக்விஜயம்

*ஸ்ரீசத்யப்ரியர் ஸ்ரீராமாச்சார்யரை அழைத்துக்கொண்டு, கடப்பா, பள்ளாரி, ஹரிஹர, பங்காபுரத்திற்கு திக்விஜயம் செய்து மறுபடி ராய்ச்சூருக்கு வந்தார். அங்கு சில நாட்கள் வாசம் செய்தார்.*

**பதி பத்தாதிபத சிங்கன்யப: புரராயிசூர புரமாகதவான் ।**

**அதுனாஹமேமி சமவர்த்தி ஹரிஸ்திதிமத்ரி மஸ்தகபுரம் புருஹம்।**
**மம தத்பவேத் பவதனுக்ரஹத: வஷமாவ்ருஜேன் னனு ததார்ய பவான் ॥**
*(ச.போ.நி. 5-5,7)*

*அப்போது சத்ரபதி சாஹு மகாராஜாவின் முக்கிய மந்திரியான பத்தேஜி சிங்கன் மற்றும் அவருடன் ரகோஜி பந்த் போசலே, முராரிராவ் என அனைவரும் தென்னிந்திய பயணத்திற்கு புறப் பட்டிருந்தனர். ராய்ச்சூருக்கு வந்த அந்த மராடா குழுவினருக்கு, அங்கு ஹம்ஸபீடத்து மூலபரம்பரையை அலங்கரித்திருந்த ஞானிவரேண்யரான ஸ்ரீசத்யப்ரிய தீர்த்தர் இருக்கிறார் என்ற செய்தி தெரியவந்தது. உடன் சென்று அவரது ஆசியைப் பெற்று, பின் தென்னிந்தியாவில் நவாப்பிடமிருந்து பல கோட்டைகளை வசப்படுத்தினர். அங்கு அவர்களின் சாம்ராஜ்யத்தை நிறுவ, ஸ்ரீகளவரின் ஆசி மற்றும் அருள் தேவை என்று நினைத்தனர்.*

*தென்னிந்தியாவில் பல இடங்களில், ஸ்ரீசத்யப்ரியரின் மகிமை மற்றும் அவரது சிஷ்யரான ராமாச்சார்யரின் பாண்டித்யம் ஆகியவற்றை கேட்டு மகிழ்ந்தனர். ஆகவே அவரிடம் வந்து இதற்கான ஆசியை வேண்டினர். ஸ்ரீகளவரும் அவர்களை ஆசிர்வதித்து, ஒரு திக்விஜய யந்திரத்தை பூஜை செய்து கொடுத்து, அதை எப்போதும் அணிந்திருக்குமாறு கூறினார். ஒவ்வொரு கோட்டையை பிடித்த பிறகும், தமக்கு செய்தி அனுப்பும்படியும் கூறி அனுப்பினார்.*

*ஸ்ரீகளவர் மறுபடி சாவணூருக்கு வந்து சிறிது காலம் அங்கு தங்கினார். அப்போதே பத்தேஜி சிங்கன் திருச்சிராப்பள்ளியிலிருந்து செய்தி அனுப்பியிருந்தார். 'ஸ்ரீகளவரின் பரமானுக்கிரகத்தால், திருச்சிராப்பள்ளியின் மிக முக்கிய கோட்டையை நாங்கள் கைப்பற்றியிருக்கிறோம். அங்கு, முராரிராவ் கோர்படெவை சுபேதராக ஆக்கி அவரிடம் அக்கோட்டையை ஒப்படைத் திருக்கிறோம். தாம் தயவுசெய்து தென்னிந்தியாவிற்கு வந்து எங்களின் வரவேற்பை பெற்றுக் கொள்ளவேண்டும்' என்று சொல்லியிருந்தார்.*

*ஸ்ரீசத்யப்ரியரும் தென்னிந்திய பயணத்தை தொடங்கினார். காவேரி நதிக்கரையில் ஸ்ரீரங்கத்திற்கு வந்தார். ஒரு ஆண்டு காலம் அங்கேயே தங்கினார். மூன்று மடத்து பண்டிதர்களும் ஸ்ரீகளவரின் அருகில் இருந்தனர். முராரிராயர், ராகோஜி போஸலே, ஸ்ரீகளவரை மிகுந்த மரியாதையுடன் வரவேற்று, அவரது அருளினால் கிடைத்த வெற்றியினை பகிர்ந்தனர். இரண்டு யானைகள், மூன்று கிராமங் களை மடத்திற்கு காணிக்கையாகக் கொடுத்தனர். ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீகளவரை யானை மேல் ஏற்றி ஊர்வலம் நடத்தினர். தினமும் வித்வத்சபை நடந்தது. ஸ்ரீமடத்து அனைத்து செலவுகளையும் முராரிராவ் ஏற்றுக்கொண்டார். ஸ்ரீகளவரின் ஆணைப்படி ராஜன், நூற்றுக்கும் மேற்பட்ட பிராமணர்களுக்கு, பண்டிதர்களுக்கு மானியம், உதவித்தொகைகளை வழங்கினார்.*

ப்ரபுதாபித ப்ரசுர ஜானபதான் ஸ்ரீதகேவல ஸ்வஹிதன்யை ஜபதான் ||
*(ச.போ.வி. 5.25)*

*இப்படி ஸ்ரீசத்யப்ரியர் தென்னிந்தியாவில் தனது அத்யாத்மிக சாம்ராஜ்யத்தை மிக அற்புதமாக ஆண்டார்.*

*'சமதுஷ்ட விம்ஷதிசமம் தமதோ குருரத்ய ஜிகீபத திஷ்டதமம்'.* அப்போது ஸ்ரீராமாசார்யருக்கு வெறும் 28 வயது. அவருக்கு மறுபடி ஆசார்ய சாஸ்திரங்களை, அதன் ரகசியங்களை விவரித்தார். மேலும் சில கிரந்த பாடம் நடந்தது. எட்டு வயது சிறுவனான ஸ்ரீராமசார்யரை வரவழைத்து, அவருக்கு துவக்கத்தில் பிரமாண பத்ததி, சித்தாந்த கௌமுதி என்று சாஸ்திர பாடத்தை துவக்கி, கடந்த 20 ஆண்டு களில் அனைத்து சாஸ்திரங்கள், வேத வேதாங்கங்கள் பாடம் சொல்லி, மகாபண்டிதராக ஆக்கினார். வேதாந்த சாம்ராஜ்யத்தை ஆளும்போது, சமூகத்தின் பிரச்னைகளை அறிந்து அவற்றை திருத்தும் வழியை, பாட பிரவசனங்களை செய்யும் கடமையை, வாதம் செய்யும் வழிமுறைகள் என அனைத்தையும் கற்பித்தார்.

**க்ருதஷப்த கௌஸ்துப மனோரமி கோருக்ருதாந்த கௌமுதி நிராசகரம்।**
**ஸ்வக்ருதம் ச வாங்மககணம் நிபுணோ யமபேபடத் ப்ரபடித்ருப்ரவரம் ॥**
*(ச.போ.வி. 5.30)*

ஷப்தகௌஸ்துப, மனோரமா, சித்தாந்த கௌமுதி ஆகிய வற்றைக் கண்டிக்கும் பல கிரந்தங்களை ஸ்ரீசத்யப்ரியர் இயற்றினார். அன்றுவரை நடந்த தர்க்கம், வியாகரணத்தின் பல்வேறு நடைமுறைகளை கண்டிக்கும், பட்டோஜி தீக்ஷித், ரங்கோஜி பட், நாகேஷ் பட்ட் ஆகிய நவீன வியாகரண கிரந்தகாரர்களின் அபிப் பிராயங்களை கண்டித்து, ஸ்ரீசத்யப்ரிய தீர்த்தர் பல தர்க்க வியாகரண கிரந்தங்களை இயற்றினார். அவற்றை ராமாசார்யருக்கு பாடம் எடுத்தார்.

அப்போது 28 வயதான ராமாசார்யருக்கு 4 வயதான மகன் ஒருவன் இருந்தான். மனைவி கிரிஜம்மா மூன்று மாத கர்ப்பிணியாக இருந்தார். ஆனால், ராமாசார்யர் மட்டும் நிரந்தர பாட பிரவசன, வாக்யார்த்தங்களிலேயே முழுவதுமாக மூழ்கியிருந்தார். சில மாணவர்களுக்கு பிரம்மசூத்ர பாஷ்யம், தத்வபிரகாசிகா, சந்திரிகாதி கிரந்தங்களை பாடம் சொல்லி குருகளின் சன்னிதியில் மங்களம் செய்தார். தாம் ஸ்ரீசத்யப்ரியரில் பல்வேறு விசேஷ விஷயங்களை படித்துக் கொண்டிருந்தபோதே, மற்ற சில மாணவர்களுக்கு பாடம் எடுத்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீசத்யப்ரியரின் அருளினால் தாம் வென்ற திருச்சிராப்பள்ளி கோட்டையில், ஸ்ரீகளவருடனேயே, அவரது ஊர்வலத்துடனேயே,

*தானும் வெறும் கால்களுடன் நடந்து வந்தார் முராரி ராவ். அந்த நிகழ்ச்சி மிகவும் அற்புதமாக இருந்தது. ஸ்ரீமதாசார்யர் ஜயசிம்ம ராஜாவுடன், விஷ்ணுமங்களத்தில் நுழையும் காட்சியை நினைவுபடுத்தியது.*

**ஜயசிம்ஹோ யதாதேஷம் ஸ்வமகாத ததாகுரும் ।**
**முராரிர் பஹுதாவிப்ர ராஜும் தம்ஸமமானயத் ॥** *(கு.வ.2.44)*

**யதிராஜ ராஜ்யமிதமு ர்வபவத்பவதீய பூரிதயதெய்வ ஹி மே ।**
**வஷவர்த்ய தப்ரமஹிமன் மஹிமன் மஹிமன்மனோரத கரோத்**
**ப்ருவசேத்॥**
*(ச.போ.வி.5.21)*

*ஸ்ரீபாதங்களவருக்கு ராஜமுத்திரையை அர்ப்பித்து, கனகாபிஷேகம் செய்தார். ஸ்ரீகளவர் திருச்சிராப்பளியில் பல நாட்கள் வசித்தார். தண்டுலகோபாலன் என்னும் ராமானுஜ பண்டிதருடன் 'சம்பந்த' என்னும் சொல்லின் ஸ்வரூபத்தைப் பற்றி வியாக்யார்த்தம் செய்தார், ஸ்ரீசத்யப்ரியர். அந்த வாதத்தில் அவரை வென்றார்.*

*இதே சமயத்தில், முராரிராயரின் இந்த திருச்சிராப்பள்ளி கோட்டையில் நுழைந்து, அக்கோட்டையை ஆக்ரமிக்க ஆற்காடு நவாப்பின் சைன்யம் முயன்றது. முராரிராவ் இந்த முயற்சியை நிறுத்தினார். ஸ்ரீகளவர், சைத்ர சுக்ல பஞ்சமியன்று தன் பரிவாரத் துடன் பத்திரமாக ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார். அடுத்து கண்ணனூருக்கு சென்றார். தம் இறுதிக்காலத்தை அறிந்தார். ஸ்ரீராமாசார்யருக்கு இந்த மூல மகாசம்ஸ்தானத்தை ஒப்புவிக்க விரும்பினார். ஸ்ரீராமாசார்யர் எட்டு வயதிலேயே அதற்கு தயாராகி இருந்தார். தமது அமானுஷ சக்தியை மகிமையை வெளிப்படுத்தியிருந்தார். தமது அபாரமான ஞானம், பாண்டித்யத்தினால் சமூகத்தில் ஒரு முக்கிய ஸ்தானத்தைப் பெற்றிருந்தார்.*

★★★

## ஸ்ரீசத்யப்ரியரின் செய்தி

*ஸ்ரீசத்யப்ரியர், ராமாச்சாரியரை தனிமையில் அழைத்து கூறியது:*

ஆயிராம ராமமஹனார்ஹ பவான்
ஷுபமாஸ்ரமம் லகுதுரீயமிமம்

ரகுபபிரசாத கரமாகர மாஸ்ரமாஸ்ரயீத பஹுதர்மததே: ||
ஆயிராம பவானீதம் துர்யாஸ்ரம மவாப்ய ச |
ஸ்ரீராமராதனே யோக்ய: || *(போ.கு.வ.2.47)*

*ஸ்ரீராமசந்திரனின் பூஜை செய்ய அருகதை உள்ள ராமாச்சார்யரே இனி நீங்கள் சன்யாச ஆசிரமத்தை பெற்றுக் கொள்ளுங்கள். இது தர்ம சாம்ராஜ்யம். இதன் அதிபதி நீங்கள். இதற்கு அதிகமான பக்தி, வைராக்யங்கள் தேவை. இது தேவதைகளுக்கு சுயமாகவே இருக்கக் கூடியவை. உங்களுக்கு தெய்வ ஸ்வபாவம். இது ஸ்ரீஹம்சன் அமர்ந்த சமஸ்தானம். உத்தர நாமகனாக உலகத்திற்கு ஆதியான ஹரியின் பீடம். யுகயுகங்களிலிருந்து பாய்ந்து வரும் தத்வ வெள்ளத்தை காப்பாற்றும் பரம்பரை இது. ஸ்தானம் பெரியது. வேலையும் பெரியது.*

பரமசதாத் யுருஹ்ருதந்த ஜகத்குரு குர்வனுக்ரஹ பலேன பவான் |
பரிபாலயேத் பதமிதம் சுப்ருஹத் சுசிராய நிர்பரமபேதியுத: ||
*(ச.போ.வி. 5.43)*

*இதை நாம் எப்படி பின்பற்றப் போகிறோம் என்று நீங்கள் கவலைப்பட வேண்டாம். என்னில் துவங்கி பிரம்மதேவர் வரையிலான இந்த பீடத்தின் அனைத்து யதிவரேண்யரின் அருளாசியினால் நீங்கள் இந்த பரமபீடத்தை பரிபாலனம் செய்வீர்கள் சந்தேகம் வேண்டாம். நீங்கள் சம்ஸ்தானாதிபதி ஆகும்போது, இன்றைய அரசாங்க நடைமுறைகள் மாறியிருக்கும். மேற்கத்தியவர்களின் படையெடுப்பு மறுபடி துவங்கியிருக்கும். உங்களின் பயணத்திற்கு தடை ஏற்படலாம்.*

*உங்களின் பேச்சு, கருத்து, விருப்பம் ஆகியவை அவர்களை காப்பாற்ற வேண்டும் என்று பல ராஜர்கள் உங்களை கேட்கலாம். நீங்கள் தைரியமாக இருக்கவும். ஹிந்து சமூகத்தின் நலனுக்காக எப்போது எந்த முடிவினை எடுக்கவேண்டும் என்று தீர்மானியுங்கள். எல்லா ராஜர்களையும் தங்களின் தவ வலிமையால் தங்கள்*

*சிஷ்யர்களாக ஆக்கிக்கொண்டு, நட்புகொண்டு, சமூகத்தின் வளர்ச்சிக்காக அதை பயன்படுத்திக் கொள்ளுங்கள். நாடு முழுக்க பயணம் செல்லுங்கள். வாக்யார்த்த, வித்வத் சபைகளில், ஸ்ரீமத்வரின் இந்த சித்தாந்தத்தின் வெற்றிக் கோபுரத்தை கட்டுங்கள். அனைவருக்கும் தத்வ பிரசாரம் செய்து, இந்த வேதாந்த சாம் ராஜ்யத்தை கட்டிக் காப்பாற்றுங்கள். கும்பகோணம் போன்ற பெரிய ஊர்களில் ஸ்ரீமடத்தின் கட்டிடங்களைக் கட்டுங்கள். பிராமணர் களின் உபநயன, திருமணங்களுக்கு பொருளுதவி செய்யுங்கள்.*

**அமடா: புரீரதி விஷாலமடா: கலயேத தா: குவலயே சகலா: ।**
**அதிதுர்கமா யவனராண்ணிகமா: ஸ்யுரதீவ மே தவ து தே சுகமா: ॥**
*(ச.போ.வி.5.49, ச.போ.வி. 5ம் சர்க்கம் 41 முதல் 55 ஸ்லோகம் வரை)*

*பாரதம் முழுக்க முக்கிய நகரங்களில் எங்கெங்கு நம் மடம் இல்லையோ, அங்கு நம் கட்டிடங்களைக் கட்டுங்கள். (காசி, கயா, ப்ரயாக, புரி, மஹாராஷ்ட்ரா, ஆந்திரா, உடுப்பி ஆகியன). எல்லா க்ஷேத்திரங்களிலும் கட்டிடம் வரட்டும். ஸ்ரீராமனை, சந்தனம், புஷ்பம், துளசியினால் அர்ச்சியுங்கள். மிக உயரமான தங்க மண்டபங்களை கட்டுங்கள். மடத்து செல்வம் உங்கள் காலத்தில் மேலும் வளரும். அனைத்து யவனர்களும் உங்கள் பேச்சைக் கேட்டு நடப்பார்கள். அனைத்து முக்கிய பண்டிதர்களும், அவர்களின் புத்ரர்கள் உங்களிடமே சாஸ்திர அத்யயனம் செய்வார்கள். 'சுதியாம் மஹாகுல புவாம் தனயா'. அனைத்து கிருஹஸ்தரும் உங்களிடமே அத்யயனம் செய்து, உங்களை ஜகத்குருத்வத்தை ஒப்புக்கொள் வார்கள்.*

*அனைத்து ராஜர்கள், பண்டிதர்கள், சிஷ்யர்கள் என அனைவரும் நீங்கள் இருக்கும் இடத்திற்கு வரட்டும் என்று ஆசி வழங்கினார். ஸ்ரீராமாசார்யர், குருவின் அனைத்து ஆணைகளையும் கவனமாக கேட்டுக்கொண்டார். அனைத்தையும் குருவின் ஆணைப்படியே தவறாது செய்வேன் என்று உறுதி அளித்தார். சன்யாசம் வாங்குவதற்கு தமது அனுமதியை அளித்தார்.*

★★★

## ஸ்ரீராமாசார்யர் சத்யபோதர் ஆனார்

*ஸ்ரீசத்யப்ரியர் அவருக்கு பல-மந்திராக்ஷதை வழங்கினார். சன்யாசம் வழங்குவதற்கான ஏற்பாடுகள் துவங்கின. பல மந்திரங்களின் உபதேசம் ஆனது. ஆத்ம-சிரார்த்தங்கள் நடந்தன. ஸ்ரீராமாசார்யரின் தலையில் ரத்னங்கள் நிரம்பிய வியாச சம்புடங்களை வைத்து, வேதாந்த சாம்ராஜ்யத்தில் அபிஷேகம் செய்தார். காஷாயம், தண்டம் ஆகியவற்றைக் கொடுத்து அவருக்கு பிரணவ மந்திரத்தை உபதேசம் செய்தார். தான தர்மாதி காரியங்கள் வெகு சிறப்பாக நடைபெற்றன. ஸ்ரீராமநவமியன்று (23-3-1843) ஸ்ரீசத்யபோதருக்கு சன்யாசம் வழங்கினார்.*

**பஹுனாம் சாஸ்திர சங்கானாம் முனேஷோஹ்யுத்ஸவே ஷுபே ।**
**ஸ்ரீராமஸ்ய நவம்யாந்து வித்வத்போ வித்தமப்யதத் ॥** *(கு.வ.2.57)*

**சம்ஸ்தாப்ய ஸ்வஷிரஸி சம்புடம் படேயான்**
**வையாஸம் மணிகணனத்தமித்தமத்தா ।**
**சாம்ராஜ்யே நிஜகுருணாபிஷிக்த ஆஸீத்**
**சன்யாஸே ச உசித சத்யபோதனாம் ॥** *(ச.போ.வி.5.60)*

**தன்னோர்த்னி சம்புடம் ச்ரேஷ்ட வைய்யாஸம் ஸ ஜகத்குரு: ।**
**சம்ஸ்தாப்யா பிஷேசாதாத் சத்யபோதேதி நாம ச ॥** *(கு.வ.2.51)*

*ஸ்ரீசத்யபோதரை தனது உத்தராதிகாரியாக ஆக்கிக்கொண்டு அவருக்கு சன்யாசம் வழங்கினார்.*

*சாம்ராஜ்யாபிஷேக நிகழ்ச்சி வெகு விமரிசையாக நடை பெற்றது. ஸ்ரீசத்யப்ரியர், ஸ்ரீஹரியின் ஆணை, முன்னோர்களின் விருப்பம் ஆகியவற்றை நிறைவேற்றினார். தமது வைகுண்ட யாத்திரையின் காலம் நெருங்கிவிட்டது என்பதை அறிந்தார். யோகசாஸ்திரத்தில் தேர்ந்தவரான ஸ்ரீகளவர் தம் வெளிப்புற இந்திரியங்களின் வேலைகளை நிறுத்திக்கொண்டார். ஸ்ரீராமனின் தியானத்தில் முழுவதுமாக மூழ்கினார். மௌன விரதம் மேற் கொண்டார். சிஷ்யர்கள் இவற்றை முதலிலேயே அறிந்திருந்தனர்.*

*விசேஷ தான தர்மங்களை செய்து ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னதானம் செய்தார். ஸ்ரீகளவர் லௌகிக பேச்சினை நிறுத்தினார். நிரந்தரமாக பாராயணம், பிரவசனம், லயசிந்தனையில் ஈடுபட்டார். பிரம்ம-ரந்திரத்தினால் தனது பயணத்தை துவக்கினார்.*

*26-3-1863 ருதிகோத்காரி ஆண்டு, சைத்ர சுத்த த்ரயோதசியன்று காலையில் கண்ணனூர், கிருஷ்ணனூரில் பிருந்தாவனஸ்தர் ஆனார்.*

★★★

## ஸ்ரீசத்யபோதரின் திக்விஜயம்

*ஸ்ரீசத்யபோதர், தமது குருவின் உடலை ஒரு பல்லக்கியில் வைத்து, பிராமணர்களைக் கொண்டு, மானாமதுரைக்கு கொண்டு வந்தார். க்ருதமாலா நதியில் ஸ்னானம் செய்வித்து, கௌபீன ஊர்த்வபுண்ட்ரம் துளசிமாலைகளால் அலங்கரித்து, அந்த நதிக் கரையில் அவரது திவ்ய பவ்ய பிருந்தாவனத்தை நிர்மாணித்தார். அங்கேயே மடத்தை கட்டுவித்தார். பிருந்தாவன சன்னிதியில் குருவின் ஆராதனையை நடத்தினார். தென்னிந்தியாவின் அனைத்து பகுதிகளிலிருந்தும் ஆயிரக்கணக்கான மக்கள் பிருந்தாவனத்தைப் பார்வையிட வந்திருந்தனர். ராஜசூய யாகத்தைப் போன்று தான, தக்ஷிணை, வஸ்திர அலங்காரம், தங்கம், வெள்ளி பாத்திரங்களை தானம் செய்வித்தார்.*

**ததோ விதானத: க்ருத்வா சமாராதன மன்வஹம் ।**
**அதோஷயத் த்விஜஸ்ரேசென் வஸ்த்ராபரண பூர்வகை: ॥**

*(பூ.கு.வ.க)*

*நூற்றுக்கும் மேற்பட்ட பிராமணர்களுக்கு பட்டு மடி துணிகள், வஸ்திரங்களை வழங்கினார்.*

**சாரசாமீகரீயாணி முக்தாயுக்தானி தன்மஹே ।**
**விபஸ்சிதப்யஸ்து கேப்யஸ்சித் ஸ்ரவணாபரணானி ச ॥**
**ராமா நாமாங்கிதா ஹெய்பீ: கேப்யஸ்சித்தேப்ய ஊர்மிகா: ।**
**ஊர்ணபஸ்த்ராணி கேப்யஸ்சித் கேப்யஸ்சித் கண்டமாலிகா: ॥**

*(ச.போ.வி. 6.24.25)*

*ஸ்ரீசத்யபோதரின் ஆராதனை நிகழ்ச்சியில் அனைத்து வித்வாம்சர்கள், பிராமணர்கள், வேத பண்டிதர்களுக்கு, முத்து சேர்த்த தங்கத் தோடுகளை வழங்கினார். ராமநாமம் பொறிக்கப்பட்ட தங்க மோதிரங்கள் சிலருக்கு வழங்கினார். சிலருக்கு தங்க துளசி மாலைகளை ஸ்ரீசத்யபோத தீர்த்தர் வழங்கினார். இந்த ஆராதனை, பாண்டவர்கள் நிகழ்த்திய ராஜசூய யாகத்தைப் போல இருந்தது.*

★★★

## ஸ்ரீசத்யபோதரின் ராமேஸ்வர யாத்திரை

**அதப்ரதஸ்திரே தஸ்மாத்சேதும் கந்தும் தபஸ்வின: ।**
**பாஸ்கர க்ரஹணே ப்ராப்தேஷ தர்த்தம் த்வரமாகதா: ॥**

*(போ.கு.வ.ர.25.35)*

*சூரிய கிரகண காலம் வந்திருந்தது. சமுத்ர ஸ்னானம் செய்து, அப்படியே ராமேஸ்வர யாத்திரை செய்வதற்கு, ஸ்ரீகளவர் மானாமதுரையிலிருந்து ராமேஸ்வரத்திற்கு சென்றார். அங்கு விமரிசையுடன் அனைத்து வேலைகளும் நடந்தன. தர்ப்ப-சயனத்திலிருந்து ராமேஸ்வரத்திற்கு வந்தார். தனுஷ்கோடி மற்றும் பிற இடங்களில் ஸ்னானம் செய்தார். அங்கு சூத்ர பாஷ்ய பாடம் சொல்லி, மங்களம் செய்தார்.*

**ஹாடகாதகடீ சூத்ரோர்மிகா கடக குண்டலை: ।**
**தனுஷ்கோடி தடே தர்பேத்தண்டிகாட் பண்டிதான் பஹூன் ॥**

*(ச.போ.வி.6.51)*

*பிராமண சமாராதனையை ராமேஸ்வரத்தில் சிறப்பாக நிறைவேற்றினார். பல ருசியான உணவுகளுடன், தங்க மோதிரம், வளை, தோடு, வெள்ளி பாத்திரங்கள் ஆகியவற்றை தானமாக வழங்கினார். தினமும் அங்கிருக்கும் வெவ்வேறு தீர்த்தங்களில் ஸ்னானம், பாட பிரவசனம், பிராமண சந்தர்ப்பணை செய்தவாறு அங்கு தங்கினார். அங்கு உத்தராதி மட கட்டிடம் கட்டுவதற்கு ஒரு இடத்தைப் பெற்றார். இருந்த மடத்தை விரிவாக்கினார். யாத்திரை மிகவும் சிறப்பாக நடந்தேறியது.*

★★★

## குராசார்யரின் குரு துரோகம்

*அப்போது ஒரு சம்பவம் நடந்தது. மடத்தில் குராசார்யர் என்று ஒரு கிருகஸ்தர் இருந்தார். கஞ்சன். நாஸ்திகனும் கூட. ஸ்ரீசத்ய போதரை அவரது பூர்வாசிரமத்திலிருந்தே வெறுத்து வந்தார். ஸ்ரீசத்யபோத தீர்த்தருக்கு ஆசிரமம் வந்தபிறகு, தனக்கு அபார அதிகாரம், செல்வம் ஆகியவற்றைக் கொடுக்கவேண்டும் என்று கேட்டார். ஒரு நாள், தன்னை திவானாக ஆக்கவேண்டும் அல்லது நிறைய செல்வங்களைக் கொடுக்கவும் என்று கேட்கத் துவங்கினார்.*

ஸ்ரீகளவர் அவரது பேச்சில் அதிக கவனம் செலுத்தவில்லை. அவனும் பல முயற்சிகளை மேற்கொண்டும், அவற்றில் வெற்றி அடையவில்லை. அவனும் அமைதி அடையவில்லை. ஸ்ரீகளவர் ராமேஸ்வரத்திற்கு புறப்படுகிறார் என்று அறிந்து, உடன் ராமனாதபுர அரசரிடம் சென்றான். 'ஸ்ரீசத்யப்ரியர், ஸ்ரீசத்யபோதருக்கு ஆசிரமம் வழங்க விரும்பவில்லை. இவரே அவரை கட்டாயப் படுத்தி வாங்கியிருக்கிறார். இவரது முன்னோர்கள் திரட்டிய அபாரமான செல்வம் இவரிடம் இருக்கிறது. தங்கம், வெள்ளி, முத்து, ரத்தினங்கள் நிறைய இருக்கின்றன. அவற்றை நீங்கள் அபகரித்துக் கொள்ளுங்கள்' என்றார். அந்த மடத்தை எனக்குப் பெற்று தாருங்கள். நான் உங்களுக்கு 10,000 நாணயங்களைக் கொடுக்கிறேன் என்றார். அந்த ராஜனும் இதற்கு ஒப்புக்கொண்டான்.

ஸ்ரீசத்யபோத தீர்த்தர், தனுஷ்கோடியில் ஸ்னானம் செய்து, ராமனாதனின் தரிசனத்தைப் பெற்று திரும்பிவரும்போது, அனைத்து ராமேஸ்வர யாத்ரிகர்களும் நாகபகா நதிக்கரையில் வந்து சேர்ந்தனர். அங்கு, படகில் ஏறி மறு கரைக்கு வரவேண்டியிருந்தது. 'ராஜனே, யாரையும் நதியை கடக்க விடவேண்டாம்' என்று குராசார்யர் ராஜனுக்கு அறிவுறுத்தினார்.

ஸ்ரீசத்யபோத தீர்த்தர், தமது 40 நாள் ராமேஸ்வர யாத்திரையை முடித்துக்கொண்டு, புஜங்க நதிக்கரைக்கு அனைவருடன் வந்து சேர்ந்தார். அப்போது அந்த ராஜனான சேதுபதியின் படையினர் அவர்களை சுற்றி வளைத்தனர். மடத்து ஆட்கள் பயந்தனர். தமது செல்வங்களை அபகரிக்கவே படையினர் வந்திருக்கின்றனர் என்று அறிந்தும், ஸ்ரீசத்யபோதர் பயப்படவில்லை. (ந வியஷேதனம் மனாகிபி) வழக்கப்படி ஸ்னானம் செய்து, ஸ்ரீராமதேவரின் பூஜையை தொடங்கினார். மனதை நிலை நிறுத்தி ஸ்ரீஹரியை நினைத்துக் கொண்டார்.

படையினரை முன்னே அனுப்பி, பின் அங்கு வந்த குராசார்யருக்கு அபாரமான வயிற்று வலி வந்துவிட்டது. வலி தாங்கமுடியவில்லை. தீர்வு தெரியவில்லை. ஆனால், இது தான் செய்த துரோகத்திற்கான பரிசு என்று அவருக்கு நன்றாக தெரிந்து விட்டது.

**பஸ்சாதப்த: ததோப்ரூத ப்ராப்ரோருதரவேதன: |
பவான் மஹானபாவோஸ்தி குபாகூபார பாமரே |
சத்யம் சத்யம் சத்யமதே விதத்தாம் மய்யனுக்ரஹம்||** *(ச.போ.வி. 6.62)*

*கருணாமயியான ஸ்ரீசத்யபோதரிடம் வந்து, அவர் காலில் விழுந்து கதறி, தன்னை மன்னிக்குமாறு வேண்டினார். 'ஸ்வாமி, தாங்கள் மகானுபாவர். இதில் சந்தேகமே இல்லை. நான் தவறு செய்துவிட்டேன். எனக்கு அருளுங்கள்'. அபாரமான வயிற்று வலியை பொறுத்துக் கொள்ள முடியாமல், ஸ்ரீகளவரின் காலில் விழுந்து அழத் துவங்கினான். 'உங்களைப் போன்ற மகானு பாவருக்கு துரோகம் செய்ததற்கான பலனை நான் அனுபவித்து விட்டேன்' என்றான்.*

*ஸ்ரீசத்யபோதர் மிகவும் கருணாசாலி. அவனின் துக்கத்தைக் கண்டு வருந்தினார். ஸ்ரீராமசந்திரனுக்கு அர்ப்பித்த தூப அங்காரவை இட்டுக்கொள்ளும்படி அவனுக்குக் கொடுத்தார். அவரும் அதை தன் உடலில் இட்டுக்கொண்டார். சில நிமிடங்களிலேயே அவரது வலி தீர்ந்தது. மறுபிறவி எடுத்தது போலாயிற்று. ஸ்ரீகளவரிடமிருந்து முத்ரா தாரணம் பெற்று, அவரின் மரியாதைக்குரிய சிஷ்யர் ஆனார். ஆனால், அங்கு வந்த படையினர், மடத்து செல்வங்களை அனைத் தையும் கவர்ந்து, ஸ்ரீகளவரையும் உடன் அழைத்துக்கொண்டு, ராமனாதபுரத்திற்கு சேதுபதி அரசனிடம் வந்து சேர்ந்தனர்.*

★★★

## திருச்சிராப்பள்ளி திக்விஜயம்

*ஸ்ரீசத்யபோதரின் ப்ரிய சிஷ்யரான முராரிராவ் கோர்படே, திருச்சிராப்பள்ளி கோட்டையை, நவாப்பிடமிருந்து போராடி வென்றிருந்தார். அங்கு சுபேதாராக இருந்து ஆண்டு வந்தார். இழந்த கோட்டையை மறுபடி வெல்வதற்காக அந்த் நவாப், மூன்று மாதங்களாக அங்கே ஒளிந்திருந்து சரியான சந்தர்ப்பத்திற்காக காத்திருந்தார். ஆனால், வீரரான முராரிராயரிடமிருந்து அந்த கோட்டையை மறுபடி வென்றெடுப்பது அவ்வளவு சுலபமல்ல.*

*ராவரம்ப நிம்பால்கர் என்பவரின் மகனான ஜானோஜி நிம்பால்கர், இந்த நவாப்பின் சர்தாராக இருந்தார். நவாப் தனது அனைத்து சர்தார்களையும் அழைத்து ஒரு கூட்டம் போட்டார். இந்த*

கோட்டையை வசப்படுத்துவது எப்படி என்று ஆலோசனை செய்யத் துவங்கினார். அப்போது ஒரு சர்தார் பின்வரும் யோசனையை முன்வைத்தார். 'முராரி ராயரின் குருகள் ஸ்ரீசத்யபோதர். அவர் இங்கே அருகில்தான் இருக்கிறார். அவர் மூலமாக முராரி ராயருடன் சமாதானமாக பேசி, கோட்டையை திரும்ப வாங்கிக் கொள்வதுதான் சுலபம்' என்றார். நவாப்பும் இதைப் பற்றி சிந்தித்து, இக்காரியத்தை செய்ய வல்லவர் ஜானோஜி நிம்பால்கர் மட்டும்தான் என்று எண்ணி, அவரிடம் இந்த வேலையை ஒப்படைத்தார்.

ஜானோஜி நிம்பால்கரும் தனது பரிவாரங்களுடன் ராமனாதபுரத்திற்கு வந்தார். அந்த ராஜா சேதுபதிக்கு செய்தி சொல்லி அனுப்பினான். பயந்துவிட்ட சேதுபதியிடம் இவ்வாறு கூறினான். 'இங்கு நமது குருவான ஸ்ரீசத்யபோதர் இருக்கிறார். அவர் எங்கு இருக்கிறார் என்று தெரியுமா?. நான் இப்போதே அவரை பார்க்க வேண்டும்' என்றான். சேதுபதி மிகவும் பயந்து, தான் அவரது அனைத்து சொத்துக்களையும் கவர்ந்து கொண்டது மிகவும் தவறு என்று நினைத்தான்.

ஸ்ரீசத்யபோதரிடம் - 'உங்களது மகிமை புரியாமல், ஒரு சாதாரண சன்யாசி என்று நினைத்து இந்த தவறு செய்துவிட்டேன். என்னை மன்னியுங்கள்' என்று வேண்டினான். தான் எடுத்துக் கொண்ட அனைத்து செல்வங்களையும் திருப்பி அளித்து, அதன் மேலும் பற்பல பரிசுகளை சேர்த்துக் கொடுத்தார். ஸ்ரீசத்யபோதரும் அவரை மன்னித்து, அவர் கொடுத்த அனைத்தையும் பெற்றுக் கொண்டு, ரதத்தில் ஏறி, திருச்சிராப்பள்ளி வந்து சேர்ந்தார்.

இதைப் பற்றி கோனய்யா என்பவரின் மகனான ராமய்யா, நவாப்பிடம் போய் கோள் சொன்னான். நிம்பால்கர், ஸ்ரீசத்ய போதருக்கு வேண்டப்பட்டவர். அவரால் நம் வேலையை செய்யமுடியாது. ஸ்ரீசத்யபோதர் முராரிராயரின் குரு. முராரிராயர் தன் செல்வங்களை இந்த குருவிடம் கொடுத்து வைத்திருப்பார்.

இதுமட்டுமல்லாமல், திருக்காட்டுப்பள்ளி பீமராயரின் செல்வங்கள் அனைத்தும் ஸ்ரீசத்யபோதரிடம் உள்ளன. மடத்து செல்வமும் மிக அதிகம். நீங்கள் ஒரு வேளை ஸ்ரீசத்யபோதரையோ, அல்லது அவரது செல்வங்களையோ உங்கள் வசம் செய்து கொண்டால், அதனால் எனக்கு இரு பயன்கள் ஏற்படும். ஒன்று -

முராரிராயருக்கு ஸ்ரீசத்யபோதரிடம் மிகப்பெரிய பக்தி இருக்கிறது. இந்த சத்யபோதரை நீங்கள் உங்கள் வசப்படுத்தினால், அல்லது அவரை ஒரு தனியிடத்தில் கொண்டு வைத்தால், குருபக்தி கொண்ட முராரிராவ், அவரைக் காணாது கவலைப்படுவார். தன் குருவை உங்களிடமிருந்து மீட்க முயல்வார். போர் புரியவேண்டுமெனில், அந்த இடத்தில் தன் குரு இருப்பதால், போர் செய்யவும் யோசிப்பார். தன் குருவை விடுவிக்குமாறு யாசிப்பார். அப்போது நீங்கள், அந்த கோட்டையை எனக்கு விட்டுக் கொடுத்தால், உன் குருவை நான் உனக்கு தருகிறேன் என்று சொல்லலாம்' என்றார்.

இதைக் கேட்ட நவாப்பின் மூளை யோசனை செய்யத் துவங்கியது. ஸ்ரீசத்யபோத தீர்த்தரின் செல்வங்களை கவர்ந்து, அதன் மூலம் முராரி ராயனை தன் வசப்படுத்துவது என்று தீர்மானித்தார். ராமனாதபுரத்திலிருந்து அனைத்து செல்வங்களுடன் ஸ்ரீசத்ய போதரை, நிம்பாலகர் மூலமாக வரவழைத்தார். திருச்சிராப் பள்ளியில் அவர் தங்குவதற்கு ஏற்பாடு செய்தார். உடன், நிம்பால்கரை வேறோரு வேலையாக இன்னொரு இடத்திற்கு அனுப்பினார். தன் இன்னொரு சர்தாரை வரவழைத்து, மேற்படி யோசனைக்கு அவரை பயன்படுத்தினார். நவாப்பின் ஆணைப்படி, அந்த திருச்சிராப்பள்ளி கோட்டையிலிருந்து பீரங்கி குண்டுகள் வீசினால், அது எங்கு விழுமோ, சரியாக அதே இடத்தில், ஸ்ரீசத்ய போதரை தங்க வைத்தார். அங்கே அவரது கூடாரங்களை அமைத்தார். அதே நேரத்தில், கோட்டையிலிருந்து குண்டு ஒன்று பாய்ந்து வந்தது.

**கரியோயந்த்ரகுலிகா பதனாவனிவாஸித: ।**
**துர்காதாகத்ய குர்வேகா குலிகைகாமபி ப்ரஜாம் ॥** *(ச.போ.வி.6.100)*

ஸ்ரீசத்யபோத குருகள் இருந்த இடத்திற்கே வந்த அந்த குண்டு அவர் கால்களுக்கு அருகில் விழுந்தது. யாருக்கும் எந்த காயமும் ஆகவில்லை. வந்து நமஸ்காரம் செய்தது போல் இருந்தது. மடத்து ஆட்கள் மிகவும் பயந்தனர். இங்கு இருக்க வேண்டாம். வேறு இடத்தில் கூடாரம் அமைப்போம் என்றதற்கு, ஸ்ரீகளவர் மறுத்தார். நாம் இங்கேயே இருப்போம். இதுவே ஸ்ரீஹரியின் சங்கல்பம். இந்த குண்டு எப்படி நம்மை ஒன்றும் செய்யவில்லையோ, அது போல முன்னர் நமக்கு எந்த ஆபத்தும் வராது என்று அவர் சொல்வதைப் போல இருந்தது.

*அடுத்த நாள், நவாப்பின் ஆணைப்படி, ஸ்ரீகளவரை ஸ்ரீமடத்தை, அவனது நூற்றுக்கும் மேற்பட்ட சேனையினர் சுற்றி வளைத்தனர். 'ஸ்ரீகளவரை நாம் காப்பாற்றுவோம். ஆனால் இங்கு இருக்கும் செல்வங்களை, அனைத்து தங்க வெள்ளி பொருட்களை சரிபார்த்து, பட்டியல் போட்டு வைக்கிறோம். நீங்கள் அனைவரும் சற்று தூர இருங்கள்' என்றனர். மடத்து ஆட்கள் இந்த முசல்மானுக்கு அஞ்சியது.*

*ஸ்ரீகளவர் இவற்றையெல்லாம் கவனித்தார். பாளபட்டர் முதலான 4-5 தைரியமான ஆட்களை அழைத்து, அவர்களிடம் தேவர் பெட்டிகளைக் கொடுத்து, திருக்காட்டுப்பள்ளி பீமராயரிடம் போகச் சொன்னார். இவர்களும், நதிக்கு ஸ்னானம் செய்வதைப் போல புறப்பட்டனர். ஒரு முசல்மான் காவலாளிக்கும் சந்தேகம் வரவில்லை. சிலர் இவர்களை பார்க்கவும் இல்லை. சிலருக்கு இவர்கள் தெரியவே இல்லை.*

**அடிதா: படவஸ் த்ரிகாடபல்லீம் த்ருடதுர்காம் த்ருதமேவ பேடிகாஸ்தா: |**
**தததீஷ்வர வைஷ்ணவாக்ர்ய பீமாபித விப்ரப்ரபுசதனி ந்யதுஸ்தே||**
*(ச.போ.வி.6.114)*

*திருக்காட்டுப்பள்ளியின் பீமராஜா ஒரு வைஷ்ணவ பிராமணர். ஸ்ரீசத்யபோத தீர்த்தரின் பிரிய சிஷ்யர். பிராமணர்கள் தேவர பெட்டிகளை பத்திரமாகக் கொண்டு வந்து இவரது அரண்மனையில் வைத்திருந்தனர். பீமராஜன் அதை பாதுகாத்தார். ஸ்ரீமடத்து செல்வங்களை பார்வையிட்டனர். அனைத்து தங்க, வெள்ளி பொருட்களின் மீது அவற்றை மடத்திற்குக் கொடுத்தவர்களின் பெயர்கள் இருந்தன. ஆனால் அவற்றில் எதிலும் முராரிராயரின் பெயர் இருக்கவில்லை. முத்து ரத்னங்களின் மண்டபம், மாலை, நட்சத்திர மாலை இவற்றில் ஸ்ரீபாதங்களவரின் பெயர் இருந்தது. ஆனாலும் அவற்றின் பட்டியலை தயாரித்து, அவற்றை தங்களின் கட்டுப்பாட்டில் கொண்டு வந்து, பின் இவருடன் விவாதிக்கத் துவங்கினர். குண்டு மழை பொழியும் இடத்திலேயே மடத்து ஆட்களை தங்கவைத்தார்.*

*இவை அனைத்தையும் முராரி ராயரின் சேனாதிபதிகள், கோட்டை மேல் காவலுக்கு இருக்கும் காவலாளிகளிடமிருந்து அறிந்தனர். இவற்றை அனுபவித்தவாறு நின்றிருந்த மடத்து*

*பரிவாரம், முன்னர் என்ன ஆபத்து, விபத்து வரப்போகிறதோ என்று அஞ்சியவாறு இருந்தனர். முக்காலும் உணர்ந்தவரான ஸ்ரீசத்யபோதர், அமைதியாக இருந்தார்.*

**தே ந்ருசிம்ஹாபிதானாம் ஏகாம் மூர்த்திம் ஹம்ஸசிஹாய தஸ்யை ப்ராது: விப்ரப்ரார்த்திதா அர்ஹணாயை ॥** *- (ச.போ.வி.6.119)*

*ஹம்ஸ பரம்பரையில் சிம்மத்தைப் போன்றவரான ஸ்ரீசத்ய போதர், திவ்ய ந்ருசிம்ஹ பிரதிமா சாலிகிராமத்தை பெற்றுக் கொண்டு, அதை மன்யு சூக்தத்துடன் உபாசனை செய்யத் துவங்கினார். நாள் முழுவதும் உண்ணாமல், வெறும் தீர்த்தம் மட்டும் எடுத்துக் கொண்டு, உபாசனை செய்யத் துவங்கினார். உபாசனை செய்யத் தொடங்கி மூன்று நான்கு நாட்கள் ஆகியிருந்த போதே அதன் பலன் தெரியத் துவங்கியது. நவாப்பின் சேனையினர், நின்ற இடத்தில் / அமர்ந்த இடத்தில் கீழே விழத் துவங்கினர். போர் துவங்கவேயில்லை. ஆனால் அதற்குள் நம் சேனையினர் இறக்கத் துவங்கினரே, என்ன காரணம் என்று தெரியாமல் நவாப் கலக்க மடைந்தார்.*

**அஸ்மாகமேதர்ஹ்யஜனே ப்ரஜானாம் அபூதபூர்வேதிதராம் வினாஷ: ।**
**கஸ்மாதகச்மாதிதி யாவனேஷோ ஜனானப்ருச்சத்தத ஆதனேனான் ॥**
*(ச.போ.வி. 6.122)*

*என்றும் இல்லாதவாறு தனது சைன்யம் அழிவதைக் கண்டு நவாப் கவலைப்பட்டார். இது தெய்வத்தின் கோபமே என்று புரிந்தது. தனது நம்பிக்கைக்கு உட்பட்ட பலரை அழைத்து இதைப் பற்றி விசாரித்தார். ஆனால் யாரிடமும் இதற்கான சரியான பதில் கிடைக்கவில்லை. இறுதியில், தனது நண்பரான, சர்தார் ஜானோஜி நிம்பால்கரையே அழைத்தான்.*

*இந்த சம்பவங்களைப் பற்றி எதுவும் அறியாமல், நவாப்பின் ஆணைப்படி வேறொரு இடத்தில் வேறொரு வேலையில் இருந்த நிம்பால்கர், திருச்சிராப்பள்ளிக்கு திரும்பி வந்தபிறகு இவற்றைக் கேள்விப்பட்டார்.*

*குருவான ஸ்ரீசத்யபோதரின் செல்வங்கள் அனைத்தையும், நவாப் மற்றும் அவரது சர்தார்கள் தங்கள் வசப்படுத்தி விட்டார்கள். முராரிராயனை தோற்கடிப்பதற்காக, ஸ்ரீகளவரை, போர்க்களத்தில்,*

குண்டுகள் வந்து விழும் இடத்தில் தங்கவைத்திருக்கிறார்கள் என்று அறிந்தார். தானே நேரடியாக நவாப்பிடம் போய், குருகளுக்கு இத்தகைய அபராதங்களை செய்ததாலேயே, மேற்படி பிரச்னைகள் வருகின்றன என்று எடுத்துச் சொல்லவேண்டும் என்று நினைத்தார். ஆனால் அதற்குள் நிம்பால்கருக்கும், இதர சேனையினரைப் போல நோய் வந்தது. உடலில் சக்தியே இல்லை. ஆகவே, நவாப்பிற்கு உடனடியாக ஒரு கடிதம் எழுதினார்.

'நவாப் ஒரு விஷயம் அறியவேண்டும். ஸ்ரீசத்யபோத தீர்த்தர் மகா தபஸ்விகள். வீர சன்யாசிகள். அவருக்கு இந்த உலகமே தலை வணங்குகிறது. இந்த தேவதாபுருஷர் அனைவராலும் வணங்கப் படுபவர். அவரை சிறுமையுடன் பார்ப்பது தெய்வ துரோகம் ஆகும். அவர் மூலராம திக்விஜய ராமரை அனுகாலமும் பூஜிப்பவர். அத்தகைய குருகளை உங்களின் சர்தார்கள் மிகவும் துன்புறுத்து கிறார்கள். அவரது செல்வங்களை அபகரித்துள்ளனர். இத்தகைய துரோகத்திற்கு நீங்கள் மேலும் பிரச்னைகளை சந்திக்க நேரிடும். அவர் கடந்த ஐந்து நாட்களாக முழு உபவாசம் இருக்கிறார். இந்த பாவம் உன்னையே சேரும். உடனடியாக அவரிடம் போய், அவரது உபவாசத்தை நிறுத்துமாறு வேண்டு. அப்படி செய்தால் மட்டுமே உனது சைன்யம் தப்பிக்கும். இவரின் அருளே உனக்கு பல நலன்களைக் கொடுக்கும். இவருக்கு செய்யும் துரோகம் உனக்கு கஷ்டங்களையே கொடுக்கும். அந்த யதிவரேண்யர் இப்படி உபவாசம் இருந்தால், அது உனது உயிருக்கும் ஆபத்து விளை விக்கும். இப்போதே நீ விழித்துக் கொள்வது நலம். அவர் எனக்கு மட்டுமல்ல, உனக்கும் குருகளே. 'முராரி மாத்ர தேஷிகோ ந இயந்து சர்வதேஷிக:'.

மேற்கண்டவாறு நவாப்பிற்கு எச்சரிக்கைச் செய்தி கொடுத்தார் நிம்பால்கர்.

நவாப்பின் சிப்பந்திகள், மடத்து செல்வங்களைக் கண்டு வியப்படைந்தனர். ராஜாதி ராஜர்களின் அரண்மனையில் சிக்காதவை அனைத்தும் இங்கே கிடைக்கின்றன. வைரம், பச்சை நீலம், மாணிக்கம், தங்கத்தினாலான பெரியபெரிய குடங்கள், கங்காளங்கள் ஆகியவற்றை எண்ணமுடியாமல் அப்படியே கட்டி வைத்தனர். இவர் உலகத்தின் ராஜருக்கே ராஜா. ராஜர்களை

ஆளும்படியான விரக்தி கொண்ட சக்ரவர்த்திகள். வேதாந்த சாம்ராயத்தின் அதிபதி இவர்தான் என்று வியப்படைந்தனர்.

நவாப் உடனடியாக நிம்பால்கரை அழைத்தான். 'உடனடியாக குருகளுக்கு பழம், பழச்சாறுகளை அனுப்பவும். அவர் உபவாசம் செய்ய வேண்டாம்'. ஸ்ரீமடத்திற்கு / குருகளுக்கு யாரும் எவ்வித தொந்தரவுகளையும் கொடுக்கக் கூடாது என்று ஆணையிட்டார். ஆனால், நவாப்பிற்கு இன்னும் சில சந்தேகங்கள் இருந்தன. நிம்பால்கருக்கு இதைப் பற்றி தெரிய வந்தது. ஸ்ரீமடத்திற்கு தேவையான, பூ, பழம், பால், வெல்லம் முதலானவைகளை அனுப்பி வைத்தார். தனது உடல் நலத்தையும் பொருட்படுத்தாமல், உடனடியாகக் கிளம்பி, ஸ்ரீசத்யபோதரின் / ஸ்ரீமடத்தின் மகிமை களைப் பற்றி விளக்குவதற்கு, புறப்பட்டு வந்தார் நிம்பால்கர்.

அதற்குள் அரண்மனை கருவூலத்தினர், ஸ்ரீமடத்தின் செல்வம், பெட்டிகள் அனைத்தையும் திறந்து, கணக்கெடுத்து, பட்டியலிட்டு, ஒரு காகிதத்தில் அவற்றை தெளிவாக எழுதிக் கொண்டு வந்தனர். பல கடிதங்களும் கிடைத்தன. ஸ்ரீசத்ய போதருக்கு முந்தைய நவாப்பினர் கொடுத்த மோதிரங்கள், அடையாள முத்திரைகள் இருந்தன. ஸ்ரீசத்யப்ரியருக்கு, தென்னிந் தியாவின் மூலை மூலைகளில் இருந்த ராஜர்கள், நவாப்கள் கொடுத்த கடிதங்கள் இருந்தன. அவர் / ஸ்ரீமடத்தினர், எந்த இடத்திற்கும் எப்போது வேண்டுமானாலும் வரலாம். எந்த நவாப்பினாலும் அவர்களுக்கு எவ்வித தொந்தரவுகளும் வராது என்று ஒரு கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. இவற்றை யெல்லாம், தற்போதைய நவாப் பார்த்தார்.

★★★

## கவலைப்பட்ட நவாப்

ஸ்ரீகளவரிடம் இருந்த எந்தவொரு செல்வமும் முராரிராயரு டையது அல்ல. அனைத்தும் முந்தைய நவாப்கள், ராஜாக்கள், செல்வந்தர் ஆகியோர் பல நேரங்களில் தமது குரு பக்தியின் அடையாளமாக, குரு தட்சிணையாக அர்ப்பித்ததே ஆகும். இதையெல்லாம் கண்ட நவாப்பிற்கு அனைத்தும் தெளிவாக புரிந்தது. தான் செய்த தவறினை அறிந்தார். வேறு மடத்தை

சேர்ந்தவனான கோனய்யனின் மகனான ராமய்யனின் பேச்சைக் கேட்டு தான் மோசம் போனேன் என்று சொல்லி கவலைப்பட்டார் நவாப்.

**ஸத்ருச்சா நீதி சம்பன்ன: ததானீம் ஸ்வார்த்தபத்ரிகாம் ।**
**நிஷ்கலங்கான் குரூன் ஸ்ருத்வா பஸ்சாத்தாபயுதோபவத் ॥**

'ஜானோஜி ! இந்த குருகளை நன்றாக கவனித்துக் கொண்டு, அவரது அருளுக்குப் பாத்திரராவது நமது கடமை. அவருக்கு அனைத்துவித வசதிகளையும் செய்து கொடுக்கவும். அதற்கான ஏற்பாடுகளை செய்யவும்' என்றார் நவாப். அவரது அனைத்து செல்வங்களையும், பொருட்களையும் திரும்ப பத்திரமாக அவருக்கே அனுப்பி வைத்தார். 'அவர் தமது ஸ்னானம், பூஜை, ஜபதபங்களை செய்தவாறு, மகிழ்ச்சியாக இருக்கட்டும்' என்றான்.

ஜானோஜி நிம்பால்கர், ஸ்ரீகளவரிடம் வந்து, சாஷ்டாங்கமாக வணங்கி, தனது நோயை குணப்படுத்துமாறு வேண்டினான். 'தனது தவறினாலேயே, ஸ்ரீகளவர், ராமனாதபுரத்திலிருந்து, திருச்சிராப் பள்ளிக்கு வரவேண்டியதாயிற்று. இங்கு வந்தபிறகும், தனக்குத் தெரியாமலேயே பலவித பிரச்னைகளை ஸ்ரீகளவர் சந்திக்க வேண்டி யதாயிற்று. அதற்கான என்னை மன்னியுங்கள்' என்று வேண்டினார்.

'ஸ்வாமி, தற்போது ஆஷாட மாதம். தாங்கள் ஒன்பது நாட்கள் உபவாசம் செய்திருக்கிறீர்கள். தங்களில் தவ வலிமை அபாரமானது. எனக்கு அருளி, எனது பிரச்னைகளை தீர்த்து வைக்கவும்' என்று வேண்டினான். மேலும் 'திருக்காட்டுப்பள்ளிக்கு அனுப்பி வைத்த தேவர பெட்டிகளை மறுபடி வரவழைக்கவும். இங்கு, தங்களுக்கும் தங்கள் பரிவாரத்திற்கும் எவ்வித தொந்தரவும் வராமல் நான் பார்த்துக் கொள்கிறேன். அனைத்து செலவுகளையும் நான் ஏற்றுக் கொள்கிறேன். தாங்கள் இந்த காவேரி நதிக்கரையில், புனிதமான மிகச்சிறந்த தலத்தில் தங்களது சாதுர்மாச விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்' என்று வேண்டினான்.

★★★

## காவேரி தீரத்தில் முதல் சாதுர்மாச விரதம்

**இஹ ஸ்வைரி நிர்விஜாரி காவேரிதீர உத்தமே ।**
**ஆஸீதா சதுரோ மாஸன் வாசயோக்யான் பவத்விதி ॥**

*(ச.போ.வி. 6.139)*

*நிம்பால்கரின் வேண்டுகோளுக்கிணங்க, ஸ்ரீசத்யபோதர், அந்த காவேரி தீரத்திலேயே தனது சாதுர்மாத விரதத்தை பின்பற்றினார். அரசு பிரச்னைகள் தீர்ந்ததால், ஸ்ரீமடத்து சிஷ்யர்கள், பொதுமக்கள் என கூட்டம் நிரம்பி வழிந்தது. நாட்டின் பல்வேறு பகுதி களிலிருந்து, மடத்து சிஷ்யர்கள், சாதுர்மாச விரதத்தில் பங்கேற்க கிளம்பி வந்தனர். தினந்தோறும் பாட, பிரவசனம், பூஜை, முத்ரா தாரணம், தினமும் ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னதானம், எப்போதும் வேத கோஷம், ஹரிகதை, ஹரிதாசர்களினால் எப்போதும் தேவரநாமங்களை பாடுதல் என நான்கு மாதங்கள் ஞான காரியங்கள் நடந்தன. காவேரி தீரத்தில் மிகவும் விமரிசையாக முதல் சாதுர்மாச விரதம் நிறைவேறியது.*

*ஸ்ரீகளவரின் மகிமை, தவ வலிமை, பாட பிரவசங்களின் புகழ் என இவை அனைத்து இடங்களிலும் பரவிற்று. ஸ்ரீசத்யபோத தீர்த்தரின் புகழ் திக்கெட்டும் பரவியது. சம்ஸ்தானத்து அனைத்து செல்வங்களும், திரும்பி வந்து, மேலும் செல்வம் அதிகரித்தது.*

*ஒரு நாள், நவாப், ஜானோஜி நிம்பால்கரை அழைத்துக் கொண்டு, ஸ்ரீசத்யபோதரின் இடத்திற்கு வந்தார். தனது நிலையை சொல்லிக் கொண்டார். 'ஸ்வாமிஜி! எனது படை மிகப் புகழ் பெற்றது. மிக வலிமையானது. உலகத்தையே வெல்லக் கூடியது. ஆனால், கடந்த ஒரு மாதகாலமாக முயன்றும் இந்த திருச்சிராப் பள்ளி கோட்டையை எங்களால் கைப்பற்ற முடியவில்லை. இந்த கோட்டையை பிடித்து வைத்திருக்கும் முராரிராயன், உங்களின் ஆசிர்வாதத்தைப் பெற்றிருக்கிறார். இந்த கோட்டை முதலில் என்னுடையதே ஆகும். இவர்கள் பறித்துக் கொண்டிருக்கின்றனர். என் கோட்டையை திரும்ப எனக்கே கொடுக்க அருளுங்கள், குருவே. தாங்கள், தங்கள் சிஷ்யனிடம் சொல்லி எனக்கு உதவி செய்யுங்கள் ஸ்வாமி'. என்றான். 'தங்களுக்கு பாரதம் முழுக்க முகலாயர்களால், முஸ்லிம் நவாப்களினால், எங்கும் எவ்வித தொந்தரவும் வராமலிருக்க, ஒரு தாமிர பட்டயம் எழுதிக்*

கொடுக்கிறேன். உங்கள் பயணங்களிலும் உதவி செய்கிறேன்' என்றான்.

'முராரிராயர் அவரது அனைத்து செல்வங்களையும், யானை, ஒட்டகம், குதிரை என அனைத்தையும் எடுத்துக் கொள்ளட்டும். எனக்கு என் கோட்டையை மட்டும் திருப்பிக் கொடுக்கச் சொல்லவும்' என்றார். கோட்டையில் இருக்கும் அனைத்து செல்வங்களையும் பத்திரமாக எடுத்துச் செல்ல நானே உதவுவேன் என்றார். ஸ்ரீசத்யபோதரும், இதைப் பற்றி முராரிராயனிடம் ஆலோசித்து செய்தி அனுப்புவதாகக் கூறினார்.

பின், ஸ்ரீகளவர் வெகு நேரம் யோசித்தார். போர் வரக்கூடாது. ஆயிரக்கணக்கில் இந்து மக்கள் போரில் சாவதை தடுப்பது எப்படி? இதற்குள், நிம்பால்கருக்கு வந்த நோய் தீர்ந்து, ஸ்ரீகளவரின் அருளினால் முந்தைய ஆரோக்கியத்தை, நலனை திரும்பப் பெற்றார். சாதுர்மாதத்தில் ஸ்ரீகளவர் செய்த பூஜையின் நிர்மால்ய தீர்த்தத்தை தினமும் அருந்தியதன் பலனால், தனது ஆரோக்கியத்தை திரும்ப அடைந்தார்.

ஸ்ரீகளவர் நிம்பால்கரை, திருச்சிராப்பள்ளி கோட்டையில் இருந்த முராரிராயரிடம் - அவனது தற்போதைய நிலை என்ன? இதைப் பற்றிய அபிப்ராயம் என்ன? - என்றெல்லாம் தெரிந்து வருவதற்காக அனுப்பினார்.

★★★

## நவாப்பிற்கு கோட்டையை திரும்பக் கொடுத்தது

நிம்பால்கரும் முராரிராயரைக் கண்டு பேசினார். முராரி ராயனுக்கு கோட்டைக்கு வெளியில் என்ன நடக்கிறதென்றே தெரியாமல், அதன் தொடர்பு அற்றுப் போய், ஆறு மாதங்கள் ஆகிவிட்டன. உள்ளே இருந்த உணவுப் பொருட்கள் தீரத் துவங்கின. குத்தியில் இருந்த தனது ராஜ்யத்திலிருந்து வரவேண்டிய உதவிகள் இன்னும் வந்திருக்கவில்லை. முராரிராயரின் ஆரோக் கியமும் நலிவடைந்திருந்தது. ஆகவே, முராரிராயனும் இந்த கோட்டையை காலி செய்து, விட்டுக் கொடுக்கும் எண்ணத்தில் இருந்தான். ஸ்ரீகளவர் சொன்னது போல, கோட்டையில் இருந்த தனது அனைத்து பொருட்களையும் எடுத்துக்கொண்டு, பாது

*காப்பாக தனது குத்தி அரண்மனைக்குச் சென்றுவிடுவதாக ஒப்புக் கொண்டார். அப்படிச் செய்கையில் நடுவில் ஏதும் பிரச்னை செய்யக் கூடாது என்று வேண்டுகோள் விடுத்தான். ஸ்ரீகளவர் இதை நவாப்பிடம் கூறினார். ஸ்ரீகளவரின் முன்னிலையில் நவாப் இந்த ஏற்பாட்டிற்கு ஒப்புக்கொண்டார்.*

**அதோ தத்யைவாஸ்த்விதி சத்யவாசே**
**வதத்யமுஷ்மின்ய வனாவனீஷே ।**
**வயோதி விஷ்வஸ்ய நிஜஸ்ய தஸ்ய குரோஸ்ச**
**விஷ்வஸ்ய ருதேக்ஷணஸ்ய ॥**
**பஹி: ச துர்காத் நிரகாத் யுதோபி: ஸ்வவஸ்துபி: ஹஸ்திமுக்யை:**
**சமஸ்யை: ।**
**ஸ்வயம்தனீயஸ்ய க்ருதாபிவாதோ குரோஹ்ருதா**
**துந்துபினி: ஸ்வஸேன ॥**
*(ச.போ.வி. 7.11,12,13)*

*ஸ்ரீகளவரின் வாக்கில் அதிக நம்பிக்கை வைத்து, எப்போதும் தன்னை அவர் காப்பார் என்று எண்ணி, தனது அனைத்து செல்வங் களையும் எடுத்துக்கொண்டு, யானை, ஒட்டகம், குதிரைகளை அழைத்துக்கொண்டு, கோட்டையில் வாயிலை திறந்து கொண்டு வெளியே வந்தார். நகாரி ஓசையுடன் ஒரு வெற்றிப் பயணம் போவது போலவே புறப்பட்டார். நண்பனான நிம்பால்கரிடமிருந்து விடைபெற்றவாறு திருச்சிராப்பள்ளியிலிருந்து புறப்பட்டு, ஸ்ரீரங்கத்திற்கு வந்து ரங்கனின் தரிசனம் பெற்றார். ஸ்ரீசத்யபோத தீர்த்தரை, முராரிராயர் மற்றும் நிம்பால்கர் இருவரும் சேர்ந்து வந்து வணங்கினர். அவருக்கு பாதபூஜை செய்து, மந்திராக்ஷதை மற்றும் ஆசிகளைப் பெற்று, முராரிராயன் தனது குத்தி கோட்டைக்கு 1844 ஆகஸ்ட் 27ம் தேதி வந்து சேர்ந்தார். இந்த கோட்டைக்கு முஜிபுர் ஜங்க் என்பவரை இந்தக் கோட்டையின் காவலுக்கு அமர்த்தினார். இந்த தகவல், ஆனந்தரங்க பிள்ளை அவரின் புத்தகத்தில் விவரிக்கப் பட்டுள்ளது. மேலும் 'Making of Modern India' புத்தகத்திலும் இந்த சம்பவம் வெளியாகியுள்ளது.*

*முன்னர், நிம்பால்கரும் சேனாதிபதிகளும், ஸ்ரீசத்யபோதருக்கு, அவர் எங்கு வேண்டுமானாலும் எந்தவித பிரச்னைகளுமின்று பயணம் செய்வதற்காக, ராஜமுத்திரைகளுடன் தக்க கடிதங்களையும் கொடுத்து, பின் அனைவரும் கோட்டையில் பிரவேசித்தனர்.*

சம்ஸ்தானத்திற்கு நாட்டின் நலனின் மேல் இருக்கும் அக்கறையையும், நாட்டு அரசர்கள், நவாப்கள் ஆகியோருக்கு ஸ்ரீகளவர் மேல் இருக்கும் நம்பிக்கை, பக்தி ஆகியவற்றையும் கண்டு அனைவரும் மகிழ்ந்தனர். ஸ்ரீகளவர் மூலமாகவே தனது தன் கோட்டை திரும்பக் கிடைத்தது என்றறிந்து நவாப் அவருக்கு நன்றியுள்ளவன் ஆனார்.

குருகளின், தபஸ்விகளின் பேச்சினை / வாக்கினை எப்படி கேட்டு நடந்து, அரசாட்சியிலும் அவர்களது ஆசியைப் பெறுவது என்பதை முராரிராயர் நிரூபித்துக் காட்டினார். கோட்டையை திருப்பிக் கொடுத்தாலும் உண்மையில் முராரிராயரே வென்றார். கோட்டையை திரும்பப் பெற்றாலும், நவாப் உண்மையில் தோற்றார். ஆறு மாதங்கள் போரிட்டு மீட்க முடியாத கோட்டையை, ஸ்ரீசத்யபோதர் மூலமாக தூது அனுப்பி பெற்றுவிட்டதை அறிந்த, தென்னிந்தியாவின் அனைத்து நவாப், மொகல் சர்தார்களுக்கு தனது ஆளுமையை நிரூபித்தார் ஸ்ரீகளவர்.

இதைப் போலவே, தனது 40 ஆண்டு கால பீடாதிபத்ய காலத்திலும், இந்துக்களை பாதுகாக்க, இந்தியர்களை பாதுகாக்க, கலாச்சார தத்வஞானங்களை காக்க, தக்க செயல்களை புரிந்த மகானுபாவர் ஸ்ரீசத்யபோத தீர்த்தர். பிராமண சமூகத்திற்கு, அவர்களின் சாதனைகளுக்கு, எந்த ராஜர் மூலமாகவும் எவ்வித தொந்தரவுகளும் வராமல் பார்த்துக்கொண்டு, அங்கங்கு சமரசம் சமாதானம் ஆகியவற்றை செய்து, அனைவரையும் காத்தவர் ஸ்ரீசத்யபோத தீர்த்தர். காவேரி தீரத்தில் மிக விமரிசையாக தனது சாதுர்மாதத்தை முடித்துக்கொண்டு, நவராத்திரி உற்சவத்திற்காக காவேரி ஜம்புகேஷ்வர க்ஷேத்திரத்திற்கு வந்தார். தினந்தோறும் பாட பிரவசனம், பண்டிதர்களின் பாராயணம், யக்ஞ யாகம், அன்னதானம், தங்க மண்டபத்தில் ஸ்ரீமூலராமனின் பூஜை என்று மிகச் சிறப்பாக நடந்து வந்தது.

★★★

## ஸ்ரீரங்கத்தில் தீபாவளி

தீபாவளி பண்டிகை வந்தது. பலிபிரபதா அன்று சம்ஸ்தானத்து மூலதேவருக்கு மகா அபிஷேகம் நடக்கவேண்டும். அதற்காக ஸ்ரீசத்யபோத தீர்த்தர் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திற்கு வந்தார்.

**சுதாஷனானாம் ப்ரதமஸ்ய விஷ்ணோ**
**ர் மஹாபிஷேகம் ப்ரதமம் விதாதும் ।**
**ஸ்ம்ருதிஸ்திதானாம் ப்ரதமம் ஸ்தலானாம்**
**ஜகேத ரங்கம் ப்ரதமோகுரூணாம் ॥** *(ச.போ.வி.7.17)*

*புராணங்களில் போற்றப்பட்ட தலம். பூ-வைகுண்டம் காவேரியின் ஸ்ரீரங்கம். இங்கு ஸ்ரீரங்கனாதர் வசிக்கும் இடம். இவர் சுயம்பு. ஸ்ரீஹரி தானே வந்து நிலைபெற்ற சச்சிதானந்த விக்ரகம். அவனின் சன்னிதியில், ஸ்ரீமூலராம திக்விஜய மூலசீதாதேவியரின் மகா அபிஷேகம் நடைபெற்றது. பால், தயிர், நெய், தேன், சர்க்கரை, வாழைப்பழம் போன்றவை நைவேத்தியம் செய்தார். தமது திக்விஜயத்தின் நினைவாக பிராமணர்களுக்கு தங்க நாணயங்களை தானம் செய்தார். அங்கிருந்து திருக்காட்டுப்பள்ளிக்கு வந்தார்.*

**த்ரிகாடபல்யா அதிபேன பூர்வம் சபக்தி சம்ப்ரார்த்தனமேவ ஹூத:।**
*(ச.போ.வி. 7.21)*

*திருக்காட்டுப்பள்ளியின் பீமராஜன், ஸ்ரீசத்யபோதரின் ப்ரியமான சிஷ்யர். சிஷ்யருக்கு குருவிடம் அபாரமான பக்தி. குருகளை தனது பிரம்மாண்ட அரண்மனையில் தங்கவைத்தார். தான் முத்ராதாரணம் செய்து கொண்டார். நவாப்பிடமிருந்து ஆபத்து வந்தபோது, இவரே சில நாட்கள், சம்ஸ்தானத்து தேவர பெட்டி களை தன்னிடத்தில் பத்திரமாக வைத்திருந்தவர். அதற்காக, ஸ்ரீசத்யபோதர் இவருக்கு விசேஷமாக அருளினார்.*

★★★

## தஞ்சாவூர் திக்விஜயம்

*ஆண்டு 1845. தஞ்சாவூரை பிரதாப சிம்ம போஸலே ஆண்டு வந்தார். தார்மிக சிந்தனையுள்ளவர். மகாராஷ்டிர பிராமணர். பேஷ்வா சாம்ராஜ்யத்தின் இத்தகைய வீர தீர மராடா சர்தாரின் தைரிய பராக்ரமங்கள், பாரதம் முழுக்க பேசப்பட்டு வந்தது. இத்தகைய சாம்ராஜ்யத்தின் அனைத்து சேனாதிபதி, சர்தார் களுக்கெல்லாம் வழிகாட்டி, தத்வோபதேசம் செய்து, தக்க வழியினைக் கூறியவரே ஸ்ரீசத்யபோத தீர்த்தர். தனது தலைநகரான தஞ்சாவூருக்கு வருமாறு ஸ்ரீசத்யபோத தீர்த்தரை, பிரதாபசிம்மன் அழைத்தார்.*

நிருபேண தஞ்சாபுர பாலகேன ப்ரதாப ஸிம்ஹேன ஸ பிக்ஷுசிம்ஹ:।
அகாததாகாரித அதனேனை: புரம் ததன்யை: ப்ரபுபிஷ்ச பௌர்யை:॥
*(ச.போ.வி.7.22)*

*தஞ்சாவூரின் பிரதாப சிம்மன் மற்றும் அக்கம்பக்கத்தில் இருந்த பிற சர்தார்கள், பிரபுகள் இவர்களால் அழைக்கப்பட்டு, ஸ்ரீசத்யபோத தீர்த்தர் தஞ்சாவூரை அடைந்தார். ராஜ மரியாதை, சத்ர, சாமர, அலங்கரிக்கப்பட்ட யானைகள், ரத பதாகைகளுடன் தங்க பல்லக்கில் ஸ்ரீசத்யபோதரை அமர்த்தி, ஊர்வலமாக அழைத்து வந்தார் ராஜர். பிரதாப சிம்மன் மற்றும் இதர சர்தார்கள், இந்த ஊர்வலத்தின் முன் பாத யாத்திரையாக நடந்து வந்தனர். வாத்தியங் களின் ஒலி காதை அடைத்தது. அனைத்து மக்களின் சார்பாக அவரை வணங்கி, ராஜர், சம்ஸ்தானத்தை பிருகதீஸ்வரர் ஆலயத்தில் தங்க வைத்தார். அங்கிருந்த மிகப்பெரிய சிவ ஆலயத்தில் ஸ்ரீகளவர் தங்கினார். ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னதானம், வாக்யார்த்த, வித்வத் சபை ஆகியவை நடந்தன. பிரதாப சிம்மன், ஸ்ரீமூலராம திக்விஜய ராமருக்கு பற்பல முத்து, ரத்தின, ஆபரணங்களை, பதக்கங்களை சமர்ப்பித்தான்.*

*சம்ஸ்தானத்து பண்டிதர்களுக்கு வஸ்திரம், தானங்களை அளித்தார். அரண்மனையின் சார்பாக அரசர், ஸ்ரீசத்யபோதருக்கு மரியாதை செலுத்தியபிறகு, மற்ற பிரபுகள், செல்வந்தர்கள் ஆகியோர் குருசார்வபௌமருக்கு தங்களின் மரியாதைகளை செலுத் தினர். மூன்று மாதங்கள் வரை ஒவ்வொரு செல்வந்தரும் ஒவ்வொரு நாளுக்கான செலவை தங்களுக்குள் பகிர்ந்து ஏற்றுக் கொண்டனர்.*

*கல்விக்கு கேந்திரமான தஞ்சாவூரில் ஸ்ரீகளவர் மூன்று மாதங்கள் தங்கியிருந்தார். அனைவரிடமிருந்தும் தக்க மரியாதை களைப் பெற்றார். ஆயிரக்கணக்கானோர் பாட பிரவசனங்களுக்கு வந்து கொண்டிருந்தனர். இவை அனைத்தும் அங்கிருந்த அத்வைதர்களுக்கு, சைவர்களுக்கு பிடிக்கவில்லை. இதைப் பற்றி தவறாக பேசவும் தொடங்கினர். 'ஸ்ரீசத்யபோத தீர்த்தர் ஒரு வைஷ்ணவர். மாத்வர். எப்போதும் சைவ ஆகங்களை, இதர சாஸ்திரங்களை கண்டிப்பவர். சங்கரரை த்வேஷிக்கிறார். அத்வைதி களை எப்போதும் எதிர்ப்பவர். சிவ சர்வோத்தமன் என்னும் விஷயத்தை கண்டிப்பவர்' - என்றெல்லாம் பிரதாப சிம்மன்*

*எதிரிலேயே சொல்லத் துவங்கினர். அரசர் அனுமதி அளித்தால், தாங்கள் அத்வைதிகள் அனைவரும் ஸ்வாமிகளுடன் வாக்யார்த்தம் செய்து அவரை வாதத்தில் வெல்வோம் என்றனர்.*

*இதைக் கேட்ட பிரதாப சிம்மன், ஒரு மந்திரியை அழைத்து - 'இந்த சைவ பண்டிதர்கள் ஸ்ரீகளவரைப் பற்றி எவ்வளவு தவறாகப் புரிந்து கொண்டிருக்கின்றனர். நீங்கள் ஸ்ரீசத்யபோதரிடம் சென்று, மற்றவர்களை விசாரித்து, உண்மை நிலையை அறிந்து வாருங்கள்' என்றார்.*

*அந்த மந்திரியும், ஸ்ரீசத்யபோதரின் சன்னிதிக்கு வந்து மிகுந்த மரியாதையுடன் வணங்கினார். 'ஸ்வாமி, தாங்கள் எப்போதும் சைவ சித்தாந்தத்தையும், மாயா சாஸ்திரங்களையும் கண்டித்து வருவதாக நமது பண்டிதர்கள் சொல்கின்றனர். தமக்கு கிடைத்த ராஜ மரியாதை, வைபவங்களை இந்த பண்டிதர்கள் எதிர்க்கின்றனர். தாங்கள் தயவு செய்து, இவர்களுக்கு, எது சரியானது, எது தவறான பாதை என்பதை விளக்குங்கள்' என்று வேண்டினார்.*

சுசௌம்ய இத்தம் ஸசிவேன ப்ருஷ்ட: ஸ பவ்ய போதஸ்ய ததா
ஸ்திதாஸ்ய: । *(ச.போ.வி.7-32)*

*புன்னகையுடன், மிகவும் அழகாக, ஸ்ரீசத்யபோத தீர்த்தர் பதிலளித்தார். மிகவும் அறிவுபூர்வமாக பேசத் துவங்கினார். 'மந்திரியாரே!*

சஸீத ராமஸ்ருதி பாலகாசார்சர்யஸ்ய பூஜாசரணே யதாகுலம் ।
அனுத்தமஸ்யோ ருமதேர்மதஸ்ய வர்னேவனீயஷ
ப்ரிய தீக்ஷிதா:ஸ்ம: ॥ *(ச.போ.வி.7.34)*

*நாம் மூலராம திக்விஜய வேதவியாசரின் பூஜையின் எவ்வளவு தீக்ஷை வைத்திருக்கிறோமோ, அதே அளவு தீக்ஷை, உலகத்திலேயே மிகச்சிறந்த மத்வ மதத்தின் ரக்ஷணையிலும் வைத்திருக்கிறோம். வெறும் வீணாக நாம் எதையும் தூஷிப்பதில்லை.*

ததாபி வித்யாம் ப்ரஜதோ விபக்ஷான் பலேன மாஹ்வாஸ்ய
ஹி போத்ய வந்தூன் ।
க்ருதம் பவத்பி: பரிபூஜனம் நோ அசஹந்த ஏதே
ஹ்யன்ருதம் வதந்தி ॥ (ச.போ.வி.7.35)

*பிற மதங்களை நான் வெறும் ஜம்பத்திற்காக எப்போதும் எதிர்த்ததில்லை. அவர்களை எப்போதும் நாம் வலுக்கட்டாயமாக வாக்யார்த்தத்திற்கு அழைக்கவில்லை. அவர்கள் நம் தத்வத்தை கண்டித்தால், அதை கண்டித்து கிரந்தம் எழுதினால், அவர்களே வந்து நம்மை விவாதத்திற்கு அழைத்தால் மட்டுமே, நாமும் உண்மையான நோக்கத்துடன், அவர்களின் மதங்களில் இருக்கும் தோஷங்களை எடுத்துக் காட்டி கண்டிக்கிறோம். இங்கு கண்டனம் என்றால் எப்போதும் அந்த மனிதர்களை கண்டிப்பது என்று பொருள் அல்ல. அந்த தத்வ சாஸ்திரத்தை, பிரமாணங்களை கண்டிக் கிறோம் என்று பொருள். அதையே நாம் செய்கிறோம். இதையே நீங்கள் போஸலேயவரிடம் சொல்லவும் - என்று ஸ்ரீகளவர் அந்த மந்திரியிடம் கூறினார்.*

**ப்ரசாரணாதே: சமயே ஸ்வயம் தே சமேத வக்ஷம் முதி ந: க்ஷிபேயு:॥**
*- ச.போ.வி. 7.36*

*‘எமது பாட பிரவசன நேரங்களில் அவர்கள் வந்து எமது சித்தாந்தத்தை எதிர்த்தால், நாம் அமைதியாக இருப்பது எப்படி சாத்தியம்? அப்போது நாம் கண்டித்தே ஆகவேண்டியிருக்கிறது’ என்றார்.*

*ஸ்ரீசத்யபோதரின் இந்த சமயோசிதமான, அறிவார்ந்த பதிலைக் கேட்டு, பிரதாப சிம்மன் மற்றும் அவர் மந்திரிகள் மிகவும் திருப்தி யடைந்தனர். அவர் சொல்வது வாஸ்தவமே என்று நினைத்தனர். போஸலே அவர்கள், அந்த அனைத்து அத்வைத பண்டிதர்களையும் அழைத்தார். தனிமையில் அவர்களுடன் பேசத் துவங்கினார்.*

**கதாந்த்ர குத்ராவிட சாதிஜாதா த்வஜாதயோ துஷ்டதியோ ஹி யூனம் ॥**
*- ச.போ.வி.7-39*

*‘நீங்கள் அனைவரும் எப்போதும் உங்களுடன் இருப்பவர் களுடன் சண்டையில் ஈடுபடுகிறீர்கள். எப்போதும் பொய் பேசுவதே உங்களுக்கு தொழிலாக ஆகிவிட்டது. புண்ணிய பாவங்களின் அறிவு உங்களுக்கு இல்லை. நீங்கள் கண்டிப்பாக ஸ்ரீசத்யபோதரிடம் வாக்யார்த்தம் செய்யுங்கள். உங்களால் முடிந்தால் அவரை அதில் வெல்லுங்கள்’.*

**சஹாதுனாதேன தபஸ்வினர்த்ததியா ப்ரசங்கம் குருத ப்ரகாமம் ॥**
*- ச.போ.வி.7.41*

*'ஒரு வேளை நீங்கள் அந்த வாக்யார்த்தத்தில் தோற்றுவிட்டால், அரசு உங்களுக்குக் கொடுத்த வீடு, பரிசுகள் என அனைத்தையும் திரும்பப் பெற்றுக் கொள்வேன்' என்று கர்ஜித்தார் அரசர். பண்டிதர்களுக்கு பயம் உண்டாயிற்று. தமது தவறை உணர்ந்தனர். ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் மிகச்சிறந்த வித்வாம்சர். அவரை தோற்கடிப்பது நம்மால் சாத்தியமில்லை. ஆனால் அவர் மாத்வர், மத்வரின் பீடாதிபதிகள். நம்மை பார்த்து, நமக்கு அவர் மரியாதை கொடுத்தால் போதுமானது. நமக்கும் அத்தகைய தபஸ்விகளின் ஆசிர்வாதம் தேவை என்று அனைத்து சைவர்களும் கூறினர்.*

*பிரதாப சிம்மனின் மகாமந்திரியான விட்டலபாபா அவர்கள், அன்றே அனைத்து அத்வைத பண்டிதர்களையும், வைதிகர்களையும் அழைத்துக்கொண்டு ஸ்ரீசத்யபோத தீர்த்த ஸ்வாமிகளின் சன்னிதிக்கு வந்தார். அனைவரும் ஸ்ரீபாதங்களவரை சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினர்.*

**க்ஷமீஷ்வராஸ்மாத் விஹிதாபராதம்**
**க்ஷமஸ்வ சாதோ த்வமிதி ப்ருவந்த: ।**
**கதாபிமானா: க்ருதத் ஸமீக்ஷா:**
**மனீஷிணோமி சமனம் சிஷுஸ்தம் ॥** *(ச.போ.வி.7.47)*

*'யதிவரேண்யரே, நாங்கள் செய்த தவறுகளை மன்னியுங்கள்' என்றனர். விட்டலபாபா கொண்டு தந்த பட்டு வஸ்திரங்களையும், ஸ்ரீமடத்து சார்பாக வெள்ளி பாத்திரங்களையும், ஸ்ரீகளவர் அந்த பண்டிதர்களுக்கு வழங்கி, அவர்களுக்கு மரியாதை செலுத்தி, அவர்களிடம் அன்புடன் பேசி அனுப்பி வைத்தார். இந்த சம்பவத்தால், தஞ்சாவூரில் ஸ்ரீகளவரின் புகழ் மேலும் பரவத் துவங்கியது. அனைத்து மடத்து பண்டிதர்களும் வந்து, ஸ்ரீகளவருடன் அளவளாவி, தங்கள் சாஸ்திரங்களைப் பற்றி அவருடன் வாக்யார்த்தம் செய்து, ஸ்ரீபாதங்களவரின் பாண்டித்யத்தைக் கண்டு வியந்து, மகிழ்ந்து பின் திரும்பினர்.*

★★★

## கும்பகோண திக்விஜயம்

*ஸ்ரீகளவர் அங்கிருந்து கும்பகோணத்திற்கு திக்விஜயம் செய்தார். சாரங்கபாணி மற்றும் கும்பேஸ்வர சன்னிதிகள் இருக்கும் அந்த ஊருக்கு, ஆனந்ததீர்த்தாச்சார் முதலான தனது பண்டித குழாமுடன் வந்தார். கும்பகோணம் பண்டிதர்களின் ஊர். அங்கு ஸ்ரீகளவர் பல நாட்கள் தங்கியிருந்தார். தினமும் பிரம்மசூத்ர பாஷ்ய பாடம் காலையில் நடைபெற்றது. ஒரு முறை பாடம் நடந்து கொண்டிருக்கும்போது 'அத்வைதயோ பதோன்யைக தரேண சன' என்னும் வேத வாக்கியத்தில் வந்த கருத்து வேறுபாட்டினால் சர்ச்சை உண்டாயிற்று. பல பண்டிதர்கள் தங்களின் புத்தகத்தில் இருப்பது போல 'சன என்பவரின் இடத்தில்' 'போகின்றனர்' என்று படித்தனர்.*

*அப்போது ஸ்ரீசத்யபோத தீர்த்தர் 'சன' என்பதே சரியானது. 'கச்சந்தி' இல்லை என்றார். அனைவரும், அப்படியெனில் 'சன' என்றால் என்ன என்று கேட்டனர். ஸ்ரீகளவர் அனைத்து இலக்கணக் குறிப்புகளுடன் அதனை விவரித்தார். அனைத்து இலக்கணக் காரர்களின் கருத்துகளையும் புரிய வைத்தார். இறுதியாக ஸ்ரீரகூத்தம ஸ்வாமிகளின்:*

**த்ருஷ்ட்வா தத்க்ஷண ஏவ டிப்பணீமமே ராகுத்தமீமுத்தமாம் ।**
**ஸ்ருத்யாம் தத்ர ச நீதி பாடமுசிதம் நிஸ்சித்ய நிந்த்யாம் நிஜாம் ॥**
**புத்திம் ச திதஷாதிகாரிகமிமம் கிரந்தம் ப்ரவக்தும் பவான் ।**
**தேவாம்ஷோர்ஹ இதி ஸ்புடம் க்ருதனவா: ப்ராணந்திஷுஸ்தம் குரும் ॥**

*(ச.போ.வி.7.57)*

*பாவபோத டிப்பணியை பார்க்குமாறு அறிவுறுத்தினார். அங்கு 'சன' என்னும் சொல்லை வைத்தே, உரை எழுதியிருக்கிறார். பண்டிதர்களும் அதைப் பார்த்து வியப்படைந்தனர். ஸ்ரீகளவரின் அற்புத மகிமையை புகழ்ந்தனர். கும்பகோணத்தில் சூத்ர பாஷ்ய மங்களம் செய்து, ஸ்ரீசத்யப்ரியரின் வாக்குகளை மனதில் நினைத்த வாறு நாச்சியார்கோயிலுக்கு வந்து சேர்ந்தார்.*

★★★

## நாச்சியார்கோயிலில் மகா சமாராதனை

*நாச்சியார்கோயில் ஸ்ரீனிவாச க்ஷேத்திரம். அங்கு, அபினவ விஸ்வாமித்ரர் என்று பெயர் பெற்ற, ஸ்ரீசத்யநாத தீர்த்தரின் சிஷ்யரான ஸ்ரீசத்யாபினவ தீர்த்தரின் மூல பிருந்தாவனம் இருக்கிறது. ஸ்ரீசத்யபோதர், ஸ்ரீனிவாசனின் தரிசனம் மற்றும் குருவான ஸ்ரீசத்யாபினவ தீர்த்தரின் ஆராதனையை முடித்துக்கொண்டு சோழ நாட்டின் பல க்ஷேத்திரங்களில் பயணம் செய்து, மன்னார்குடி, கமலாலய க்ஷேத்திரத்திற்கு வந்தார்.*

*சிவ உபாசகனான ராஜன் மற்றும் அவனது நாட்டினர், ஸ்ரீசத்யபோதரின் தாசானுதாசர்களாக இருந்தனர். அத்தகைய மக்களுக்கு நடுவில், ஸ்ரீசத்யபோதர், அவரது குருகளான ஸ்ரீசத்ய ப்ரியரின் மகா சமாராதனையை நிறைவேற்றினார். சைவரோ, வைஷ்ணவரோ அனைவருக்கும் ஸ்ரீகளவரிடம் அபார பக்தி இருந்தது. ஸ்ரீசத்யபோத தீர்த்தர் அனைத்து மத மக்களின் மேலும் பரிவு, கருணை காட்டத் துவங்கினார். அனைவரிடமும் அன்பு காட்டி வந்தார். அனைவருக்கும் நண்பரானார்.*

*பின் அங்கிருந்து புறப்பட்டு, ஸ்ரீசத்யபோதர், ஸ்ரீவராக க்ஷேத்திரமும், சுயம்பு க்ஷேத்திரமுமான ஸ்ரீமுஷ்ணத்திற்கு வந்தார். அங்கு ஸ்ரீமத் உத்தராதி மடத்து மூலசம்ஸ்தானத்திற்கு விசேஷ அதிகாரம் இருக்கிறது. பிரம்மன் பூஜித்த மூல உத்ஸவ பிரதிமை களை ஸ்ரீமத் உத்தராதி மடாதீசருக்கு, அந்த அர்ச்சகர்கள் ஒப்படைப்பது; இவரது சம்ஸ்தான பூஜைகளுடன் அந்த உற்சவ பிரதிமைகளையும் பூஜித்து, தங்க ஆபரணங்களுடன் மறுபடி ஆலயத்திற்கு அனுப்புவது வழக்கமாக இருக்கிறது.*

*ஸ்ரீசத்யபோத தீர்த்தர், தமது இரண்டாவது சாதுர்மாச விரதத்தை இந்த புண்ணிய க்ஷேத்திரத்தில் நடத்தினார். சம்ஸ்தானத்து மூல தேவருக்கு, லட்ச துளசி, லட்ச பூக்களை அர்ப்பிப்பதாக சங்கல்பம் செய்தார். கோடையில் உலர்ந்து போயிருந்த செடிகள், லட்ச புஷ்ப அர்ச்சனைக்காக மறுபடி துளிர்ந்தன. ஸ்ரீகளவர் செய்த சங்கல்பம் நிறைவேறியது. இந்த இயற்கையும் இவரது அதினத்தில் இருந்தது என்பதற்கு இதுவே சாட்சி.*

**குரோஸ் தபோபலேனாத மல்லேவல்லேம தல்லிகா ।**
**சாபுவனுதினம் நைக சஹஸ்ர சவப்ரதா ॥** *(ச.போ.வி.7.65)*

*ஸ்ரீராம வேதவியாசருக்கு லட்ச பூ, துளசி, சந்தனத்தை ஸ்ரீகளவர் சமர்ப்பித்தார்.*

**தத்ர ஸ்ரீதுலசீ தலைர் வகுசுமைஸ்யைர்ய லக்ஷ சங்க்யைசுமை: ।**
**சாதுர்மாஸ்ய தபஸ்யயா விவிதயா ஸ்மார்த்தேவ சுஸ்ரோஷயா ॥**
**ராமவியாச வலக்ஷ சூகரதனூன் தேவானசௌ ப்ரேணயன் ।**
**அஸாமாஸ சுகேன சர்வசுதியோ வித்தாம்ஸ்ச வித்தாதிபி: ॥**
*(ச.போ.வி. 7.66)*

*ஸ்ரீமுஷ்ண சாதுர்மாத விரதத்தில், லட்ச மல்லிகை அர்ப்பிப் பதோடு, ஸ்ரீகளவர் சில விசேஷ விரதங்களை அனுஷ்டித்தார். பாட பிரவசனங்களுடன் சாதனை தொடர்ந்து நடந்து வந்தது. ஸ்ரீகளவர் சாதுர்மாதத்தில் இருந்தபோது, ஆரணியின் மகாராஜா வெங்கடபதி மற்றும் ஆற்காட்டின் ராஜர் கிருஷ்ணாஜி பந்த் இருவரும், இந்த விரதம் முடிந்தபிறகு தங்களின் பகுதிக்கு விஜயம் செய்யுமாறு ஸ்ரீகளவரை கேட்டுக் கொண்டனர். ஸ்ரீகளவரும் அப்படியே புறப்பட்டார். மணிமுத்தாறு கரையில் இருக்கும் விருத்தாசலத்திற்கு வந்தார். தமிழ்நாட்டில் எந்த ஊருக்குப் போனாலும், அங்கு உத்தராதி மடத்து சிஷ்யர் ஒருவரை கண்டிப்பாகக் காணலாம். அந்தந்த இடத்தில் அவர்களுக்கு முத்ராதாரணை ஆகவேண்டியிருந்தது. தீர்த்த மந்திராக்ஷதை கொடுக்க வேண்டும். தேவரின் தரிசனம், அன்னதானம் ஆகியவை உத்தராதி மடத்தில் பல நூற்றாண்டுகளாக வழிவழியாக நடந்து கொண்டிருப்பவை. இது மூல சம்ஸ்தானத்தின் சிறப்பு.*

*ஸ்ரீசத்யபோத தீர்த்தர், விருத்தாசலத்திலிருந்து சிதம்பர க்ஷேத்திரத்திற்கு வந்தார். பார்வதிபதியை வணங்கினார். வைஷ்ண வரான ருத்ரதேவரை வணங்கினார். அங்கிருந்த வைஷ்ணவர்களால் ஸ்ரீகளவர் வணங்கப்பட்டார். அங்கிருந்து கிழக்கு நோக்கி பயணித்து புதுச்சேரிக்கு வந்தார். புதுச்சேரியின் அரசர் ஸ்ரீகளவரை மரியாதை கொண்டு வரவேற்றார். ரத்ன, வைர முதலான விலை மதிப்பற்ற ஆபரணங்களை ஸ்ரீகளவருக்கு காணிக்கையாகக் கொடுத்தார்.*

**கச்சன் க்ரமேணாச்ச பினாகினீ துனீ தீரஸ்திதான்**
**க்ராமவரான் பஹூனஸௌ ॥** - *(ச.போ.வி.8.5)*

*பினாகினி நதிக்கரையில் பல கிராமங்கள் வழியாக சம்ஸ்தானம் பயணம் செய்தார். அந்த அனைத்து கிராமங்களிலும், ஸ்ரீமடத்து சிஷ்யர்கள் சிலராவது கண்டிப்பாக இருந்தனர். அவர்கள் அனைவரின் வேண்டுகோளுக்கிணங்க, அனைத்து கிராமங்களும் பயணம் செய்தே ஆகவேண்டியிருந்தது. தற்போதைய நிலை போல வேகமாக செல்லக்கூடிய வாகனங்கள் அப்போது இல்லை. பல்லக்கு, ரதம், குதிரை வண்டி ஆகியவற்றின் உதவியிலேயே பயணம். ஆகையால், ஸ்ரீமடத்து மற்றும் ஸ்ரீகளவரின் தரிசனம் அனைவருக்கும் அபூர்வமாக இருந்தது. அப்படியே அனைத்து சிஷ்யர்களின் நலன்களை விசாரித்தவாறு, பயணமும் மெதுவாகவே அமைந்தது.*

**சக்ராப்ஜயோ: தாரணயா ச முத்ரயோ**
**ருத்தப்தயோஸ் தத்ரகதான் த்விஜன்மன: ।**
**சர்வான் புனாதி ந்ம பினாகினீரபூ**
**ர் வம்ஷோத்பவோ மத்வமதானு வர்தின: ॥** *(ச.போ.வி.8.6)*

*ஸ்ரீமதானந்ததீர்த்தரின் சத் பரம்பரையில் வந்த ஸ்ரீசத்யபோதர் அங்கங்கு இருந்த அனைத்து மாத்வர்களுக்கும் தப்த முத்ரா தாரணம், தீர்த்தம் கொடுத்து, ராமதேவரின் தரிசனம் செய்வித்து, கோட்டை / அரண்மனைகளுடன் கூடிய 'செஞ்சி'க்கு வந்தார்.*

★★★

## ஆரணி திக்விஜயம்

*ஸ்ரீகளவர் அங்கிருந்து பாஹுதா நதியைத் தாண்டி விஷ்ணுமங்களத்திற்கு வந்தார். அங்கு, ஆரணியில் மகாராஜா வெங்கடபதி, ஸ்ரீசத்யபோதரை மிகுந்த மரியாதையுடன் ஊர்வலமாக அழைத்து தனது அரசுக்கு அழைத்துச் சென்றார். ஸ்ரீசத்யபோதர் முதலில் தமது பரமகுருகளான ஸ்ரீசத்யவிஜயரின் பிருந்தாவனத்தை தரிசனம் செய்து, அங்கிருந்த கௌண்டின்ய நதியில் ஸ்னானம் செய்து, அங்கேயே சம்ஸ்தானத்து பூஜைகளை நிறைவேற்றி, ஸ்ரீசத்யவிஜயரின் விசேஷ ஆராதனையை செய்து, சத்யவிஜய நகரத்துக்குள் பிரவேசித்தார். அங்கேயே சிறிது காலம் இருந்து பாட*

*பிரவசனங்களை செய்தார். தனது இரண்டாவது நவராத்திரி விழாவை மிகவும் சிறப்புடன் கொண்டாடினார்.*

*மகாராஜாவின் அரண்மனையில் நவராத்திரியை முன்னிட்டு தினமும் பத்தாயிரம் மக்களுக்கு அன்னதானம், நிரந்தர சாஸ்திர பிரவசனம், புராண ஹரிகதை என்று மிகச் சிறப்பாக தனது பீடத்தில் அமர்ந்து தனது இரண்டாவது நவராத்திரியைக் கொண்டாடினார் ஸ்ரீகளவர்.*

★★★

## ஆற்காடு திக்விஜயம்

*இந்த நவராத்திரி விழாவிற்கு ஆற்காட்டின் கிருஷ்ணாஜி பந்த் அவர்கள் வந்திருந்து, தீபாவளி பண்டிகைக்கு தமது அரசிற்கு வருமாறு ஸ்ரீகளவரிடம் வேண்டிக்கொண்டார். அதற்கேற்ப ஸ்ரீகளவரும் ஆற்காட்டிற்கு வந்தார். ஆற்காடு ஒரு பெரிய ஊர். உத்தராதி மடத்து சிஷ்யர்கள் நிறைந்த ஊரும்கூட. மகாராஜா கிருஷ்ணாஜி பந்த்கூட உத்தராதி மடத்து சிஷ்யரே.*

*சிவாஜியின் காலத்தில், தென்னிந்தியாவை வசப்படுத்தி, அங்கங்கு, தனது நம்பிக்கைக்கு பாத்திரமானவர்களை, வீர தீரர்களை அரசாள நியமித்தார். அப்படிப்பவர்களில் பற்பலர் ஸ்ரீசத்யபோதரின் மேலும், ஸ்ரீமத் உத்தராதி மடத்து பீடத்து மேலும் அத்யந்த மரியாதையும் பக்தியும் கொண்டிருந்தனர். பல சிக்கலான விஷயங்களில், ஸ்ரீகளவரின் ஆலோசனையை கேட்டு அதன்படி நடந்தனர். அதில் முக்கியமானவர்கள் இந்த - ஆற்காட்டின் பந்த், ஆரணியின் வெங்கடபதி. இவர்கள் ஸ்ரீமடத்து சிஷ்யர்கள் - தேசஸ்த மாத்வர்கள் ஆவர்.*

*ஆற்காட்டுக்குச் செல்லும் வழியில் ஸ்ரீகளவர் திமரி என்னும் ஊருக்கு வந்தார். ஆற்காட்டின் அனைத்து பெரிய மனிதர்களும், அந்த கிராமத்திற்கு வந்து ஸ்ரீகளவரை அங்கிருந்து வெகு மரியாதை யுடன் ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். வாத்திய கோஷங்களுடன் ஊர்வலம் நடைபெற்றது.*

**தேனாதனீயா னபிஷேக உத்ஸவ: தேனேகுவனீ சூன்வனுகஸ்ய ஷார்க்ஞ்ண: ।** - *(ச.போ.வி.8.16)*

*பலிபிரதிபதா நாளில், ஸ்ரீமூலராம சீதாதேவியருக்கு மகா அபிஷேகம் நடைபெற்றது. ஸ்ரீராமனுக்கு அபாரமான காணிக்கைகளை சமர்ப்பித்து கிருஷ்ணாஜி தன்யனானார்.*

**வித்தேன வித்தாதிப சாம்யமீயுஷா**
**வித்தேன சம்ஸ்தான சபர்யமாக்ரயா ||**
**வித்தேன க்ருஷ்ணாஜ்யபிதேன பூப்ருதா**
**வித்தேன சோண்பூதபசாயிதோ வசன் ||**

*கிருஷ்ணாஜி பந்த், குபேரனைப் போன்ற செல்வந்தன். ஞானிகளான குரு ஸ்ரீசத்யபோதரை, அபாரமான பரிசுகளை அளித்து கௌரவித்தான். தினந்தோறும் விஷ்ணு சஹஸ்ரநாமம் படிக்கும் சந்தர்ப்பத்தில், மூலராமருக்கு சஹஸ்ர துளசி அர்ச்சனையை செய்யும் சங்கல்பத்தை ஸ்ரீசத்யபோதர் செய்தார்.*

**நித்யம் சஹஸ்ரம் துலசீதலான்யலம்**
**தஸ்யை சஹஸ்ராம்சுக வம்ஷகேதவே |**
**சங்கல்பிதம் ஸ்வர்பயிதும் ப்ரபுர்தினே**
**கஸ்மின்ஸ்ச நாத ப்ரணதோ நனாத தம் ||** *(ச.போ.வி. 8.18)*

*தினமும் ஆயிரம் துளசி, பூக்களை அர்ப்பிக்கத் தொடங்கினார்.*

*ஒரு நாள் ஸ்ரீகளவரிடம் கிருஷ்ணாஜி இப்படியாக முறையிட்டார். 'ஸ்வாமிகளே, நாளை எனக்கு முக்கியமான வேலை ஒன்று இருக்கிறது. அதற்காக நான் சீக்கிரம் போகவேண்டும். இன்று செய்யவேண்டிய துளசி அர்ச்சனையை நாளைக்கு சேர்த்து செய்து கொள்ளவும். இன்று சற்று சீக்கிரமாக பூஜையை முடிக்கவும்' என்றார்.*

★★★

## கிருஷ்ணாஜி பந்தின் கோபம் மற்றும் வருத்தம்

*லௌகிகர்கள் செல்வத்தை சேர்ப்பதற்காக அடுத்தவர்களின் தயவு தாட்சண்யங்களை பார்ப்பர். ஆனால், ஸ்ரீமூலராம தேவரின் பூஜை, ஆசார, விசார, ஜப தபங்களை எதற்காகவும் யாருக்காகவும் விட்டுக் கொடுக்காதவர் ஸ்ரீசத்யபோத தீர்த்தர். அவர் வேதாந்த சாம்ராஜ்யத்தின் அதிபதி. ஸ்வதந்த்ர சார்வபௌமர். யாருடைய நிர்பந்தங்களுக்கு அடிபணிபவர் அல்லர். அதே சமயத்தில், சிஷ்யர்களை விட்டுக் கொடுப்பவரும் அல்லர்.*

ஆகவே பூஜை சீக்கிரமாக தொடங்கியது என்னவோ நிஜம். ஆனால் ஸ்ரீகளவர் அவரது ஜப, தபங்கள் முடித்துக்கொண்டு, தினப்படி நிகழ்ச்சியாக துளசி அர்ச்சனையை தொடங்கினார். மிகுந்த பக்தியுடன் கண்களை மூடியவாறு தியானத்தில் அர்ச்சனையை செய்தார். இதற்குள் கிருஷ்ணாஜி கோபம் கொண்டார். பூஜைக்கு நடுவிலேயே எழுந்து வெளியில் வந்தார். தனது அரண்மனைக்கு வந்தார்.

இங்கு ஸ்ரீகளவர் எப்போதும் போல பூஜையை செய்து முடித்தார். யார் இருந்தார்கள், யார் சென்றார்கள் என்றே அவர் கவனம் செலுத்தவில்லை. பூஜை முடிந்து பிரசாதம் கொடுப்பதற்கு கேட்டபோதே, கிருஷ்ணாஜி பாதியில் எழுந்து போய்விட்டது தெரியவந்தது. பெரும் கோபத்துடன் சென்றார் என்றும் கேள்விப் பட்டார். ஸ்ரீகளவரின் கருணை இதயம், சிஷ்யனின் தவறை மன்னித்தது.

மூலராமனின் விஷயத்தில் கிருஷ்ணாஜியின் செயல் அவனது புண்ணியத்தை குறைத்து விடக்கூடாது என்று சிஷ்யனின் மேல் இருந்த கருணையில், அடுத்த நாள் காலையில் ஸ்ரீகளவரே கிருஷ்ணாஜியின் அரண்மனைக்கு சென்றார். தான் அவருக்கு அவமானம் செய்தும், குருவே தனது அரண்மனையைத் தேடி வந்ததைக் கண்டு கிருஷ்ணாஜிக்கு பயம் உண்டாயிற்று. வியப்பும் உண்டாயிற்று.

**ஆயாதமாத்மீய நிகேதனம் ப்ரபு:**<br>
**ஸௌம்யம் ஸ மந்தஸ்மித சுந்தரரானனம் ।**<br>
**த்ருஷ்ட்வா ஹ்ரியா தம் நதகந்தரோஞ்சஸா**<br>
**ப்ராரப்த தஸ்ய பதாரவிந்தயோ: ॥** *(ச.போ.வி. 8.23)*

அமைதியாக, புன்னகையுடன் தன் மேல் இருக்கும் கருணையால் தனது வீடு தேடி வந்த குருவை சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான். தன்னுடைய தவறினை மன்னிக்குமாறு கேட்டார். குருகளை திவ்ய சிம்மாசனத்தில் அமர்த்தி அவரது பாதங்களில் சுவர்ண அபிஷேகம் செய்தார். 'சக்ரேபிஷேகம் கனகை: அசங்க்யைகை:'. குருகளின் மேல் கனக மழை பொழிந்தான்.

காஞ்சி, ஆரணி, வேலூர் போன்ற ஊர்களிலிருந்து வந்திருந்த பெரிய பெரிய பண்டிதர்கள், இந்த உற்சவத்தைக் கண்டு மகிழ்ந்து,

ஸ்ரீசத்யபோதரிடம் தங்களது சந்தேகங்களைக் கேட்டு தெளிந்தனர். மகிழ்ந்தனர். எந்த பண்டிதர், எதில் சந்தேகம் கேட்டாலும், அதற்கு உடனடியாக, சரியான பதிலைக் கொடுத்து வந்தார் ஸ்ரீசத்யபோத தீர்த்தர்.

ஒரு நாள் ஸ்ரீகளவர் வேதங்களின் வியாக்யானத்தை செய்து கொண்டிருந்தார். 'சத்வாந்தராய: ஷதின: சஹஸ்ரிண:' என்னும் வேத வாக்கியத்தை விளக்கிக் கொண்டிருந்தார். அப்போது ஒரு பண்டிதர் ஒரு கேள்வி கேட்டார். 'ஸ்வாமிகளே, 'ரை' என்னும் சொல்லிருந்து 'ராம' என்னும் சொல் வந்திருக்கிறது. 'ரை' என்னும் சொல், அமர கோசத்தில் 'ஆண்பால்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இங்கே 'ரை' சொல்லிற்கு 'ஷதின:' என்று பொருள் வருகிறது. என்றால் 'ஷதஷங்க்யாவத்ய:' என்று விளக்கம் சொல்லலாம். அப்படியெனில், டீகாராயர் 'ரை' சொல்லை 'பெண்பால்' என்று எப்படி விளக்கினார்?' என்று கேட்டார்.

ஸ்ரீசத்யபோதர் உடனடியாக பதில் அளித்தார். 'ரை' சொல் ஆண்பால் மட்டுமல்ல, இரு பாலுக்கும் பொருந்தும் சொல் ஆகும். இதை புரிய வைப்பதற்காகவே டீகாராயர் மேற்படி அதை பெண்பாலாக விளக்கினார். ருத்ரகோஷம் போன்ற நூல்களில் இதற்கான ஆதாரங்களைக் காணலாம் என்றார். மேலும் பல கிரந்தங்களின் ஆதாரங்களை எடுத்து விளக்கினார், ஸ்ரீசத்யபோதர். ஸ்ரீகளவரின் நுண்ணிய மற்றும் திடமான கருத்துகளைக் கண்டு பண்டிதர்கள் மிகவும் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தனர். ஸ்ரீசத்ய போதர் என்னும் பெயருக்கு தக்கவர் இவரே என்று புகழ்ந்தனர்.

ஆற்காட்டில் ரிக்பாஷ்ய பாடத்தைக் கூறினார். அங்கு இரு மாதங்கள் தங்கினார். ஆயிரக்கணக்கிலான மக்களுக்கு தினமும் அன்னதானம், முத்ரா தாரணம் செய்து வந்தார். ஸ்வாமிகள் இங்கு இரு மாதங்கள் வரை தங்கியிருப்பார் என்பதை அறிந்த தென்னிந்தி யாவின் பண்டிதர்கள், தத்தம் சிஷ்யர்களுடன் ஸ்ரீகளவரின் தரிசனத்தைப் பெறுவதற்கு வந்தனர். ஸ்ரீகளவரும் அவர்கள் அனைவரையும் அங்கேயே தங்குமாறு சொல்லி, பாட பிரவசனம் செய்து, தக்க முறையில் மரியாதை செய்து அனுப்பினார்.

**தேப்யோ பரேப்யோண்பி பர:ஷதானி வா**
**வாசாம்ஸி சுவர்ணாம்பர பூர்வகாணி ஸ: ।**

**ஸ்ரீராம சத்யப்ரிய நாமவர்ணயுக்**
**சத்வர்ண சௌவர்ண வரிஷ்ட முத்ரிகா ॥** *(ச.போ.வி. 8.33)*

*வஸ்திரங்களை, பட்டு ஆடைகளை, காதணிகளை, மோதிரங் களை, அதில் குருவான ஸ்ரீசத்யப்ரியரின் பெயரினைப் பொறித்து, ஸ்ரீராமதேவருக்கும், குருவிற்கும் அவற்றை சமர்ப்பித்து, வந்த பண்டிதர்களும், வைதிகர்களும் வழங்கினார் ஸ்ரீகளவர். பின் அங்கிருந்து கிளம்பி, திருப்பத்தூர், தாராபுரம், தர்மபுரி, திண்டுக்கல், மதுரை என பயணம் செய்து மானாமதுரைக்கு வந்தார். தம் குருவான ஸ்ரீசத்யப்ரியரின் சன்னிதியில் சிறிது காலம் தங்கினார்.*

**தத்ர ஸ்வனிர்மாபித விப்ரமந்திர**
**ப்ராதோல்லசத் ப்ராஸ்தர மண்டபோத்தமம் ।**
**வ்ருந்தாவனம் வீக்ஷ்ய முதாவஸத் குரோ:**
**சம்சேவமான: ஸ தினானி கானிடித் ॥** *(ச.போ.வி. 8.38)*

*ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள், தமது குருவான ஸ்ரீசத்யப்ரியரின் பிருந்தாவனத்தைக் கட்டியபோது, அங்கு சுற்றிலும் 120 வீடுகளைக் கட்டி, ஒரு அக்ரகாரத்தை உருவாக்கி, 120 பிராமணர்களுக்கு அந்த வீடுகளை தானம் அளித்து, அவர்களை அங்கு தங்க வைத்தார். அழகான கற்களைக் கொண்டு தமது குருவின் பிருந்தாவனத்தைக் கட்டினார். அந்த அக்ரகாரத்திலேயே ஸ்ரீகளவர் சில காலம் தங்கினார். பின் அங்கு தாமிரபரணி நதியில் குளித்து, பின் அங்கிருந்து கன்யா குமரிக்குப் புறப்பட்டுச் சென்றார். அங்கிருந்து அனந்தபுரத்திற்கு பயணம் செய்தார்.*

*அனந்தபுரத்து அரசர், ஸ்ரீகளவர் தனது நகரத்திற்கு வந்த செய்தியைக் கேட்டு மகிழ்ச்சியடைந்தார். அவர் வருவதற்காக, உலர்ந்த மரங்களை வெட்டி, சிறப்பான பாதையை அமைத்துக் கொடுத்தார். அவர் வரும் வழிகளில் அவருக்கு எந்த தொந்தரவும் இருக்கக்கூடாதென்று பற்பல ஏற்பாடுகளை செய்திருந்தார். அனந்தபுரத்தில் அனந்தபத்பனாபனை தரிசனம் செய்யவேண்டி ஸ்ரீகளவர் தமது பரிவாரங்களுடன் வந்தார். அனந்தபுரத்து அரசரின் மரியாதை, கௌரவம் ஆகியவற்றைப் பெற்று ஸ்ரீகளவர் மிகவும் மகிழ்ந்தார். அங்கிருந்து மறுபடி தனது குருவின் சன்னிதியான மானாமதுரைக்கு வந்தார்.*

*திருவனந்தபுரத்தில் இருந்தபோது, அங்கிருந்த அரசர், ஸ்ரீசத்யபோதர், அனந்தபத்பனாபனை வழிபடுவதற்கு அனைத்து ஏற்பாடுகளையும் செய்து கொடுத்திருந்தார். அவர் அங்கிருந்து புறப்படும்போது:*

**லோக த்ரய த்யாப்தயஷோண்ன் விதாய க்ராமத்ரயம் தத்ர ததே ஸ துஷ்ட: ||** *(ச.போ.வி. 8.53)*

*மூன்று சிறந்த கிராமங்களை அவருக்கு தானமாகக் கொடுத்தார். ஸ்ரீகளவர் மறுபடி மானாமதுரைக்கு வந்தபோது, அங்கு பஞ்சம் நிலவியது. மழை பெய்யவேயில்லை. மக்களுக்கு குடிநீரும் கிடைக்கவில்லை, உண்பதற்கு உணவும் குறைவு. ஸ்ரீகளவரின் வருகையால் மக்கள் தைரியம் அடைந்தனர். பஞ்சம் தீர்வதற்கான நேரம் வந்துவிட்டதென்று மகிழ்ந்தனர்.*

**துர்பிக்ஷ சம்க்ஷோபிதன்விஜ நீவ்ருத்**
**ப்ரஜாவ்ரஜோ யோ பவிதி ஸ்ம பூர்வம் ।**
**சபிக்ஷுராஜ்யாகத ஏவ தஸ்மின்**
**சுபிக்ஷமாப்தம் க்ஷிதிப: சமீக்ஷ்ய ||** *(ச.போ.வி.8.52)*

*ஸ்ரீகளவரின் வருகையால் அந்த இடத்திற்கு பல நாட்கள் கழித்து நல்ல மழை பொழிந்தது. பஞ்சம் தீர்த்தது. பசுமை நிறைந்தது. அனைவரும் மகிழ்ந்தனர். குருகளிடம் பக்தி செலுத்தினர்.*

★★★

## தஞ்சாவூருக்கு திக்விஜயம்

*ஸ்ரீகளவர் ஸ்ரீரங்கத்திற்கு வந்தார். அப்போது தஞ்சாவூரில் சேது கோஸ்வாமி என்று ஒரு தாந்த்ரிகன் இருந்தான். மந்திர தந்திரங்களில் வல்லவன். அந்த ஊர் அரசரின் நம்பிக்கையைப் பெற்றிருந்தான். பிரதாப சிம்ம ராஜரிடம் தான் மிகப்பெரிய பண்டிதன் என்று கூறியிருந்தான். வைஷ்ணவ த்வேஷி. மாயாவதிகளுடன் நட்பு கொண்டிருந்தான். எப்படியாவது மாத்வர்களுக்கு அவமானம் செய்ய வேண்டுமென்று தகுந்த சந்தர்ப்பத்தை நோக்கி காத்திருந்தான்.*

**யோ ராமார்ச்சாம் ஸ்வம் ப்ரதிஷ்டாப்ய கேஹே**
**வாதீந்த்ரம் வா தம் ஜகன்னாத தீர்த்தம் ।**
**அனீயாலம் தர்ஷனம் வா ப்ரணாமம்**
**சம்ஸ்தானேஷம் காரயாமாஸ தஸ்யா: ||** *(ச.போ.வி.9.2)*

*இந்த சேது கோஸ்வாமி, தனது வீட்டில் ஸ்ரீராம விக்ரகத்தை பிரதிஷ்டை செய்திருந்தான். தன் வார்த்தைகளால் மயக்கி, சில மாத்வ யதிகளை தனது வீட்டிற்கு வரச்செய்து, அவர்களை இந்த பிரதிமைகளை வணங்குமாறு செய்திருந்தான். ஸ்ரீவாதீந்த்ர தீர்த்தர், ஸ்ரீஜகன்னாத தீர்த்தர் ஆகியோரை தனது வீட்டிற்கு வரச்செய்து, தான் பிரதிஷ்டை செய்த ஸ்ரீராமனை வணங்கச் செய்தான். அவர்கள் எதிரில் மிகப்பெரிய ஆசனத்தை போட்டு, கிருகஸ்தனான தான் அவர்களை விட பெரியவன் என்று உணர்த்துமாறு அதில் அமர்ந்தான். தனது நைவேத்தியங்களை அவர்கள் உண்ணுமாறு செய்தான்.*

*அவன் ராஜகுருவாக இருந்தான். இவனது பேச்சினை ராஜன் கேட்டு வந்ததால், இவனைக் கண்ட மக்கள் அஞ்சி நடுங்கினர். அவனது பேச்சைக் கேட்காதவர்களை, துன்புறுத்தி வந்தான். சேது கோஸ்வாமி, அத்வைத பண்டிதரான ஸ்வாமி சாஸ்திரி மற்றும் இன்னும் சில அத்வைத, சைவ பண்டிதர்களுடன் சேர்ந்து மந்திரா லோசனை செய்தான். ஸ்ரீசத்யபோதரை எப்படியாவது, எதாவது செய்து வாக்யார்த்தத்தில் தோற்கடிக்க வேண்டும். அல்லது தனது நைவேத்தியத்தை உண்ணச் செய்யவேண்டும் என்று சதித்திட்டம் தீட்டினான்.*

*ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் சாமான்யர் அல்லர். அன்றைய சமூகத்தில், ராஜர்களால், பண்டிதர்களால், அனைவராலும் பூஜிக்கப் பட்டவர். மிகச்சிறந்த ஆளுமை என்று அனைவரால் புகழப் பட்டவர். திக்கெட்டிலும் அவரது புகழ் பரவியிருந்தது.*

**சம்ஸ்தானானி த்ரீணி மாத்வேஷ்டி ஹோர்வியாம்**
**லோகேஷ்டஷ்டௌ ரூப்ய பீடாலயேது ।**
**தேஷாம் மத்யே யத்மரிஷ்டம் ததீஷோ**
**ய: ஸ்ரீரங்கே சத்யதீ: சோதுனாஸ்தி ॥**

**ஆட்யா: சிஷ்யா: ஆதனுஷ்டோடி தீர்த்தம்**
**சந்த்யேதர்ஹி ஹ்யாஹி மாஹார்யமஸ்ய ।**
**துன்வானோ நோண்த்வைதினோ த்வைதவாதீ**
**தின்வான: ஸ்வான் சஞ்சரன் வஞ்சனீய: ॥** *(ச.போ.வி.9.78)*

*ஸ்ரீமத்வாசார்யரே மூலகுருவாக இருக்கும் இந்த வைஷ்ணவ பரம்பரையில், பாரதம் முழுக்க புகழ்பெற்ற மடங்கள் மூன்று மற்றும் உடுப்பியில் இருக்கும் அஷ்ட மடங்கள் ஆகும். இந்த*

அனைத்து பரம்பரைகளிலும், மிகவும் மூலமான, ஹம்ஸ நாமக ஹரியிலிருந்து துவங்கி வந்த மிகச்சிறந்த பரம்பரையே இந்த உத்தராதி மடம். அனைத்து வைஷ்ணவர்களும் இந்த மடத்து சிஷ்யர்களே ஆவர். அனைவருக்கும் இது குருபீடம் எனப்படுகிறது. இங்கு அனைவரும் மகா பண்டிதர்கள், கிரந்தகாரர்கள், உரையாசிரியர்கள், தபஸ்விகள், மகிமை பொருந்தியவர்கள் ஆகையால், அனைத்து காலங்களிலும், ராஜர்கள், செல்வந்தர்கள், சுபேதார்கள் என அனைவரும் அளித்த மிகப்பெரிய செல்வம் இங்கு உள்ளது.

இமயத்திலிருந்து துவங்கி, கன்யாகுமாரி, துனுஷ்கோடி வரைக்கும் அனைத்து ஊர்களிலும் இந்த மடத்து சிஷ்யர்கள் வியாபித்திருக்கின்றனர். இத்தகைய சிறப்பு வாய்ந்த மடத்தின் தற்போதைய பீடாதிபதியான ஸ்ரீசத்யபோத தீர்த்தர், ஸ்ரீரங்கத்தில் இருக்கிறார். செல்லும் இடங்களிலெல்லாம் அவர் அத்வைத மற்றும் சைவ மடங்களை கண்டிக்கிறார். வாதத்தில் இவரை வெல்வது மிகக் கடினம் ஆனாலும், இவரை வென்றுவிட்டால், மத்வ மதத்தையே வென்றது போலாகும். என்று சேது கோஸ்வாமி மற்றும் அவரது நண்பர்கள் நினைத்தனர். தஞ்சாவூரின் அரசர் போஸலேவிடம் சொல்லி, ஸ்ரீரங்கத்தில் இருக்கும் ஸ்ரீகளவரை, தஞ்சாவூருக்கு வருமாறு ஏற்பாடு செய்தனர்.

ராஜனால் அழைக்கப்பட்டபிறகு அவர் கண்டிப்பாக இங்கே வருவார். அப்படி வந்தபிறகு, அவரை நம் வீட்டிற்கு அழைத்துச் செல்வோம். அங்கு நாம் பிரதிஷ்டை செய்த ஸ்ரீராமனை வணங்கச் செய்வோம். அவரைவிட சிறந்த ஆசனத்தில் அமர்ந்து, அவருடனே உணவு உண்ணுவோம் - என்றான் சேது கோஸ்வாமி. ஏனெனில், மாத்வ மடத்து பீடாதிபதிகள் என்றும் கிருஹஸ்தர்களால் நிறுவப் பட்ட, அ-வைஷ்ணவர்களால் நிறுவப்பட்ட பிரதிமைகளை வணங்குவதில்லை. அ-வைஷ்ணவர்களுடன் எப்போதும் உணவு உண்பதில்லை. ஆகவே அவரை எப்படியாவது மயக்கி, இந்த இரு வேலைகளையும் செய்துவிட வேண்டும். இதனால் அந்த சமூகத்தையே அவமானப்படுத்தியதாக ஆகும். இதை விட்டு வேறு எந்த வழியிலும் அவரை நம்மால் வெல்ல முடியாது என்று கோஸ்வாமியும் அவரது நண்பர்களும் தீர்மானித்தனர்.

★★★

## சேது கோஸ்வாமியின் தோல்வி

'முன்னர் தீர்மானித்ததைப் போலவே, ராஜரின் வேண்டுகோளை ஏற்று ஸ்ரீசத்யபோதர் இங்கு வருவார். ராஜகுருவின் வீட்டிலேயே வரவேற்பு, பிக்ஷை நடக்கும் என்று ராஜன் மூலமாக சொல்ல வைப்போம். அவரை நம் ஸ்ரீராமனை வணங்கச் செய்வோம். அவரது பிக்ஷை நடக்கும்போது, அவரது பந்தியிலேயே அவருடன் நாமும் சரிசமமாக, இன்னும் பெரிய ஆசனத்தில் அமர்ந்து அவரை அவமானப் படுத்துவோம். இதனால் மொத்த மாத்வ மதத்தையே அவமானம் செய்தது போலாகிறது.

மேலும் ஸ்ரீசத்யபோதருக்கு இப்படி சொல்வோம். ஸ்ரீவாதீந்திரர், ஸ்ரீஜகன்னாத தீர்த்தர், வணங்கிய இந்த ஸ்ரீராமனை நீங்களும் வணங்க வேண்டும். அப்படி செய்தால், அரசரிடமிருந்து மரியாதை மேலும் பல பரிசுகள் உங்களுக்குக் கிடைக்கும். ஒரு வேளை நீங்கள் இந்த ஸ்வாமியை பார்க்கவில்லை எனில், அப்போது அனைத்து அத்வைத மற்றும் சைவ பண்டிதர்கள் அனைவரும் சேர்ந்து, ஒரே நேரத்தில் உங்களுக்கு வாக்யார்த்தத்திற்கு அமர்வார்கள். உங்களை வெல்வார்கள் என்று சொல்வோம்' என்று தன் சக பண்டிதர்களிடம் கோஸ்வாமி கூறினான்.

'அப்படிச் செய்தபிறகு, ராஜனான போஸ்லேவிடம், ஸ்ரீசத்ய போதருக்கு ஞானம் குறைவு, விதிவசத்தால் இந்த பீடத்தை பெற்று விட்டார். இவருக்கு எந்தவித தகுதியும் இல்லை என்று சொல்லி, ராஜனால் ஆகும் அனைத்து உதவிகளையும் நிறுத்துவோம்' - என்றான்.

அதேபோல, பிரதாப சிம்மனும், ஸ்ரீகளவர் தஞ்சாவூருக்கு வரவேண்டுமென்று ஒரு கடிதம் எழுதினார். மரியாதையுடன் ஸ்ரீகளவரை வரவேற்க சிறந்த அறிஞர்களை அனுப்பினார். கோஸ்வாமியின் எண்ணம் அவருக்கு தெரிந்திருக்கவில்லை. ஸ்ரீகளவரும் ஸ்ரீரங்கத்திலிருந்து மகிழ்ச்சியுடன் தஞ்சாவூருக்கு புறப்பட்டார். ஊர் எல்லையில், மகாராஜா, ராஜகுரு முதலான அனைவரும் நின்று அவரை மிகுந்த மரியாதையுடன் வரவேற்றனர். ஆடல், பாடல், யானை, குதிரை, ரதம் முதலான ராஜோபசாரங் களினால் வரவேற்பு மிகச் சிறப்பாக நடைபெற்றது.

பிரதாப சிம்ம போஸலே, அவரது நண்பரான மானாஜி, அந்த பகுதியின் மற்ற அரசர்கள், மந்திரிகள் என அனைவரும் வந்திருந்து ஸ்ரீகளவரை வரவேற்றனர். வரவேற்பு நிகழ்ச்சி முடிந்தபிறகு சேது கோஸ்வாமி, ஸ்ரீகளவரின் அருகில் வந்து - முதலில் தன் வீட்டிற்கு வரவேண்டுமென்று கேட்டுக் கொண்டான். ஸ்ரீகளவருக்கு கோஸ்வாமியின் எண்ணம் நன்கு புரிந்திருந்தது. என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறார் என்பது நன்கு தெரிந்திருந்தது.

'ஸ்வச்சந்தோச்ச: சூக்ஷ்மபுத்தி: சுபுத்தா'. ஸ்ரீசத்யபோதர் குருசார்வபௌமர். அறிவுக்கூர்மை உள்ளவர். கோஸ்வாமியின் மனதை, அவனது வார்த்தைகளிலேயே புரிந்து கொண்டார். 'நாளை அல்லது நாளை மறுநாள் உனது வீட்டிற்கு அவசியம் வருவோம். தற்போது பிரகதீஸ்வரர் கோயிலுக்குப் போகிறோம்' என்று சொல்லி, நேராக கோயிலுக்குச் சென்று அங்கு தங்கினார். இதனால் கோஸ்வாமிக்கு சிறிது ஏமாற்றம் ஏற்பட்டது. கோபமும் ஏற்பட்டது. தனக்கு ஸ்ரீகளவர் அவமானம் செய்துவிட்டார் என்று நினைத்தான். தன் வீட்டிற்குச் சென்றான்.

'மத்யே சாதுர்வர்ண்ய மர்ணோஜ பந்து' ஊரில் இருந்த அனைத்து வர்ணத்தினரில், வைஷ்ணவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாயிற்று. மரியாதைகள், பாதபூஜைகள் தினமும் நடை பெற்றன. அன்னதானம் மிகச் சிறப்பாக நடந்தது. இரவும் பகலும் என இடைவிடாமல், பாட பிரவசன, பூஜை, முத்ராதாரணம், அன்னதானம் ஆகியவை நடந்தன. கோஸ்வாமி நினைத்து ஒன்று ஆனால், ஸ்ரீகளவருக்கு நடந்தது வேறொன்று. அவருக்கு அவமானம் செய்ய வேண்டுமென்று புறப்பட்டான். ஆனால் அவருக்கோ சென்ற முறை கிடைத்ததைவிட அதிக மரியாதை, பாதபூஜைகள் கிடைத்தன. இதனால் கோஸ்வாமி மிகவும் கோபம் அடைந்தான். நண்பர்களும் அவனது கோபத்திற்கு தூபம் போட்டனர். வேறு மடத்தினர், வேறு மதத்தினர் என அனைவரும் ஒன்று சேர்ந்தனர். ஸ்ரீமத் உத்தராதி மடத்தின் பெருமை அவர்களுக்கு வெறுப்பை உண்டாக்கியது. அனைவரும் ஒன்றுகூடி யோசிக்கத் துவங்கினர்.

வேறு மடத்தினர் சிலர், ஸ்ரீசத்யபோதரிடம் வந்து, கோஸ்வாமியைப் பற்றி கோள்மூட்டி, தேவையற்ற தகவல்களைக்

*கூறினர். போலவே, கோஸ்வாமியிடம் வந்து ஸ்ரீகளவரைப் பற்றியும் கோள் மூட்டிப் பேசினர். 'கோஸ்வாமி, நமது ஸ்வாமிகளுக்கு உன்னைப் பற்றிய நல் அபிப்பிராயம் உள்ளது. ஆகவே, நீ மேலும் கௌரவம் பெறவேண்டுமெனில், நீ ஸ்வாமிகளான ஸ்ரீசத்ய போதருக்கு சமானமாக அமரவேண்டும். அவர் மக்களுக்கு மட்டுமே குருகள். நீ மக்களைக் காப்பவருக்கே குரு. உன் ஞானம் மிகப் பெரியது. ஆனால் மக்களோ அவரையே அறிவாளி என்று நினைக்கின்றனர். இது தவறாகும். ஆகவே, உன் வீட்டிலோ அல்லது பிருகதீஸ்வர ஆலயத்திலோ, சம்ஸ்தான பூஜையை செய்வித்து, அவருடன் சரிசமமாக நீ அமரவேண்டும். ஒருவேளை இப்படி நடக்கவில்லையெனில், ஸ்ரீசத்யபோத தீர்த்தருக்கும் மற்ற பண்டிதர்களுக்கும் மரியாதை செலுத்தி, அவருக்கு அடுத்தபடியாக சில இலைகளை காலியாக வைத்திரு. சில காலம் நின்றிருப்பதைப் போல நின்று, அவருக்கு மரியாதை செலுத்தி, பின் உன் சிஷ்யர்கள் கொண்டு வைக்கும் பீடத்தில், ஸ்வாமிகளுக்கு சரிசமமாக அமர்ந்து விடு. ஒரு வேளை இதுவும் நடக்கவில்லையெனில், அனைத்து பண்டிதர்களுடன் ஸ்வாமிகளுடன் வாக்யார்த்தம் செய். நியாயமோ அநியாயமோ எவ்வகையிலாவது அவரை தோற்கடித்துவிடு' என்றனர். கோஸ்வாமி சிந்திக்கத் துவங்கினான். தான் செய்ய நினைத்ததையே அனைவரும் சொல்வதால், அப்படியே செய்ய முடிவெடுத்தான்.*

*ஒரு நாள் கோஸ்வாமி ஸ்ரீகளவரிடம் வந்து, தனது வீட்டில் ஸ்ரீமூலராமரின் பூஜை மற்றும் பிக்ஷை நடக்கவேண்டும் என்று வேண்டுகோள் வைத்தான். பிற மதத்து பண்டிதர்களுடன் வாக்யார்த்தத்தில் ஈடுபட்டால் மட்டுமே, நமது சித்தாந்தத்தின் சிறப்புகளை அனைவருக்கும் புரியவைக்க முடியும் என்பதால், இதுவும் ஒரு நல்ல சந்தர்ப்பமே என்று ஸ்ரீகளவர் நினைத்தார். அவன் வீட்டிற்கு வருவதற்கு ஒப்புக்கொண்டார். அப்படியே அவனின் வீட்டில் ஸ்ரீமூலராமரின் பூஜை நடைபெற்றது. அன்றைய தினம் சுமார் 25,000 பேருக்கு அன்னதானம் செய்வதாக கோஸ்வாமி நிச்சயித்திருந்தான்.*

**தஸ்மின் பூயஸ்யத்ஸவே தத்ஸகா மே**
**ஸ்வீயா: ஸ்வேயான்யே ச ராமானுஜீயா: ||** *(ச.போ.வி.9.43)*

அன்று கோஸ்வாமி தனது நண்பர்களான, அத்வைத பண்டிதர்களையும், ராமானுஜீய பண்டிதர்களையும் தனது வீட்டிற்கு அழைத்திருந்தான். பூஜைக்கு நடுவில் இந்த ஏற்பாடுகளையும் ஸ்ரீகளவர் கவனித்தார். அடுத்து கோஸ்வாமி செய்ய நினைப்பதையும் அறிந்தார்.

**ஆஹோயாதீகாரிண: ப்ராஹ லோகான்**
**சத்யஞானோ ஞாதகோஸ்வாமி பாவ: ॥** *(ச.போ.வி. 9.44)*

போஸலேயின் மந்திரிகள், மௌனோஜி முதலான அதிகாரிகளை அழைத்து ஸ்ரீசத்யபோதர் இந்த விஷயங்களை தெரிவித்தார். கோஸ்வாமியின் எண்ணங்களை புரிய வைத்தார். அவனது சிஷ்யர்கள் வைத்திருக்கும் வெள்ளி ஆசனத்தைக் காட்டி, சம்ஸ்தானத்திற்கு சமமாக தானும் அமரப் போகும் திட்டத்தை நிரூபித்தார். அதிகாரிகளுக்கு, அவர்கள் கோஸ்வாமியிடம் போய் இவ்வாறு சொல்லுமாறு பணித்தார். 'கோஸ்வாமி அவர்களே, இன்று நீங்களே எஜமானர். ஆகையால், ஸ்ரீகளவரும் மற்றவர்களும் சாப்பிட்டு முடிக்கும்வரை நீங்கள் நின்றிருந்து அவர்களுக்கு மரியாதை செலுத்த வேண்டும்'. அப்படியே அவர்களும் கோஸ்வாமியிடம் சென்று தெரிவித்தனர். ஸ்வாமிகளின் சரிசமமாக அமர்ந்து உண்ண வேண்டுமென்ற ஆசைக்கு தடை ஏற்பட்டது. வேறு வழியில்லாமல், கோஸ்வாமி கடைசி வரை நின்றிருந்து ஸ்ரீகளவருக்கு மரியாதை செலுத்தினான். பிறகு ஸ்ரீகளவருடன் வாக்யார்த்தம் செய்வதற்காக பற்பல பண்டிதர்களை அழைத்தான் கோஸ்வாமி.

அன்று மாலை, பிருகதீஸ்வர ஆலயத்தில் ஸ்ரீராமதேவரின் தொட்டில் பூஜை நடைபெற்றது. ஸ்ரீகளவருடன் வாக்யார்த்தம் செய்து அவரை வெல்லவேண்டும் என்ற ஆவலில், கோஸ்வாமி வந்து அமர்ந்திருந்தான். கூடவே தன் நண்பர்களான பஞ்சரத்ன ஸ்வாமி, ஸ்வாமி சாஸ்திரிகள், ஸ்ரீதர சாஸ்திரிகள் என பலரையும் அழைத்து வந்திருந்தான். இந்த விஷயங்களை கேள்விப்பட்ட ஊர் மக்கள் அனைவரும் இந்த வாக்யார்த்தத்தைப் பார்ப்பதற்காக கோயிலுக்கு வந்து திரண்டனர். ஸ்ரீகளவர், ஸ்ரீராமதேவரின் டோலோத்ஸவத்தை முடித்து, மங்களாரத்தி செய்துவிட்டு, பிறகு தனது ஆசனத்தில் வந்து அமர்ந்தார்.

*மக்கள் கூட்டம் சபையில் அலைமோதியது. கால் வைக்க இடமில்லை. அனைவரும் ஸ்ரீகளவரின் பேச்சைக் கேட்க ஆவலுடன் கூடியிருந்தனர். ஸ்ரீசத்யபோதரும் தனது பிரவசனத்தைத் துவக்கினார். மங்களாசரணத்தை தனது கம்பீரக் குரலில் துவக்கினார். 'சக்யேத இந்த்ர' என்னும் ரிக்வேத மந்திரத்தின் பொருளை சொல்லத் துவங்கினார்.*

**பதயன் க்ரமயன் க்ரமேண தஸ்யா ஜடயன் பாடவவானதி ஸ்புடம் ஸ: ।**
**அதிவிஸ்மய மாபயாம் பபூவ த்விஜசங்கம் படிதஸ்ருதிம் நிதாந்தம்॥**
*(ச.போ.வி. 10-9)*

*மிகவும் தெளிவான குரலில், அழகாக, ஸ்பஷ்டமாக மேற்சொன்ன மந்திரத்தை உச்சரித்து, அதன் பொருளை விளக்கத் துவங்கினார். ஸ்ரீமதாசார்யரின் வியாக்யானங்களை மேற்கோள் காட்டி சொற்பொழிவாற்றினார். நிறைந்த பிராமண அறிஞர்களின் சபையினருக்கு மிகவும் வியப்பு. ஒரு யதியானவர் இத்தகைய அறிவாற்றலைப் பெறுவதற்கு எப்படி சாத்தியம்? வியாகரண (இலக்கண) குறிப்புகளையும் விளக்கினார். அவர் பேசுவதில் ஏதேனும் ஒரு குறையை கண்டுபிடித்து விடலாம் என்று எண்ணி அமர்ந்திருந்த பிற மதத்தினர் சோர்வடைந்தனர். சஜ்ஜனர்கள் மகிழ்ச்சியடைந்தனர். எந்தவொரு விஷயத்திலும் சந்தேகம் ஏற்பட வாய்ப்பில்லாமல், ஸ்ரீகளவர் தனது உரையை நிகழ்த்தினார்.*

**பவமான தனூஜபூர்ணபோதே**
**ரிதரீத்யா கவிகர்ணபூர சௌக்யம் ।**
**சமபாதிதமேவ சத்யபோதோ**
**புதபூபோகுபிததே அபிதேயமர்த்தம் ॥** *(ச.போ.வி. 10.12)*

*ஸ்ரீமதாசார்யர் மற்றும் ஸ்ரீடீகாக்ருத்பாதர் விளக்கிய விவரங்களை மிகத் தெளிவாக, பயமில்லாமல் சொல்லிக் கொண்டுவந்தார் ஸ்ரீசத்யபோதர். இப்படியாக சொல்லிவரும்போது ஒரு இடத்தில், 'சக்ய' என்னும் சொல் 'அந்த்யோதாத்த' என்று கூறினார். உடனடியாக, கோஸ்வாமியின் நண்பரான, ஸ்வாமி சாஸ்திரிகள் எழுந்து - இது எப்படி சொல்கிறீர்கள்? இதற்கு என்ன ஆதாரம்? என்று கேட்டார். உடன் ஸ்வாமிகள் 'ப்ரத்யயஸ்ய ஸ்வரேண' ஆகியவற்றை உதாரணம் கொடுத்து, 'அந்த்யோதாத்த' வை நிரூபித்தார். ப்ராதிஷாக்ய, பாணிணி ஆகியோரின்*

*சூத்திரங்களை உதாரணம் கொடுத்தார். ஆனால் ஸ்வாமி சாஸ்திரியோ, 'சக்ய' என்னும் சொல் 'ஆத்யோதாத்த' என்று கூறினார். அது எப்படி என்றதற்கு, 'யுயதோ' என்னும் பாணினியின் சூத்திரத்தின்படி இது தெளிவாகிறது என்று கூறினார். 'யுயதோஸ்சாதர்த்தே' என்னும் சூத்திரம் 'யயதோ' என்பதை அப்படி விளக்கவில்லை. ஆகவே நீங்கள் சொல்வதைப் போல 'சக்ய' என்னும் சொல் 'ஆத்யோதாத்த' ஆகமுடியாது என்று மறுத்தார் ஸ்ரீசத்யபோதர்.*

*ஸ்வாமி சாஸ்திரியால் இதனை மறுத்துப் பேசமுடியவில்லை. வாயடைத்துப் போனான். அவமானமடைந்தான். அனைவருக்கும் ஸ்வாமிகளின் புலமை, ஆளுமை, அறிவு புரிந்து, வியந்தனர். மகிழ்ச்சியடைந்தனர்.*

*அப்போது அங்கிருந்த உண்மையான பண்டிதரான அத்வைதத்தை பின்பற்றுபவரான ஸ்ரீதர சாஸ்திரிகள், ஸ்ரீசத்யபோதரின் வெற்றியைக் குறித்து உடனடியாக ஒரு ஸ்லோகத்தை இயற்றி, அனைவரின் முன் அதனை வெளியிட்டார்.*

வித்யுன்மல்ல விவாதகால யுகபத் விஸ்பூர்த்யஹம் பூர்விகா ।
நிர்யத்யுக்தி சஹஸ்ரதர்ஷித நிஜாஹீந்த்ராவ தாராக்ருதி: ॥
சோயம் கல்பவிகாஸி சாரசமதூத க்ரோக்தி விஸ்மாபித: ।
க்மௌபாலோ ஜகதீதலே விஜயதே ஸ்ரீசத்யபோதோ முனி: ॥

விலஸன் விஜயஸ்ரீ யா: ஸ்ரீ யாலம் சமுபாஸ்லோகே ஜிதஸ்ய தேஷிகேன।
விமதேன ததா குணக்ரஹீத்ரா சதஸி ஸ்ரீதரசாஸ்த்ரிணா சதீக்ஷ: ॥
*(ச.போ.வி. 10.23)*

ஸ்ரீமத்பி: சகஷப்தே குருகுலதிலகை: ப்ரத்யயஸ்ய ஸ்வரேண
ப்ரோக்தேண்ந்தோத்தாத்த பாவே தபுபரி யயதோஸ்சேதி சூத்ராதமுஷ்ய।
ஆத்யோதாத்த த்வமேவேத்யதிஸ மிதி வதன் ஸ்வாமிசாஸ்திரி சஜால்மோ
ஜிக்யே சூத்ரம் சமாசாஸ்பதமிதி நிபுணம் சாதயத்பி:க்ஷணேன ॥

சூத்ரம் சேத்தத்ஸமா சாஸ்ரய மஹமதுனா ஷப்தசாஸ்த்ரம் த்யஜாமே
த்யேவம் குர்வன் ப்ரதிக்ஞாம் சதஸி குருவரைர் மஞ்சரீ காசிகாதௌ।।
சாஸ்த்ரே சந்தர்ஷிதேசௌ புதவரனிகரை ஸ்தர்ஜிதோ நிர்ஜித: சன்
மோடோ முந்தாக்ஷமந்தோ ப்ரமதி விகலிதாஹாரனித்ர: சமந்தாத் ॥

தஸ்மாத் சூத்ரம் சமாசார்த்தகமபி சரமோதாத்த பாவார்த்த மேதம்
நைவாத்யொதாத்த தாயை ப்ரபவதி விதுஷாம் ஸ்பஷ்டமேதச்ச சாஸ்த்ரே।

**ஆக்ஷேபோயம் ந ஹ்ருத்யோ விலசதி பவதஸ்சித்த விக்ஷேபஹேது
ர்வ்யாஹாரேணேதி தீரோ ஜகதி விஜயதே சத்யபோதோத்யுதார: ||**
*(ச.போ.வி. 10-1,2,3)*

*இந்த வாக்யார்தத்தில் ஸ்ரீசத்யபோதர் வென்றிருக்கிறார் என்னும் செய்தியை, வெவ்வேறு பண்டிதர்கள் வெவ்வேறு ஸ்லோகங்கள் மூலமாக சொல்லியிருக்கின்றனர். அவர் உதாரணம் கொடுத்த கிரந்தங்களின் பெயர்களைக் குறிப்பிட்டு, ஸ்ரீசத்யபோதரை விசேஷமாக புகழ்ந்திருக்கின்றனர். ஸ்வாமி சாஸ்திரிகளின் புகழை ஒருசில நிமிடங்களிலேயே அபகரித்துக் கொண்டார் ஸ்ரீசத்யபோதர் என்றனர் மக்கள். இந்த அனைத்து பண்டிதர்கள் மேலும் சேது கோஸ்வாமிக்கு கடும் கோபம் ஏற்பட்டது. வாய்க்கு வந்தபடி அவர்களை திட்டினான். சண்டை போட்டான்.*

*அடுத்து, சேது கோஸ்வாமி, நம் அரசன் ப்ரதாப சிம்மன் என் சிஷ்யன். நான் எதைச் சொன்னாலும் கேட்பான் என்று எண்ணி அவரிடம் சென்றான். 'ராஜரே, ஸ்ரீசத்யபோதரிடம் எந்தவித சாஸ்திர அறிவும் இல்லை என்பது நிஜமாயிற்று. நம் பண்டிதர்கள் அவரை நேற்று தோற்கடித்து விட்டனர். அவர் அத்தகைய தபஸ்விகளும் இல்லை. ஸ்ரீராமதேவரின் பூஜை செய்கிறார் என்பது என்னவோ உண்மை. இந்த காரணத்திற்காக யாரேனும் அவருக்கு மரியாதை அளித்தால் அது சரி. ஆனால் நீங்கள் மட்டும் அவருக்கு மரியாதை கொடுக்கவேண்டாம்' என்று தனிமையில் அரசரிடம் கூறினான்.*

*ஆனால் மானோஜி போன்றோர் இதை மறுத்து அரசரிடம் கூறியதாவது. 'வாக்யார்த்தம் நடந்தபோது நாங்கள் அங்கு இருந்தோம். ஸ்ரீசத்யபோதர் இந்த அனைத்து அத்வைத பண்டிதர் களையும் முழுமையாக வென்றிருக்கிறார். ஸ்வாமிகளின் கேள்வி களுக்கு இவர்களால் பதில் அளிக்க முடியவில்லை. கோஸ்வாமியின் பேச்சை கேட்க வேண்டாம். ஸ்ரீகளவர் மகா தபஸ்விகள். ஞானிகள். அவருக்கு பக்தியுடன் மரியாதை செலுத்து. அவரது அருளாலேயே உனக்கு நலன் உண்டாகும். இந்த சைவர்கள் அனைவரும் ஸ்வாமிகள் வைஷ்ணவர் என்பதால் அவரை வெறுக்கின்றனர். இது சரியல்ல. யதிகளை கௌரவிப்பது, அரசனான உனது தலையாய கடமை' என்றனர்.*

பஜனீயதமா இமேஹி பூமௌ பரிபூர்ணா ஹி ஷுபைகுணை ரசேஷை:॥
*(ச.போ.வி.10.39)*

*இந்த ஸ்வாமிகள் அனைத்து சாஸ்திரங்களையும் அறிந்த உண்மையான ஜகத்குரு. அவரின் கோபத்திற்கு மட்டும் என்றும் ஆளாக வேண்டாம் - என்று அனைவரும் கூறினர். ஸ்ரீதர் சாஸ்திரிகள், ஸ்வாமிகளின் மகிமைகளைக் கூறி, தாம் சபையில் இயற்றிய ஸ்லோகத்தைக் கூறினார். அதன் பொருளை விவரித்தார். ஸ்ரீசத்யபோதருக்கு மரியாதை அளிப்பதால், நாட்டிற்கும் நாட்டு மக்களுக்கும் நன்மையே உண்டாகும். அவருக்கு அவமானம் செய்தால், அது நாட்டிற்கு கேடு விளைவிக்கும் என்று அனைவரும், தஞ்சாவூரின் அதிபதிக்கு எடுத்துரைத்தனர். ராஜனுக்கு இருந்த அனைத்து சந்தேகங்களும் தீர்ந்தன.*

*போரில் வெல்வதில் அர்ஜுனனைப் போல, வைராக்யத்தில் ருத்ர தேவரைப் போல, அறிவில் ப்ருஹஸ்பதியைப் போல, காம்பீர்யத்தில் கடல், தானத்தில் கர்ணன், மன்னிப்பதில் பூமி, ஐஸ்வர்யத்தில் குபேரன், தேஜஸ்ஸில் மேரு சூரியன் - இப்படிப் பட்டவர் ஸ்ரீசத்யபோத தீர்த்தர். ஆகவே இந்த கோஸ்வாமியின் பேச்சில் ஆகட்டும், பிற மதத்தினவர்களின் பேச்சிலாகட்டும் கவனம் செலுத்த வேண்டாம். ராஜனும், தன் வீட்டில் ஸ்ரீராம தேவரின் பூஜை செய்வித்து, ஸ்வாமிகளிடம் மன்னிப்பு கேட்க வேண்டும் என்று தீர்மானித்தான்.*

*தஞ்சாவூரில் பெரும் மரியாதையினைப் பெற்று, தனது மகிமைகளைக் காட்டி, ஸ்ரீமடத்திற்கு அபாரமான செல்வத்தைப் பெற்றுக்கொண்டு, ஸ்ரீசத்யபோத தீர்த்த ஸ்வாமிகள் கும்பகோணத் திற்கு திக்விஜயம் செய்தார்.*

*சேது கோஸ்வாமி சொன்னதைப் போல செய்து, அவனின் ராமோத்ஸவத்தில் பங்குபெற்று, தாம் பீடாதிபதிகளாக இருந் தாலும், அவனுக்கு தம்மைவிட உன்னத ஆசனத்தை அளித்து, அவனது நட்பினைப் பெற்றனர் சிலர். அவர்கள் அனைவரும் சேர்ந்து, தற்போது கும்பகோணத்தில் ஸ்ரீஸ்வாமிகளிடம் வாதம் செய்ய வந்தனர்.*

அத மடமிவ வேதிகாபுராணம் த்ருடதரமாதனிதும் பஹுப்ரமாணம் ।
அதிகத விஜய: ப்ரபு: ப்ரயாணம் ததக்ருத சத்திஷண: சகும்பகோணம்॥
*(ச.போ.வி.11.1)*

கும்பகோணம் காவேரி நதிக்கரையில் உத்தராதி மடத்திற்கு சொந்தமான பழைய கட்டிடம் இருந்தது. அதை புதுப்பிக்க வேண்டியிருந்தது. காமாட்சி, ஸ்ரீனிவாச மற்றும் சிந்தாமணி என்று அங்கு புகழ்பெற்ற மூன்று படித்துறைகள் இருந்தன. அங்கு எப்போதும் பாட பிரவசனங்கள் நடைபெற்று வந்தன. ஆனால், அத்வைதிகள், சைவர்கள் சிலர், இங்கே மடத்து பிரவசனங்கள் நடைபெறக்கூடாது என்று அந்த இடங்களை ஆக்ரமித்திருந்தனர். இதுமட்டுமல்லாமல், உத்தராதி மட கட்டிட வேலைகளும் நடை பெற முடியாமல் பல்வேறு தடைகளை ஏற்படுத்தினர்.

இந்த இரு வேலைகளை நிறைவேற்ற வேண்டுமென்று ஸ்ரீசத்யபோதர் அங்கு வந்தார். கும்பகோணத்து அரசன், தஞ்சாவூர் அரசனுக்குக் கட்டுப்பட்டவனாக இருந்தான். அந்த அரசனின் ஆணைப்படி, ஸ்ரீகளவரை மிகுந்த மரியாதையுடன் வரவேற்றான். ஸ்ரீகளவர் உத்தராதி மடத்தில் தங்கினார். அடுத்த நாள் காலை, ஸ்வாமிகள் தமது சிஷ்யர்களுடன் சேர்ந்து, காவேரி நதியில் குளித்து, அங்கேயே அருகில் இருந்த சிந்தாமணி படித்துறையில் தமது ஆன்ஹிகங்களை செய்யத் துவங்கினார். ஸ்ரீகளவரின் சிஷ்யன் ஒருவன் இங்கு அமர்ந்து பாகவத உபன்யாசத்தை துவக்கினான். இந்த உபன்யாசத்தை நிறுத்த வேண்டும், ஸ்வாமிகள் இங்கு அமர்ந்து ஆன்ஹிகங்களை செய்யக்கூடாது என்று சிலர் அங்கு வந்து தகராறு செய்யத் துவங்கினர்.

'கரக்ருத லகுடாஸ்ம லோஷ்ட காஷ்டாத்ருட தரசந்தித
மத்ய மாப்ருஹத்யா'

இப்படி வந்த மக்களின் கையில் கல், கொம்பு, கட்டைகள் ஆகிய ஆயுதங்கள் இருந்தன. இந்த படித்துறையை சுற்றி நின்று கொண்டனர். கற்களால் அங்கு இருந்த ஸ்வாமிகளையும், மடத்து சிஷ்யர்களையும் தாக்கத் துவங்கினர். ஸ்வாமிகளின் மேலும் சில கற்கள் விழுந்தன. புராணம் சொல்லிக் கொண்டிருந்த சிஷ்யரின் தலையை கல்லால் அடித்து உடைத்தனர்.

கதயிதரி யதோபலான் ஆனல்பான் மதிமதி சத்யமதௌ
யதீஷ த்ருஷ்ட்யா ।
தததிபமுபயுஞுத ப்ரஹார்த்தும் குரவர தத்பரிவார வீரவாரா:॥
*(ச.போ.வி. 11.19)*

*தங்கள் மேல் கற்கள் வந்து விழத் தொடங்கியதும், மடத்து சிஷ்யர்களில் வீரராக இருந்தவர்கள், அதற்கு பதிலடி கொடுக்கத் தயாரானார்கள். அவர்களும் கைகளில் கற்களை எடுத்து எறியத் துவங்கினர். ஆனால், ஸ்ரீகளவர் அவர்களை தடுத்துவிட்டார். 'இத்தகைய கெட்ட செயல்களை நாம் செய்யக்கூடாது. கெட்டவர்களை ஸ்ரீராமனே தண்டிப்பான். தர்ம காரியங்களை யாரும் என்றும் தடுக்கக்கூடாது. இன்னொருவரின் புகழை என்றும் இகழக்கூடாது. அதைப் பார்த்து நாமும் மகிழவேண்டும். பாண்டவர்களின் செல்வத்தைக் கண்டு துரியோதனாதிகள் எதிர்த்ததில் எப்படி எந்தவொரு அர்த்தமும் இல்லையோ, அதே போல நம்மை எதிர்ப்பவர்களிடமும் எந்த அர்த்தமும் இல்லை' - என்றார்.*

**ரகுபதி ரமயேவ நிக்ரஹீதா பவது வினிந்தித கர்மகாரிணோஸ்ய।**
**அதிசஹனயுதோ யதேர்மமாசௌ அனுசிதமேததிதி ந்யவீவரத்தான்॥**

*(ச.போ.வி. 11.20)*

*தம் சிஷ்யர்களை இப்படியாக தடுத்துவிட்டார். அனைவரும் ஸ்ரீகளவரின் ஆளுமை, பணிவு, தைரியம், தர்மஜீவனம், கருணை ஆகியவற்றைக் கண்டு மகிழ்ந்தனர். வியப்புற்றனர். ஸ்ரீகளவர் - 'சன்யாசிகளான நமக்கு கருணையே ஆபரணம். ஸ்ரீஹரியே நம்மைக் காப்பாற்றுகிறவன். ஸ்ரீமூலராமன், ஸ்ரீதிக்விஜயராமனே அனாதி காலத்திலிருந்து அனைத்து விக்னங்களையும் பரிகரித்து, அனைத்து இடங்களிலும் மிகச் சிறப்பாக திக்விஜயம் செய்திருக்கின்றனர். தற்போதும் அவர்களே நம்மை காப்பாற்றி அடுத்து சத்கர்மங்களை செய்விப்பர்' என்று கூறினார். தனது சிஷ்யர்களை இப்படியாக சாந்தப்படுத்தினார்.*

*அங்கேயே அருகில் இருந்த ஒரு அத்வைத சன்யாசி, ஸ்ரீகளவரிடம் வந்து வேண்டினார். 'இந்த துஷ்டர்கள் எந்த செயலையும் செய்யத் தயங்கமாட்டார்கள். நியாயம் நம் பக்கமே இருந்தாலும், தற்போது தாங்கள் தங்களை காப்பாற்றிக் கொள்வதே உசிதம். உடனடியாக இங்கிருந்து தங்களின் மடத்திற்கு சென்று விடுங்கள். தங்களை அவர்கள் கோழை என்று நினைத்தாலும் பரவாயில்லை. வீணாக ரத்தக்காயம் ஏற்படாமல் இருக்க தற்போதே புறப்படுங்கள்' என்றார்.*

ஸ்ரீசத்யபோத தீர்த்தரும், தமது யதிகுணத்திற்கேற்ப கருணை, மன்னிப்பு கொண்டு அங்கிருந்து தமது பரிவாரங்களுடன் மடத்திற்கு திரும்பினார். இதற்குள் அந்த பிற மதத்தவர்கள், தஞ்சாவூரில் இருந்த கோஸ்வாமிக்கு கடிதம் எழுதி, தாங்கள் இந்த செயலில் வெற்றி பெற்றுவிட்டதாகச் சொல்லி, அவனுக்கு இங்கிருந்து சால்வை முதலான பல பரிசுகளை மகிழ்ச்சியுடன் அனுப்பி வைத்தனர்.

'ராஜகுருவான கோஸ்வாமி அவர்களே, இங்கு உத்தராதி மடாதீசர் பல செயல்களை செய்யத் துவங்கியிருக்கிறார். அவருக்கு பண பலம், மக்கள் பலம், ஞான பலம் இருப்பதால் கர்வம் வந்திருக்கிறது. நமக்கு பல விதங்களில் கெடுதல் செய்திருக்கிறார். நமது புராண பிரவசங்களுக்கு பலவித தடைகளை ஏற்படுத்தி யிருக்கிறார். நமது ஆட்களுக்கும் காயம் செய்திருக்கிறார். சிலரது கை முறிந்துள்ளது. சிலருக்கு தலையில் காயம். நம்மையும் மிகவும் பலமாக தாக்கியிருக்கிறார். நமக்கு நேர்ந்த அநியாயங்களைக் கண்டு, நமக்கு நியாயம் வழங்கவில்லையெனில், நாங்கள் யாரிடம் போய் முறையிடுவோம்? போஸலே மகாராஜரிடம் இந்த விஷயங்களை சொல்லி, இந்த உத்தராதி மடாதீசரை உடனடியாக கும்பகோணத் திலிருந்து வெளியேற்றுமாறு கேட்டுக் கொள்கிறோம்' - என்று கடிதம் எழுதினர்.

இந்த அனைத்து விஷயங்களையும் பிரதாப சிம்மன், மற்றும் அவரது அதிகாரிகள் கவனத்துடன் கேட்டனர். தனக்கு ஏற்பட்ட அவமானத்தை துடைப்பதற்கு இதுவே சரியான வழி என்று நினைத்த கோஸ்வாமி - 'ராஜனே, நான் அன்றிலிருந்தே இந்த மடாதீசரைப் பற்றி தங்களிடம் சொல்லி வருகிறேன். இப்போது பாருங்கள். அந்த புராண மண்டபத்தில், தாம் மட்டுமே புராணம் சொல்ல வேண்டுமென்ற ஆசை எதற்கு? இன்னொருவரின் படித் துறையை ஆக்ரமித்திருக்கிறார். தார்மிக க்ஷேத்திரத்தில் இத்தகைய செயல்கள், அடிதடிகள் நடைபெறக்கூடாது. உன் அரசாட்சியில் இத்தகைய கெட்ட செயல்கள் நடக்கலாகாது. உடனடியாக அந்த மடாதீசரை கும்பகோணத்திலிருந்து வெளியேற்று' - என்று கூறினான்.

பிறமடத்தினர், கோஸ்வாமியை சந்தித்தபிறகு, மகாராஜனை சந்திப்பதற்கு முன்னால், ஸ்ரீசத்யபோதரின் சிஷ்யர்கள், மகாராஜனை

சந்தித்து, முதலிலிருந்து நடந்த அனைத்தையும் ஒப்பித்தனர். கும்ப கோணத்து சர்தாரிடமிருந்தும், அங்கு நடந்த விவரங்களை ராஜன் அறிந்திருந்தான். தன் கோபத்தை அடக்கியாறு கோஸ்வாமியிடம் இவ்வாறு கூறினான்.

'குருகளே. நாளை நான் கும்பகோணம் போகிறேன். நடந்த வற்றை சரியாக விசாரித்து, என்ன ஆயிற்று என்பதை அறிந்து, பின் இந்த இரு மடங்களின் சண்டையை தீர்ப்பதற்கு, நீங்கள் கூறிய வாறே செய்வேன்' என்று கோஸ்வாமியை சமாதானப்படுத்தினான். கோஸ்வாமியின் திருப்திக்காக ஒரு கடிதம் எழுதினான். 'அந்த காவேரி நதிக்கரையில் இருக்கும் படித்துறைகளில், எந்த மடாதீசரும் பூஜை செய்யக்கூடாது. புராண பிரவசனங்கள் நடைபெறக்கூடாது' என்றான்.

இதைக் கேள்விப்பட்ட ஸ்ரீசத்யபோதர், அப்படியே ஆகட்டும் என்று கூறி, தமது மடத்திற்குப் பின் இருந்த சிறு இடத்திலேயே தமது ஸ்னான ஆன்ஹிகங்களை செய்யத் துவங்கினார். ஆனால் அந்த பிற மடத்தவரோ, தமக்கு ராஜன் / அரசு ஆதரவு இருக்கிறது என்று சொல்லி, தடை செய்யப்பட்ட அந்த இடத்திலேயே தமது செயல்களை செய்யத் தொடங்கினர். கும்பகோணத்து சர்தாரிட மிருந்து, போஸலே இந்த விஷயங்களை கேட்டறிந்தான். சத்ய போதரின் மேல் இருந்த மரியாதை மேலும் அதிகரித்தது. மற்றவர் களின் கெட்ட செயல்கள், கர்வம் ஆகியவை புரிந்தன. ஆகையால், ஸ்ரீசத்யபோதரை கும்பகோணத்திலிருந்து வெளியேறுமாறு அவன் என்றும் சொல்லவில்லை. அவரை மரியாதையுடன் வணங்கி, ஆசிர்வாதங்களை, பல-மந்திராக்ஷதைகளைப் பெற்று வந்தான்.

ராஜனின் இந்த செயலால் மற்றவர்கள் அவமானமடைந்தனர். அவர்கள் கோஸ்வாமியை மறுபடி தொடர்பு கொண்டு, ஸ்ரீசத்ய போதரை கும்பகோணத்தை விட்டு வெளியேற்றுமாறு கேட்டுக் கொண்டனர்.

இன யதி குருஷெ புரான்னிரீதம் சதவகதிம்
த்வஹமத்மி நான்யதாத்ய ।
புனரிதி குருணா தராதுராஷட் ப்ரணிகதிதோ கடகோணமாப
தூர்ணம் ॥
*(ச.போ.வி. 11.34)*

*கோஸ்வாமி மறுபடி ராஜனிடம் வந்தான். 'சமூகத்தின் நலனுக்காக அமைதிக்காக, நீங்கள் ஸ்ரீசத்யபோதரை கும்பகோணத்திலிருந்து வெளியேற்றியே ஆகவேண்டும். அவரை அங்கிருந்து வெளியேற்றும்வரை நான் உபவாசம் இருக்கப் போகிறேன். இனி நான் எதையும் உண்பதில்லை என்று சபதம் செய்கிறேன்' - என்றான். உண்மை நிலையை அறிய ராஜன் மறுபடி கும்பகோணத்திற்கு வந்தார். அனைவரும், ஸ்ரீசத்யபோதரை அங்கிருந்து வெளியேற்றவே ராஜன் வந்திருக்கிறார் என்று பேசிக்கொண்டனர்.*

*ஸ்ரீசத்யபோதரின் கருணை, காம்பீர்யம் இவற்றை அனைவருக்கும் அறியச் செய்வதற்கு பிரதாப சிம்மன் ஒரு வேலை செய்தார். 'இந்த ஊரின் அமைதிக்காக ஸ்வாமி, நீங்கள் சில நாட்களுக்கு வேறு இடத்தில் வாசம் செய்யுங்கள்' என்றான். நம்மை இந்த ராஜன் சோதித்துப் பார்க்கிறான் என்று ஸ்ரீகளவருக்கு நன்கு தெரிந்திருந்தது. உடனே அவர் ஒப்புக்கொண்டார். 'அப்படியே ஆகட்டும். நான் இங்கிருந்து புறப்படுகிறோம்' என்று கூறினார்.*

நரபனர தினத்ரய வ்ரதேண்த்யு ப்ரவிஹித மானஸ கர்மகா: வயம் ஸ்ம: ।
ஹரிதிவஸ உபோஷ்ய தோத்தமே ஷ்வோர்ச்சித ரகுபா: க்ருதபாரணா:
பரஷ்வ: ॥ *(ச.போ.வி. 11.38)*

*'மகாராஜனே. இன்று தசமி. இன்றிலிருந்து மூன்று நாட்கள் நமக்கு மிகவும் முக்கியமானவை. நாளை ஏகாதசி விரதம். நாளை மறுநாள் ஸ்ரீமூலராமனின் பூஜை, தீர்த்தபிரசாதங்களை காலையில் மிக விரைவாகவே முடித்துக்கொண்டு, உடனடியாக நாம் புறப்பட்டு விடுகிறோம். இல்லை, இன்றே புறப்பட வேண்டும் என்று நீங்கள் வலியுறுத்தினால், அதற்கும் நாங்கள் தயார்' என்று மகாராஜரிடம் ஸ்ரீசத்யபோதர் கூறினார்.*

*புன்னகைத்தவாறு அதற்கு பதிலளித்த பிரதாப சிம்மன்.*

ஷுபஹ்ருதய பரீக்ஷணார்த்தமேவம் நியகதமஹம்
க்ஷமிராடிதம் க்ஷமஸ்வ ।
சிரசமய மிஹாசிதைதி காமம் விரசிதசிந்து நிமஜ்ஜனாதி கர்மா ॥
*(ச.போ.வி. 11.42)*

*'ஸ்வாமி, நீங்கள் உண்மையிலேயே சார்வபௌமர். உங்களின் பரந்த மனது, தேஜஸ், தவ சக்தி, அரச ஆணையை பின்பற்ற வேண்டும் என்கிற கடமை இவை அனைத்தும் மிக அற்புத*

மானவை. தங்கள் இதயம் சுத்தமானது. உங்கள் வாழ்க்கையே சாஸ்திரங்களின்படி நடக்கிறது. நான் தங்களின் உத்தம சுபாவத்தை சோதிப்பதற்கு, அது மற்றவர்களுக்கும் புரியட்டும் என்று அப்படிக் கூறினேன். தாங்கள் இங்கு இருப்பதே மக்களுக்கு, அரசிற்கு என அனைவருக்கும் நலம். தாங்கள் எவ்வித சந்தேகமும் இன்றி, இந்த காவேரி நதிக்கரையிலேயே தங்களின் ஜபம், தபம், ஸ்னான, ஆன்ஹிக, பூஜை, புராணங்களை எவ்வளவு நாட்கள் வேண்டுமோ அவ்வளவு நாட்கள் வரை தங்கியிருந்து செய்யலாம்' என்று மிகுந்த பக்தியுடன் வேண்டினான். 'ஸ்வாமி இந்த ஊரில் தங்களுக்கு என்ன வேண்டும் என்று சொல்லுங்கள். தங்களுக்கு சேவை செய்யும் பாக்கியம் எனக்கு கிடைக்கட்டும்' என்று திரும்பத்திரும்ப கூறியதால், ஸ்ரீசத்யபோத தீர்த்தர் சொல்ல ஆரம்பித்தார்.

'மகாராஜா, பாரதம் முழுக்க நமது மடம் வியாபித்திருக்கிறது. வடக்கில், தெற்கில் என அனைத்து ஊர்களிலும் அந்தந்த ஊர் மக்களின் பாட பிரவசனங்களுக்காக நமக்கு கட்டிடங்கள் உள்ளன. அது போல, இந்த ஊரிலும் ஒரு கட்டிடம் உள்ளது. அங்கு நாம் பாடம் பிரவசனம் செய்யும்போது, யாராலும் நமக்கு எவ்வித தொந்தரவும் வரக்கூடாது அவ்வளவே. யாரும் நம்மிடம் சண்டை போடக் கூடாது. நாமும் யாரிடமும் சண்டை போடமாட்டோம்' என்றார்.

பிற மடத்தை சேர்ந்தவர்களை, ஸ்ரீசத்யபோதரிடம் மன்னிப்பு கேட்குமாறு ராஜன் ஆணையிட்டான். இதை கேள்விப்பட்ட அவர்கள் அன்றிரவே ஊரைவிட்டு வெளியேறி விட்டனர். ஸ்ரீசத்ய போதரை அவமானப்படுத்த வேண்டும் என்று நினைத்த அவர்களுக்கே அவமானம் ஏற்பட்டது. ராஜன், தனது அரசு முத்திரையிட்ட கடிதத்தில் - காமாட்சி, ஸ்ரீனிவாச மற்றும் சிந்தாமணி என்னும் இந்த மூன்று படித்துறைகளில் ஸ்ரீமத் உத்தராதி மடத்தினரால் செய்யப் படும் புராண பிரவசனங்களிலும், அவர்களுக்கு வேறெந்த விஷயங் களிலும் யாரும் தொந்தரவு செய்யக்கூடாது. அந்த படித்துறை களுக்கு அவர்களுக்கே முழு அதிகாரமும் வழங்குகிறேன் என்று எழுதி, அதை ஸ்ரீஸ்வாமிகளுக்குக் கொடுத்து, பின் தஞ்சாவூருக்குத் திரும்பினார்.

**ஸ்ரீகாவேர்யாம் ஸ்னானகாரீ ப்ரகாமம்**
**பௌராணோக்திம் காரயன் நித்யதாஸ்வை: ।**

காமாக்ஷாக்ய ஸ்ரீனிவாசாபிதான
ஸ்ரீசிந்தாமண்யாஹ்வயத் த்ரிஸ்தலேஷு ॥ *(ச.போ.வி. 11.53)*

*ஸ்ரீஸ்வாமிகள் அங்கேயே காவேரி தீரத்தில் அந்த மூன்று படித் துறைகளிலும் தமது புராண பிரவசனங்களை தொடர்ந்து நடத்தி, கும்பகோணத்திலேயே மூன்று மாதங்கள் வரை தங்கியிருந்தார். அப்போது அவரது குருவான ஸ்ரீசத்யப்ரியரின் மகாசமாராதனை நிகழ்ச்சி வந்தது. இந்த நிகழ்ச்சியையும் கும்பகோணத்திலேயே நடத்துவதாக தீர்மானித்தார். பற்பல ஊர்களிலிருந்து பண்டிதர்களை வரவழைத்தார். அவர்களுக்கு தகுதிக்கேற்ப வஸ்திரங்கள், பாத்திரங்கள் ஆகியவற்றைக் கொடுத்து மகிழ்ச்சிப்படுத்தினார். மகாசமாராதனையும் மிக விமரிசையாக நடந்து முடிந்தது.*

*பிறகு ஸ்ரீசத்யபோத தீர்த்தர் அங்கிருந்த மடத்து கட்டிடத்தை புதுப்பிக்க முடிவெடுத்தார். அந்த நதிக்கரையிலேயே, கற்களாலான ஒரு புதிய கட்டிடத்தைக் கட்டத் துவங்கினார். அதற்கு தேவையான அனைத்து பொருட்களையும் சேகரிக்க முற்பட்டார்.*

*இந்த செயலானது, மறுபடி பிற மடத்தவர்களுக்கு எரிச்சலை உண்டாக்கியது. அவர்கள் உடனே கோஸ்வாமியிடம் சென்று, அவருக்கு பற்பல பரிசுகளைக் கொடுத்து மகிழ்ச்சிப்படுத்தி, பின் இவ்வாறு கூறினர். 'ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் கட்டிக் கொண் டிருக்கும் மடத்து கட்டிட வேலையை எப்படியாவது, ஏதாவது செய்து உடனடியாக நிறுத்தவும். கோஸ்வாமிகளே, நீங்கள் எங்கள் நண்பர். ராஜகுரு. ஆனாலும் அவரை கும்பகோணத்திலிருந்து வெளியேற்றும் தங்களது முயற்சி தோல்வியடைந்தது. ராஜனோ அவருக்கு மேலும் வசதிகளை செய்து கொடுத்தான். உங்கள் பேச்சை கேட்கவேயில்லை. அதனால் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளுக்கு மேலும் கர்வம் அதிகரித்துள்ளது. அவருக்கு பணப் பிரச்னையே இல்லை. ஆகையால் இங்கு பெரியதான ஒரு மடத்தை கட்டிக் கொண் டிருக்கிறார்' என்றனர்.*

ந புராதன தன்மமடாதீபா: க்ஷணமாஸன்னதிகம் தினத்ரயாத் ।
மடமஸ்மதத: ஸ்தலே ந தே கிமு வக்தவ்யம பந்தயன்னிதி ।
ருததீ மடமாவனம் பவேன்ன யதா காரய கோபதே ததா ॥
*(ச.போ.வி. 12.16)*

‘இவருக்கு முன்னர் இருந்த பீடாதிபதிகள் கும்பகோணத்தில் எப்போதும் மூன்று நாட்களுக்கு மேல் தங்கியதேயில்லை. தற்போது இவர் பெரிய மடத்தைக் கட்டினால், இவர்கள் இங்கேயே தங்கிவிட வாய்ப்பு உள்ளது. ஆகையால், ஸ்ரீசத்யபோத தீர்த்தரின் மடம் இங்கு எந்த நிலையிலும் வரக்கூடாது என்பதை கவனியுங்கள். அதற்காக என்ன வேண்டுமோ அதை செய்யுங்கள்’ என்று அனைவரும் சேது கோஸ்வாமியிடம் தெரிவித்தனர். கோஸ்வாமியும், ஸ்ரீசத்ய போதரிடம் விரோதம் செய்ய இது ஒரு நல்ல சந்தர்ப்பம் என்றும், இதை பயன்படுத்திக் கொள்வது என்றும் முடிவு செய்தான்.

உடனடியாக கோஸ்வாமி ராஜனிடம் சென்று இவ்வாறு கூறினான். ‘ராஜனே, யாரிடம் கேட்டுக்கொண்டு ஸ்ரீசத்யபோதர் இந்த மடத்தை கட்டிக் கொண்டிருக்கிறார்?. தங்களது அனுமதி இல்லாமல் கட்டிடம் கட்டுவது, தங்களை அவமதிப்பதைப் போல ஆகும். தவிர பெரிய மடத்தைக் கட்டி, அவர் இங்கேயே தங்கிவிட்டால், பிற மடங்களுடனான பிரச்னைகள் அதிகரிக்கும். நம் அரசில் இத்தகைய பிரச்னைகள் வரக்கூடாது. நன்றாக யோசியுங்கள். உடனடியாக அந்த கட்டிட வேலைகளை நிறுத்துங்கள். எந்த கட்டிடமும் வரக்கூடாது என்று கும்பகோணத்து யதிகளுக்கு கடிதம் எழுதுங்கள்’ என்று கோஸ்வாமி ராஜனிடம் கூறினான். இந்த பேச்சுகளில் மயங்கி, ராஜன், மடத்திற்கும், கும்பகோண அதிகாரிகளுக்கும், கட்டிட வேலைகளை நிறுத்துமாறு கடிதம் எழுதினான்.

கும்பகோணத்து அதிகாரி மிகவும் நல்லவனாக இருந்தான். அவனுக்கு ஸ்ரீசத்யபோதரிடம் மிகவும் மரியாதை இருந்தது. அவரிடம் வந்து இவ்வாறு வேண்டினான். ‘ஸ்வாமி, இதர மடத் தவர்கள், கோஸ்வாமியிடம் புகார் கூறி, அரசரிடமிருந்து கடிதம் எழுத வைத்திருக்கிறார்கள். தாங்கள் கட்டும் கட்டிடத்தின் வேலை களை உடனடியாக நிறுத்த வேண்டுமாம். நான் அரசின் ஊழியன். ஸ்ரீமடத்து சிஷ்யனும் கூட. ஆகையால் இரு வேலைகளையும் செய்வது என் கடமையாகும். ஆகையால், மடத்து கட்டிடத்தைக் கட்டுவதற்கு தேவையான அனைத்து பொருட்களையும் மறைவாக சேகரியுங்கள். கட்டிடம் கட்டுவதை நிறுத்திவிட்டேன் என்று அனைவருக்கும் தெரியட்டும். ஸ்ரீஸ்வாமிகளின் தபோபல சக்தி யினால், இதை மறுபடி கட்டலாம் என்ற ஆணை எனக்கு வரும். அப்படி ஒரு கடிதம் வந்த உடனேயே நானே வந்து நின்று மிக

*விரைவில் இந்த கட்டிடத்தை கட்டித் தருகிறேன்' என்றான். இப்படியெல்லாம் நடக்குமென்று ஸ்ரீசத்யபோத தீர்த்தருக்கு ஏற்கனவே தெரிந்திருந்தது.*

**'ஸ்வாவிதித்ஸித மேவபாவிதம் வியதிதானேன முதேதி சத்யதி:' ।**

*இதற்கு தேவையான முன்னேற்பாடுகளை அவர் முதலிலேயே செய்திருந்தார். மடத்து கட்டிட வேலைகளை நிறுத்திவிட்டதாக ஊரில் செய்தி பரவச் செய்தார். இதனால் பிற மடத்தவர்கள் மகிழ்ச்சி அடைந்தனர். ஊரின் சில நடுநிலையாளர்கள், ஸ்ரீசத்யபோதரிடம் வந்து இவ்வாறு வேண்டிக் கொண்டனர். 'ஸ்வாமி, உலகத்தில் பணத்தால் செய்ய முடியாத வேலையே இல்லை. நீங்கள் கோஸ்வாமிக்கு, ராஜனுக்கு சால்வைகள், சிறிது பணத்தை கொடுக்க ஏற்பாடு செய்யுங்கள். கட்டிட வேலைகள் சுலபமாக முடியும்' என்றனர். ஸ்ரீசத்யபோதர் புன்னகையுடன் பதிலளிக்கத் துவங்கினார்.*

**அபரை: அபரே யதாக்ஷதைர்ன வினா கார்யவராணி காரவ: ।**
**வயமத்ய ததாபி தத்மஹே பவதர்த்தே ஹிவசூன்யுரூண்யபி ॥**
*(ச.போ.வி. 12.39)*

*'விதிகளுக்கு மாறாக பணத்தைக் கொடுத்து எந்தவொரு வேலையையும் நாம் செய்ய விரும்புவதில்லை. ஸ்ரீராமனின் விருப்பப்படியே, இந்த மந்திராக்ஷதையின் பலத்தின்படி அனைத்தையும் விதிப்படியே நடத்த விரும்புகிறோம். இத்தகைய தவறான வழி நமக்குப் பிடிப்பதில்லை. ஆனால், நீங்கள் அனைவரும் சொல்வதால் நாம் பணம் கொடுக்க முற்பட்டாலும், எந்த அதிகாரியும் இதை தொடுவதற்கு அஞ்சுவார்கள். இது ஸ்ரீஹரியின் சொத்து. நெருப்பைப் போன்றது. தொடுபவர்களை இது சுடும். அந்த வம்சத்தையே இது சுட்டுவிடும்' என்றார். ஆனால் அனைவருக்கும் தெரிவதற்காக, சோதனை முயற்சியாக, அதிகமான பணத்தை, சால்வைகளை, பல மந்திராக்ஷதைகளை அதிகாரிகளுக்கும், போஸலேக்கும் கொடுக்குமாறு தஞ்சாவூருக்கு கொடுத்தனுப்பினார்.*

*இதற்குள் தஞ்சாவூரில் போஸலேவிற்கு அவரது நண்பர்கள் மானாஜி மற்றும் ஷாலக காடேராஜன் பின்வருமாறு உபதேசித்தனர். 'தங்களின் புகழ் அனைத்து இடங்களிலும் நன்றாக பரவியிருக்கிறது. ஆனால் தற்போது அது நாசமடையும் நிலைக்கு வந்திருக்கிறது.*

*பொய் பேசுபவன் அழிந்துவிடுவான். கோஸ்வாமியின் பேச்சைக் கேட்டு, தாங்கள் ஒரு நாளுக்கு ஒரு முடிவு எடுக்கிறீர்கள் என்று நாட்டு மக்கள் தங்களை கேலி பேசுகிறார்கள். முதலில் ஸ்வாமிகளுக்கு கட்டிடம் கட்ட அனுமதி கொடுத்தீர்கள். பிறகு அதை நிறுத்தினீர்கள். மக்களிடம் பணம் இருந்தால், தேவையான பொருட்களை சேகரித்து, தங்கள் வீடுகளை கட்டிக்கொள்கிறார்கள். இந்த விஷயத்தில் மக்கள் சுதந்திரமானவர்கள்.*

**விபவேஸதி த்வைவதாகதே கலு பத்னந்தி யதேச்சமாலயான் ।**
**த்ருணகாஷ்ட சிலேஷ்டகாதிபி: ந்ருபலோகா: ந்ருபஷாசனம் வினா॥**

*'தம் மடத்து கட்டிடத்தைக் கட்டிக்கொள்வது அந்த மடத்து ஸ்வாமிகளுக்கு சம்பந்தப்பட்ட விஷயம். அவர் தங்களுக்கு கீழ் எப்போது வந்தார்? அவரை இப்படி கஷ்டப்படுத்துவது சரியாகப் படவில்லை'.*

**ரகுபா னுக்ரஹேதி சத்பலோ**
**மதமாத்ஸர்ய முகா குணோஜ்யைதா: ।**
**அதிசிஷ்டதமோ ந வஷ்ட்ய ஸாவபரால்பிஷ்ட மடஸ்ய நாஷனம்॥**
**பஹுதிஷ்டமதோ மடத்வயம் ந்ருப பூம்யந்தரவத்தி திஷ்டது ॥**

*(ச.போ.வி. 12.50)*

*ஸ்ரீசத்யபோதர், யதி சார்வபௌமர். அவரது மடம் அனைத்து ஊர்களிலும் உள்ளது. பல ஊர்களில் ஒரே மடத்தின் பல கிளைகள் இருக்கின்றன. அது போல, நம்மூரிலும் இரு மடங்கள் இருந்தால் என்ன தவறு? அவரவர்கள் தத்தம் மடங்களுக்கேற்ப நடந்து கொண்டால், எங்கும் பிரச்னைகள் வருவதில்லை. ஒரு தலைப் பட்சமாக ராஜர்கள் பீடாதிபதிகளுக்கு எதிராக நடந்தால், பாவம் வந்து சேரும். இந்த கோஸ்வாமியினால் இந்த மத / மட பிரச்னைகள் இன்னும் அதிகமாகும். முதலில் இந்த சேது கோஸ்வாமியை இந்த அரசிலிருந்து வெளியில் தூக்கி எறி. ஸ்ரீசத்யபோதருக்கு அவரது மடத்தை கட்டிக்கொள்வதற்கு அனுமதி அளி. ராம மந்திரம் உபதேசித்த குருவாயிற்றே என்று கோஸ்வாமியைப் பற்றி நினைக்க வேண்டாம். அவன் உபதேசித்த மந்திரத்தை, ஒரு பசுவின் காதில் சொல்லி, அந்த பசுவை ஒரு வறிய பிராமணனுக்கு தானம் செய்து விடு. எந்த தோஷமும் உனக்கு வராது' என்று அறிவுறுத்தினர்.*

*போஸலே ராஜனுக்கு இந்த விஷயம் புரிந்தது. இதை எப்படி தீர்ப்பது என்று எண்ணியவாறே இருந்த நேரத்தில், அன்று இரவு தஞ்சாவூரின் தலைமை அதிகாரிக்கும் இதைப் பற்றிய கனவு வந்தது. இந்த கோஸ்வாமியை வெளியில் எறிந்தால்தான் தஞ்சாவூருக்கு நிம்மதி பிறக்கும். மக்களுக்கு அமைதி கிடைக்கும் என்று அந்த கனவில் செய்தி வந்தது. போஸலே, ஸ்ரீகளவருக்கு கட்டிடம் கட்டிக் கொள்வதற்கு அனுமதி அளித்தார். கோஸ்வாமியை மகாராஷ்டிரத்திற்கு நாடு கடத்த வேண்டுமென்று தீர்மானித்தார். இதற்குள் ஸ்ரீசத்யபோதரின் பல-மந்திராக்ஷதை, பரிசுகள், சால்வை ஆகியவற்றை, சில நடுநிலையாளர்கள் கொண்டு வந்து போஸலேயிடம் கொடுத்து, கட்டிடம் கட்டுவதற்கான அனுமதியைக் கேட்டனர். அதற்கான பணம் கொடுக்கவும் தயார் என்றனர். ஆனால், போஸலே - பணம் வேண்டாம். ஸ்வாமிகள் கட்டிடத்தை கட்டிக் கொள்ளட்டும் என்றார்.*

**வித்தமாதித்ஸவோ போ குரோர்னு வயம்**
**கார்யமாத்ரம் த்விஜா: காரபோண்த்ராத்ருதா: ||** *(ச.போ.வி. 12.59)*

*ஸ்ரீகளவர் கொடுத்த மந்திராக்ஷதைகளை பெற்றுக்கொண்டு, தான் எப்போதும் ஸ்ரீகளவரின் பணத்தை பெற்றுக் கொள்வதில்லை என்றார். குருவின் வேலைகளை / விருப்பங்களை நிறைவேற்றுவதற்கு நான் எப்போதும் தயார் என்றார். நீங்கள் விரைந்து சென்று கட்டிட வேலைகளை துவக்குங்கள். கும்பகோணத்து அதிகாரிகளுக்கு என் ஆணையைப் பற்றி கூறுங்கள்.*

**வரனகரன்ருபஸ்ய பத்ரம் சபதி சமீக்ஷ்ய முதா நிஜாஞயாப்யை: |**
**த்ரிசதுரதிவஸ்யை: பர: ஷைதைதன்மடம பந்தத தக்ஷதக்ஷபி: ஸ: |**
*(ச.போ.வி. 12.61)*

*அரசனின் ஆணைக்காக மட்டுமே காத்திருந்த கும்பகோணத்து அதிகாரி, முன்னரே திட்டமிட்டபடி, 3-4 நாட்களில் நூற்றுக்கும் மேற்பட்டவர்களை நியமித்து, மடத்து கட்டிட வேலைகளை துவக்கினார். ஸ்ரீசத்யபோதரின் மகிமையினால் இந்த வேலை மிகவிரைவில் முடிந்துவிடும் என்ற நம்பிக்கை வந்தது. அதன்படியே, கும்பகோணத்தில் அழகான உத்தராதி மட புதிய கட்டிடம் ஸ்ரீசத்யபோதரின் மேற்பார்வையில் கட்டி முடிக்கப் பட்டது.*

**கும்பகோணபுரே ஸ்தானத்ரயே மடமபந்தயத் ।**
**மடம் நிர்மாயதைர்யேண ராஜ்யாஸம்யக் ப்ரபூஜித ॥**

*(க.வ.க.ககு.வ 3.16)*

இதற்குள், கோஸ்வாமியின் அனைத்து செல்வங்களையும், யானை, குதிரை ஆகியவற்றையும் பறிமுதல் செய்து, ஒரு குதிரையில் மேல் அவனை அமர்த்தி, மகாராஷ்டிரத்திற்கு நாடு கடத்தினார் அரசர். அவன் உபதேசித்த மந்திரத்தை ஒரு பசுவில் காதில் ஓதி, அதை ஒரு பிராமணருக்கு தானமாக அளித்தான். அடுத்து, தென்னிந்தியாவில் எந்தவொரு யதிகளுக்கும் எவ்வித பிரச்னைகளும் வரக்கூடாதென்று தீர்மானித்து, அதன்படி ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளை பார்த்துக் கொண்டார்.

ஸ்ரீமடத்தின் கட்டிட வேலைகளை முடித்தபிறகு, தனது அடுத்த பயணத்தை திட்டமிட்டபோது ‘கோனேரினாமா க்ருபணாக்ர்ய வேஷ:’ - கோனேரிராயர் என்பவர் ஸ்ரீகளவரிடம், சாதுமாத விரதத்தைப் பற்றி பேச வந்தார். கும்பகோணத்தில் பெரிய செல்வந்தர். ஆனால் கஞ்சன். சிறிய வயதிலிருந்தே பெரும் செல்வத்தை ஈட்டியவர். அவருக்கு அடுத்த வாரிசு என்று யாரும் இருக்கவில்லை. அவனது செல்வத்தை சரியான முறையில் பகிர்ந்தளிக்க வேண்டும் என்று ஆவல் இருந்தது. அதற்காக ஸ்ரீகளவரிடம் வேண்டிக் கொண்டான். ‘ஸ்வாமி, எனக்கு அருளவேண்டும்.

பலிபிரதிபதா முதலான அனைத்து உற்சவங்களும் நம் வீட்டில் நடக்கவேண்டும். நான் தினமும் ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னதானம் செய்யவேண்டும்’. ‘இந்த அனைத்திற்கான செலவுகளும் என்னுடையதே. என்னுடைய செல்வத்தை சரியான முறையில் செலவழிக்க உதவவும்’ என்று திரும்பத்திரும்ப வேண்டினான். ஸ்ரீகளவரும் அவனது வேண்டுகோளுக்கு இணங்கி, கும்பகோணத்தில் சாதுர்மாதத்திற்கு அமர்ந்து, அனைத்து உற்சவங்களையும் விமரிசையாக நிறைவேற்றினார்.

**வாஸம் மாசசதுஷ்டயம் விஹிதவாம் ஸ்தித்விக்த விஷ்ணோத்ஸவம் ।**
**சாதுர்மாஸ்ய மஹோபனாம விததே ப்ரீத: ப்ரபோஸ்தத்ய ஹி ॥**

*(ச.போ.வி. 12.69)*

ஸ்ரீகளவரின் சாதுர்மாத விரதம் மிக விமரிசையாக நடைபெற்று முடிந்தது. அதற்கான முழு செலவையும் கோனேரிராயன் செய்தான். இதற்காக ஸ்ரீகளவர் அவனுக்கு 'காவேரி', 'சாதுர்மாச' என்று இரு விருதுகளை, தங்கப் பதக்கங்களை வழங்கி ஆசிர்வதித்தார். வாரிசு இல்லாத தனது அனைத்து சொத்துக்களையும் ஸ்ரீமடத்திற்கே தானமாக வழங்கினான் கோனேரிராயன்.

ஸ்ரீகளவர் கும்பகோணத்திலிருந்து புறப்பட்டு, புவனகிரி வந்தார். அங்கு ஒரு ஆங்கிலேய சர்தார் ஆண்டு வந்தான். மற்ற சர்தார்களிடமிருந்து அவன் ஸ்ரீகளவரின் அருமை பெருமைகளை நன்கு அறிந்திருந்தான். ஆகையால், ஸ்ரீகளவரின் பயன்பாட்டிற்காக ஒரு கிராமத்தை மானியமாக வழங்கினான். அவன் ஒரு முறை ஸ்ரீகளவரை சந்தித்து, தனது அரசு வேலை எதிர்காலத்தில் எப்படி இருக்கும் என்று கேட்டான். ஸ்ரீகளவரும் அவனுக்கு மந்திராக்ஷதை வழங்கி, உனக்கு நல்லதே நடக்கும் என்று ஆசிர்வதித்தார். ஸ்ரீகளவர் அன்றைய காலத்தில், பல அரசர்களுக்கு அறிவுரை வழங்கி வந்த காலத்திலும், தமது மடத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட மாணவர்களுக்கு / பண்டிதர்களுக்கு நிரந்தர சர்வமூல, ஸ்ரீசுதா போன்ற கிரந்தங்களின் பாடம், பிரவசனங்களை மட்டும் என்றும் நிறுத்தவில்லை.

**பஹூன் வித்யார்தினோ விப்ரான் வித்தார்திவ திவா நிஷம் ।**
**ப்ராப்தான் ப்ராப்தான் வித்யயாஸ வித்தைர்வா பர்யரக்ஷயத் ॥**

*(கு.வ.3.16)*

திருமணம், உபநயனம், அன்றாட வாழ்விற்கு பண உதவி தேவை என்று கேட்டு வந்த ஏழை பிராமணர்கள் அனைவருக்கும் வேண்டிய உதவிகளை செய்தார் ஸ்ரீகளவர். பாடத்திற்காக வந்த மாணவர்களை ஊக்குவித்து, வேண்டிய பாடங்களை, பிரவசனங்களை எடுத்து வந்தார்.

அங்கிருந்து ஸ்ரீகளவர் புறப்பட்டு ஆரணிக்கு வந்தார். அப்போது அங்கு ராஜனாக இருந்தவர் திருமலராயன். அவர் ஸ்ரீமடத்து சிஷ்யர். ஸ்ரீகளவருக்கு தக்க வரவேற்பு அளித்தார். ஸ்ரீகளவர், அங்கு ஸ்ரீசத்யவிஜயரின் தரிசனத்தைப் பெற்றார். அந்த ராஜனுக்கு முத்ரா தாரணம் செய்து, அங்கிருந்து பயணத்தை தொடர்ந்தார்.

*வேலூரில், கிருஷ்ணராஜரின் மகனான ரட்டிராஜன் ஆண்டு வந்தார். ஸ்ரீகளவரை தமது ஊருக்கு வருமாறு அவர் அழைத் திருந்தார். அங்கு சில நாட்கள் தங்கியிருந்த ஸ்ரீகளவர், பின் அருகிலிருந்த பல்லிகுண்டு என்னும் இடத்திற்கு வந்தார். இது தற்போது வேலூர் என்றே அழைக்கப்படுகிறது. அங்கு ஸ்ரீசத்யாதி ராஜரின் திவ்ய பிருந்தாவனம் உள்ளது. அருகில் நரசிம்ம க்ஷேத்திரம் உள்ளது. அங்கு சில காலம் ஸ்ரீகளவர் தங்கினார்.*

**தாதே யதா மயி விதாய தயாமதாயி**
**ஸ்வாமின்னனேஹ சமுரும் வஸ மந்திரேத்ர ।**
**தே நேட்ய சர்ய உபயாசித இத்யவாத்ஸீத்**
**சம்வத்ஸரம் ப்ரதிதினோத்ஸவவான் ஸ தத்ர ॥** *(ச.போ.வி. 13.6)*

*ரட்டிராயன் வந்து ஸ்ரீகளவரிடம் முறையிட்டார். 'ஸ்வாமி, நீங்கள் என் தந்தை கிருஷ்ணராயருக்கு அருளி, அவரை மேம் படுத்தி, அவரிடமிருந்து நற்சேவைகளை பெற்றிருக்கிறீர்கள். அது போலவே, எனக்கும் அருளி, என்னையும் மேம்படுத்தி, என்னிட மிருந்து சேவைகளை பெற்றுக் கொள்ளுமாறு வேண்டிக் கொள்கிறேன்' என்றார். அதன்படி, ஸ்ரீசத்யபோதர், ஒரு ஆண்டுவரை வேலூரிலேயே தங்கியிருந்து, அனைத்து உற்சவ விழாக்கள், பாட பிரவசனங்கள் ஆகியவற்றை செய்து வந்தார்.*

*இந்த நேரத்தில், கௌமுதி ராமாசார்யரின் மக்களான கிருஷ்ணாசார்யர், ஸ்ரீகளவரின் சன்னிதிக்கு வந்து சுதாதி கிரந்தங் களின் அத்யயனத்தை முடித்தார். ஸ்ரீகளவர் அவருக்கு கீதாபாஷ்யம், சூத்ரபாஷ்யம், வியாகரண மகாபாஷ்யங்கள் பாடங்களை எடுத்தார். இவர்களுக்கு தக்க வயதில் திருமணத்தையும் செய்வித்தார். இந்த கௌமுதி கிருஷ்ணாசார்யரே பின்னர் ஸ்ரீசத்யபோதரின் மிகவும் விளக்கமான வாழ்க்கை வரலாறான, ஸ்ரீசத்யபோதவிஜய கிரந்தத்தை எழுதியவர்.*

*பிறகு இங்கிருந்து புறப்பட்ட ஸ்ரீகளவர், கடிகாசலத்திற்கு வந்தார். இங்கு மலைகளின் மேல், சங்குசக்ரங்களை தரித்து, நான்கு கரங்களுடன், யோக பட்டியுடன் ஹனுமந்தன் மற்றும் ந்ருசிம்ஹர் நிலைத்திருக்கின்றனர். பலர் தவம் செய்த தலம் இது. ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் இங்கு சில நாட்கள் தங்கியிருந்து தனது தினப்படி செயல்களை செய்து வந்தார். வாயுதேவரின் விசேஷ கருணைக்குப்*

பாத்திரரானார். ஸ்ரீநரசிம்மனின் விசேஷ அருளுக்குப் பாத்திரராகி, பின் அங்கிருந்து புறப்பட்டு திருப்பதிக்கு வந்தார்.

வழியில் சுவர்ணமுகி நதியில் ஸ்னானம் செய்து, பின் கோவிந்தராஜ பட்டணத்திற்கு வந்தார். உத்தராதி மடத்தின் மரியாதையாக சிறந்த யானையின் மேல் ஸ்ரீராமதேவரை ஏற்றி, மலையில் ஏறத் துவங்கினார் ஸ்ரீகளவர். அனுவியாக்யான பாராயணம் செய்தவாறு மலை மேல் ஏறினார்.

ஸ்ரீனிவாசனின் தரிசனம் செய்து, அங்கேயே ஸ்ரீமத் உத்தராதி மடத்தில் சில நாட்கள் வாசம் செய்தார். ஸ்ரீனிவாச ஆலயத்திற்கு மிக அருகிலேயே இருந்தது ஸ்ரீமத் உத்தராதி மடம். அங்கிருந்து அவரை மாலை மரியாதை வாத்திய கோஷங்களுடன் ஆலயத்திற்கு வரவழைத்து, ஸ்ரீனிவாசனை தரிசனம் செய்வித்து, ஸ்ரீனிவாசனுக்கு அர்ப்பித்த பீதாம்பரம், சந்தன, புஷ்பங்களை இவருக்கு அளித்து மரியாதை செலுத்தினர். பிரம்மோத்ஸவ சமயத்தில் அங்கேயே இருக்குமாறு ஆலயத்தின் சார்பில் ஸ்ரீகளவருக்கு வேண்டுகோள் விடுக்கப்பட்டது.

ஸ்ரீகளவர் அங்கு மடத்திலேயே நவராத்திரி உற்சவத்தை மிகச் சிறப்பாக கொண்டாடினார். மலையில் மேல் ஸ்ரீகளவர், மூலராம திக்விஜய ராமர் பூஜையை செய்து, சில காலம் அங்கேயே தங்கி யிருக்கிறார் என்று செய்தி கேள்விப்பட்டு, நூற்றுக்கும் மேற்பட்ட ஆஸ்திக பக்தர்கள் மலைக்கு சென்று அவரை தரிசனம் செய்தனர்.

**த்வௌ ப்ராதராவிவ தனானி ததா ப்ரசாப்ய:**
**ப்ராப்தானி தாஷரதி வெங்கடஷைல ராஜௌ ।**
**மத்யஸ்த பாவமிதவானிவ தத்ர திஷ்டன்**
**ராஜா விபஜ்ய யதினாம் ச சமம் நினாய ॥** *(ச.போ.வி. 13.32)*

ஸ்ரீவெங்கடேசனுக்கும் ஸ்ரீமூலராமனுக்கும் நவராத்திரி உற்சவத்தில் அபாரமான செல்வம் காணிக்கையாக வந்தது. ஸ்ரீராமன் மற்றும் ஸ்ரீஸ்ரீனிவாசன் இருவரும் சகோதரர்கள். ஆகையால் பண விஷயத்தில் இருவருக்கும் தகராறு வரக்கூடாது என்று ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள், வந்த காணிக்கையினை சரிபாதியாக பிரித்து இருவருக்கும் கொடுத்தாராம். ஸ்ரீமடத்திலிருந்தும் ஸ்ரீஸ்ரீனி வாசனுக்கு பற்பல சேவைகளை செய்வித்தார் ஸ்ரீகளவர். சில மாதங்கள் மலைமேல் தங்கியிருந்து, ஸ்ரீனிவாசனை விசேஷ

*தரிசனம் செய்து, பின் கீழிறங்கி திருப்பதிக்கு வந்தார். 'ஸ்னாத்வா தீர்த்தேஷு தத்ர ஹி' - வழியில் கண்ட தீர்த்தங்களில் ஸ்னானம் செய்தவாறு, கடப்பா நகரத்திற்கு வந்து சேர்ந்தார். கடப்பா நவாப் பிற்கு ஸ்ரீகளவரின் அறிமுகம், மகிமைகள் ஆகியன தெரிந்திருக்க வில்லை. ஊரின் சர்தாரான திருமலராஜன் ஆகியோரிடம் ஸ்ரீகளவரைப் பற்றி தெரிந்துகொண்டார். அவரைக் கண்டபோது, அவரது தேஜஸ், தவவலிமை, ஆளுமை ஆகியவற்றை புரிந்து கொண்டார். அவரை கடப்பாவில் சில காலம் இருக்குமாறு வேண்டினார்.*

*ஸ்ரீகளவர் கடப்பா நகரத்தில் 'தத்ரேரித்யை: ப்ரபுபிரார்ச்யத மாஸயுக்மம்', அங்கிருந்த சத்பக்தர்களின் ஆதரவைப் பெற்று இரு மாதங்கள் வரை தங்கியிருந்தார். பிறகு கடப்பாவிலிருந்து புறப்பட்ட ஸ்ரீகளவர், தம் குலதெய்வமான அஹோபல நரசிம்மரை தரிசித்தார். அங்கு சில நாட்கள் தங்கியிருந்து, கீதா பாஷ்யம், கீதா தாத்பர்ய நிர்ணய பாடங்களை எடுத்தார்.*

**சம்பூஜ்யா சாத்பிரசாதம் ச லேபே ப்ரஹ்லாதவத் குரு: ।**
**ஸ்னாத்வா ந்ருசிம்ஹ தீர்த்தே ஸ: குடேரே க்ருதசத்யதா: ॥**
**வியாசல்யெள கீதாபாஷ்ய சாராதின் சிஷ்யசம்ஹதெள ॥** *(கு.வ.3.30)*

*அகோபல மலையின் மேல் நரசிம்ம தேவாலயத்தின் அருகில், பற்பல குடிசைகளைக் கட்டி அதில் சில நாட்கள் வாசம் செய்தார். மன்யுசூக்தம் முதலானவைகளால் ஸ்ரீ நரசிம்மரை விசேஷ பூஜைகள் சேவைகள் செய்தார். இந்த புல் குடிசையில் இருந்து, சிஷ்யர்களுக்கு கீதா பாஷ்யம் முதலான பாடங்களை சொல்லி, அங்கு மங்களத்தை செய்தார்.*

*அங்கிருந்து புறப்பட்ட ஸ்ரீகளவர் கர்னூலுக்கு வந்தார். துங்கபத்ரா நதிக்கரையில் இருக்கும் உத்தராதி மட கட்டிடத்தில் சில நாட்கள் தங்கியிருந்தார். அங்கிருப்பவர்களுக்கு ஸ்வாமிகளின் மேல் அபாரமான பக்தி. அவரது சேவையை சில நாட்கள் பெற்ற ஸ்ரீகளவர், அங்கிருந்து புறப்பட்டு குண்டமெட்கல் வந்தார். அங்கு மூன்று மாதங்கள் வரை தங்கினார்.*

*அங்கு மல்லாரெட்டி என்னும் சம்ஸ்தானாதிபதி ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளின் மடத்திற்கு ஒரு பெரிய யானையை பரிசாக அளித்தார். ஸ்ரீமடத்தின் சஞ்சாரம் என்றால் அது பெரிய மகாராஜாவின் பயணம்*

*போலவே இருந்தது. சில யானைகள், பற்பல குதிரைகள், சிப்பாய்கள், ரதம், பல்லக்கு என விமரிசையாக இருந்தது அந்தப் பயணம். 500க்கும் மேற்பட்ட பரிவாரங்கள். அங்கிருந்து ஸ்ரீகளவர் ஹைதராபாத்திற்கு வந்தார். அங்கு அவருக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. ஸ்ரீமத் உத்தராதிமடத்தில் இருந்தபோது, அங்கிருந்த நவாப் அவர்கள் வந்து, ஸ்ரீகளவரின் தரிசனம் பெற்று, அவருக்கு சிறப்பான மரியாதையினை செய்தார். ஹைதராபாத்தின் மக்களின் மரியாதையினைப் பெற்று, அங்கிருந்து கோதாவரி நதிக் கரையில் இருந்த சொன்னி நகரத்திற்கு சாதுர்மாதத்திற்காக வந்தார்.*

**கோதாவரி வரதுனீதடவர்த்தி சோன்னௌள**
**சங்கல்பமாசரித வானத நிர்மலம் யத் ।**
**சூரேண சன்னமஸித: ப்ரபுணோத் ஸவம் ஸ**
**சக்ரேண்த்ர சக்ரேண உரும் சதி நாவரத்ரம் ॥** *(ச.போ.வி. 13.39)*

*சொன்னி - துவக்கத்திலிருந்தே இது உத்தராதி மடத்து ஊர். லட்சத்திற்கும் அதிகமான மடத்து சிஷ்யர்கள் இருந்தனர். அவர்கள் சாதுர்மாச விரதத்தை மிகச் சிறப்பாக நிறைவேற்றிக் கொடுத்தனர். அங்கிருந்து ஸ்ரீகளவர் 'நிர்மள' ஊரின் ராஜனின் வேண்டுகோளுக் கிணங்க, நவராத்திரி விழாவிற்காக அங்கு திக்விஜயம் செய்தார். நவராத்திரி விழாவை இங்கு மிகச்சிறப்பாக கொண்டாடிவிட்டு, தீபாவளி பண்டிகைக்காக, பஞ்சரா மற்றும் கோதாவரி நதிகளின் சங்கமமான கொண்டலவாடி க்ஷேத்திரத்திற்கு வந்தார். தீபாவளி மகாஅபிஷேகத்தை இங்கு மிகவும் சிறப்பாகக் கொண்டாடினார். அங்கிருந்து தமது மூலகுருவான ஸ்ரீமஜ்ஜயதீர்த்தரின் தரிசனத்திற்காக, அவரது மூலபிருந்தாவனம் இருக்கும் மலகேட வந்தார். ஸ்ரீமத் ஜயதீர்த்தரின் தரிசனத்தைப் பெற்று, அங்கு சில நாட்கள் தங்கியிருந்து, ஸ்ரீமன் நியாயசுதா மங்களத்தை செய்தார். அங்கிருந்து கல்புர்கி வந்தார்.*

**ப்ராப்தஸ்தத: கலபுரிக்யபிதாம் புரீம் தாம்**
**ஆராதனம் நிஜகுரோ: குருரத்ரதன்வன் ।**
**நானாஹ்வயாவனி ப்ரதா க்ருதஹூதிரக்ர்யாம்**
**சேனாம் ஜகாம சமுதாதரிணா ததீயாம் ॥** *(ச.போ.வி.13.41)*

*கல்புர்கியில் குருவான ஸ்ரீசத்யப்ரியரின் மகா சமாராதனையை மிகச் சிறப்பாக நிறைவேற்றினார். குல்பர்காவின் சிஷ்யர்கள்*

என்றென்றும் உத்தராதி மடத்து சிஷ்யர்களே ஆவர். அங்கு நிகழ்ச்சிகளை நிறைவேற்றி, குருமிடகல் புறப்படும்போது, நானாசாகேப் பேஷ்வாவின் அழைப்பு வந்தது. சலாபத் ஜங்க் எடுத்து வந்த படையை முறியடிப்பதற்காக நானாசாகேப், பானகால் மற்றும் மஹபூப் நகரத்தின் மேல் படையெடுத்துச் சென்றார். அப்போது நடுவில் கல்புர்கியில் தனது கூடாரத்தை அமைத்தார்.

அதே சமயத்தில் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளும் குல்பர்கா வந்ததைக் கண்டு அவர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அவரின் அனைத்து சர்தார்களும், தென்னிந்தியாவின் அனைத்து மராடா சர்தார்களும், உத்தராதி மடத்து சிஷ்யர்களே. இவரின் அன்பிற்கு பாத்திரமானவர்கள். இவரது வழிகாட்டலிலேயே ஆட்சி நடத்துபவர்கள். தானும் ஸ்ரீகளவரின் அருளைப் பெறவேண்டுமென்று, நானாசாகேப் அவர்கள் தனது சேனையுடன் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளை பார்ப்பதற்காக வந்தார்.

ஸ்ரீகளவரும் அங்கு சில நாட்கள் இருந்து, நானாசாகேப் மற்றும் அவரது சேனையினருக்கு தத்வோபதேசம் செய்தார். ‘சைன்யே பஹூனி, திவஸானி நிவாஸித: ஸ்வே’. படையினருக்கு, சேனாதிபதிகளுக்கு மற்றும் பேஷ்வா அவர்களையும் ஆசிர்வதித்துவிட்டு, ஸ்ரீகளவர் மறுபடி குருமிட்கல் வந்தார். அங்கேயே சாதுர்மாதத்திற்கு அமர்ந்தார்.

சங்கோ கண்டேராஜன் சாவணூரைச் சேர்ந்தவர். வைஷ்ணவர். ஸ்ரீசத்யபோதரை அழைக்க வேண்டுமென்று கண்டேராஜன், குருமிட்கல் வந்தார். அவர் சாவணூரில் அரசு அதிகாரியாக இருந்தார். ஸ்ரீகளவர் சாவணூருக்கு வரவேண்டுமென்று வேண்டினார். ஸ்ரீகள்வர் அவருக்கு தான் பூஜித்த அழகான ஸ்ரீராம விக்ரகத்தைக் கொடுத்தார். ‘நாம் பூஜித்த இந்த விக்ரகத்தை நீ பூஜிப்பாயாக. அப்போது உனக்கு முதல்-மந்திரி பதவி வரும். அப்போது நாம் கண்டிப்பாக சாவணூர் வருவோம். உனக்கு என்றும் மங்களம் உண்டாகட்டும். சிறந்த அதிகாரம், செல்வம் அனைத்தும் கிடைக்கும். பின்னர் உன் சாவணூரிலேயே நாம் இருப்போம்’ என்று ஆசிர்வதித்தார்.

ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் குருமிட்கல்லில் இருந்தபோது ஒரு ருசிகர சம்பவம் நடைபெற்றது. ஒரு காலத்தில் தஞ்சாவூரின்

அரசனுக்கு ராஜகுருவாக இருந்த, ஸ்ரீஸ்வாமிகளை பல முறை அவமானப் படுத்த முயற்சித்த சேதுகோஸ்வாமி, நாடு கடத்தப்பட்டு மகாராஷ்டிரா வந்தான். அங்கும் அவனுக்கு யாரும் உதவி செய்ய வில்லை. அவனைப் பற்றி அறிந்த அனைவரும் அவனை துரத்தினர். அவன் மிகவும் வருந்தினான். குருமிட்கல்லில் இருக்கும் ஸ்ரீசத்யபோதரை காண்பதற்கு வந்தான். சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான். 'மிகப்பெரிய தவறு செய்துவிட்டேன். அவற்றை யெல்லாம், ஸ்ரீஸ்வாமிகள் பெரிய மனது செய்து மன்னித்து, என்னை முன்னைப் போலவே அருளவேண்டும்' என்று அரற்றினான்.

**ய: சேதுகோபதிரலம் ஹைஹனுதாபயுக்த: |**
**தம் தத்ர சத்யதிஷணம் ஷரணம் ஷரண்யம் ||** *(ச.போ.வி.13.46)*

ஸ்ரீகளவரின் கால்களில் விழுந்தான். ஸ்ரீகளவர் மிகவும் கருணாசாலி. அவனின் அனைத்து அபராதங்களையும் மன்னித்து அவனுக்கு அருளினார். மறுபடி ஒரு வைஷ்ணவனான, நம் சித்தாந்தத்தைப் பின்பற்றி வாழ்வதற்கும், தஞ்சாவூரில் கோஸ்வாமி மடத்தில் வாழ்வதற்கும் அருளினார். தஞ்சாவூர் அரசரின் சபையில் இடம் கிடைக்குமாறும் ஒரு கடிதம் எழுதினார். கோஸ்வாமியும் முதலில் இருந்ததைப் போலவே, ஸ்ரீசத்யபோதரின் பக்தனாக தஞ்சாவூரில் வாழ்ந்தான். செல்வம், பெயர், புகழ் அனைத்தையும் திரும்பப் பெற்றான்.

ஸ்ரீகளவர் அடுத்து ராய்ச்சூர் வந்தார். அங்கு ஒரு ஆண்டு காலம் தங்கியிருந்து, பாட பிரவசங்களை செய்தார். மகா சமாராதனை, சாதுர்மாசம், நவராத்திரி, தீபாவளி ஆகிய அனைத்து உற்சவங் களையும் ராய்ச்சூரில் மிகவும் விமரிசையாக கொண்டாடினார். இது ஸ்ரீகளவர் பிறந்த இடமாகும்.

**ஆதோத்பவாவனிம் அவாப்ய சராமிசூரம் |**
**வர்ஷம் சஹஸ்ரமவசத் க்ருதசர்வதோஷ: ||**

ஸ்ரீகளவர் ராய்ச்சூரில் ஒரு ஆண்டு காலம் தங்கியிருந்து பல கிரந்தங்களை பாடம் சொல்லி மங்களம் செய்தார். இதே சமயத்தில் கோபாலதாசரும் ஸ்ரீகளவரிடம் வந்து, ஆசி பெற்று, பல கிரந்தங் களின் பாடங்களை கற்றார். ஒரு நாள் தமது சகோதரர்களான தாசப்பா, சீனப்பா இவர்களுடன் ஸ்ரீகளவரின் அருகில் இருந்த

போது, ஸ்ரீகளவர் இவர்கள் மூவரையும் ஒரு பாடல் இயற்றுமாறு கூறினார். இவர்களும் ஒரு பாடலை இயற்றினர்.

அங்கிருந்து ஸ்ரீகளவர் 'கணிகே' வந்தார். இது ஒரு நதிக்கரையில் அமைந்த ஊர். இங்கு ஸ்ரீகளவர் சாதுர்மாதத்திற்கு அமர்ந்தார். அங்கு பிராமணர்களின் பெரிய அக்ரஹாரம் இருந்தது. அங்கேயே பூஜை, அபிஷேகம் மற்றும் ஸ்ரீசத்யப்ரியரின் மகாசமாராதனைகளை முடித்தார். அங்கிருந்து கிருஷ்ணா நதிக்கரையில், பல பண்டிதர்கள் வசிக்கும் ஊரான, ப்ராவடூர் / ப்ராகடூருக்கு வந்தார். இங்கு தினமும் கிருஷ்ணா ஸ்னானம், ஸ்ரீமதாசார்யரின் சாஸ்திர பாடம், பிரவசன, வரும் அனைத்து பக்தர்களுக்கும் அறுசுவை உணவு பரிமாறி அவர்களை மகிழ்ச்சிப்படுத்தியவாறு ஸ்ரீகள்வர் இங்கு ஆறு ஆண்டுகள் தங்கியிருந்தார். இதன் அருகிலேயே துங்கா நதிக் கரையில் ஆலம்புரா என்னும் ஊர் இருக்கிறது. இங்கும் ஸ்ரீமடத்து சிஷ்யர்கள் பலர் இருந்தனர். இங்கு ஸ்ரீகளவர் நவராத்திரி விழாவை முடித்துக்கொண்டு, மறுபடி ஹைதராபாத்திற்கு வந்தார்.

அங்கு ஷாலிபண்டாரத்தில் ஒரு பெரிய மடத்தைக் கட்டினார். பக்கத்தில் ஸ்ரீலட்சுமி நாராயண தீர்த்தம் என்னும் பெரிய ஏரியைக் கட்டினார். ஏழு அடி உயரத்தில் பெரிய வெள்ளி மண்டபத்தையும், இரு தங்க மண்டபங்களையும் நிறுவினார். பல நாட்கள் ஹைதரா பாத்தில் தங்கியிருந்து, பின்னர் லோகனஹல்லிக்கு வந்தார். அங்கிருந்த செல்வந்தர் ஒருவர் ஸ்ரீமடத்திற்கு யானை ஒன்றினை பரிசாக அளித்தார். சம்ஸ்தானத்தில் மொத்தம் பத்து யானைகள் இருந்தன. அங்கிருந்து சுரபுரம் வழியாக கஜேந்திரகட் வந்தார். கஜேந்திரகட்டில், செல்வந்தரான ஹிந்துராவ் கோர்படே அவர்கள் சம்ஸ்தானாதிபதியாக இருந்தார். அந்த மராடா சர்தாருக்கு ஸ்ரீசத்ய போதரின் மேல் அபாரமான பக்தி இருந்தது. ஸ்ரீகளவருக்கு பல நாட்கள் மரியாதை செலுத்தி, அவருக்கு வேண்டிய வசதிகளை செய்து கொடுத்தார்.

அங்கிருந்து ஸ்ரீகளவர் கனககிரி வந்தார். கனககிரி நரசிம்மருக்கு பூஜை செய்து, தினமும் தேவருக்கு கனகாபிஷேகம் செய்து, ஊரின் பெயரை அர்த்தமுள்ளதாக மாற்றினார். அங்கிருந்து கெஞ்சனகுட்டா வந்து, பெள்ளாரிக்கு வந்தார். ஆஸ்திகர்கள் அதிகம் இருந்த ஊர் பெள்ளாரி. ஸ்ரீமடத்து சிஷ்யர்களும் பலர் இருந்தனர். ஸ்ரீகளவர்

*இங்கு சில மாதங்கள் தங்கியிருந்தார். அங்கிருந்து தனது ப்ரியமான சிஷ்யரின் தலைநகரான குத்தி வந்தார். முராரிராயர் சில அரசாங்க விஷயங்களை ஸ்ரீகளவரிடம் விவாதிக்க வேண்டுமென்று ஆவலுடன் காத்திருந்தார். இந்த முறை நடக்கவிருக்கும் 25வது மகா சமாராதனையை குத்தியிலேயே நடத்த வேண்டுமென்று ஸ்ரீகளவருக்கு கடிதம் எழுதி சொல்லியிருந்தார்.*

*அதன்படியே குத்தி வந்த ஸ்ரீகளவருக்கு, நல்ல மரியாதையுடன் வரவேற்பு அளிக்கப்பட்டது. ஸ்ரீமூலராமனின் பூஜை, ஸ்ரீசத்ய ப்ரியரின் மகா சமாராதனைகள் மிகவும் அற்புதமாக நடந்தேறின. குத்தியில் ஒவ்வொரு ஆண்டும் ஸ்ரீராமனின் ரதோத்ஸவம் நடந்து வந்தது. அந்த ரதம் மிகப் பெரியதாகும். கற்களால் ஆன சக்கரங்கள். சில ஆண்டுகளாக ரதம் எவ்வளவு பேர் இழுத்தும் நகரவேயில்லை. இந்த முறை, ஸ்ரீகளவர் அங்கு இருந்ததால், அவர் வந்து அந்த கயிறை தொட்டதும், ரதம் தானாகவே முன்னேறத் தொடங்கியது. அனைவரும் மிகவும் மகிழ்ந்து ஸ்ரீகளவரை கொண்டாடினர்.*

*ஸ்ரீகளவரின் பூஜையை தனது படையினர் இருக்கும் இடங் களிலும் நடத்தினார் முராரிராயன். தனது சேனாதிபதிகள், படையினர் அனைவருக்கும் ஸ்ரீகளவரின் அருள் கிடைக்குமாறு செய்தார். இதனால் அவர்களின் புகழ் பரவிற்று. அவர்களுக்கு ஸ்ரீகளவரின் மேல் பக்தியும் அதிகம் இருந்தது.*

*ஸ்ரீகளவர் அங்கிருந்து ராயதுர்கா வந்தார். ராயதுர்காவின் அதிபதியின் வேண்டுகோளுக்கிணங்க, ஸ்ரீகளவர் அங்கேயே ஆறு மாதங்கள் வரை தங்கினார். ஸ்ரீமடத்தின் பெரிய கட்டிடத்தை அங்கு கட்டினார். லட்ச புஷ்பம், துளசிகளை அர்ப்பித்தார்.*

**பஞ்சவிம்சதி சஹஸ்ர சங்க்யகா: ஸ்ரீபதே: சுமனஸ் சமர்பயன் |**
**லாகவே சப்ருஷமேகவாஸரே தத்ர விஸ்மய மவாப யஜ்ஜனான் ||**
*(ச.போ.வி. 13.64)*

*ஒரே நாளில் 25,000 பூக்களை ஸ்ரீராமசந்திரனுக்கு அர்ப்பித்தார் ஸ்ரீசத்யபோதர். அவரது ஆளுமை, பக்தி, உற்சாகம் ஆகியவற்றைக் கண்டு மக்களுக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. தட்டிலிருந்து பூ எடுத்து ராமனின் மேல் அர்ச்சிப்பதே தெரியவில்லை, தன் கைகளிலேயே பூ மலரச் செய்தது போல இருந்தது அவரது செயல் என்று மக்கள் வியப்படைந்தனர். தமது பீடாதிபத்யத்தில் பல கோடி*

*அர்ச்சனைகளை செய்வித்தார் ஸ்ரீகளவர். அதே அளவு துளசியையும் சமர்ப்பித்தார்.*

*சித்ரதுர்காவின் அதிபதி வேண்டி கேட்டுக் கொண்டதால், அடுத்து அங்கிருந்து சித்ரதுர்கா வந்தார் ஸ்ரீகளவர். சில நாட்கள் அங்கு தங்கியிருந்து, பக்தர்களின் சேவையைப் பெற்றுக்கொண்டு, பின் ஹரிஹர வந்தார். இந்த ஊருக்கு குஹாரண்யம் என்று பெயர். இது புராணத்தில் பெயர் பெற்ற தலம். குஹாசுரனைக் கொல்வதற்காக ஹரிஹரர்கள் ஒரே பிரதிமையில் தோன்றிய தலம். இங்கு தினமும் துங்கா ஸ்னானம், ஜபதபம், ஸ்ரீமூலராம பூஜை, பாட பிரவசனம் என்று செய்துகொண்டு ஸ்ரீகளவர் இங்கு மூன்று மாதங்கள் வரை தங்கியிருந்தார். அப்போது ஸ்ரீராமனுக்கு மகா அபிஷேகம், குருகளுக்கு சமாராதனை ஆகியவற்றை நிறைவேற்றினார்.*

*ஸ்ரீகளவர் ஹரிஹரக்கு வந்த செய்தியைக் கேட்ட, சாவணூரின் சங்கோ கண்டேராயர், தனது மகனை அவரிடம் அனுப்பினான். 'ஸ்வாமிகள் விரைவில் சாவணூருக்கு வரவேண்டும். சாதுர்மாதம் முதலான அனைத்து விரதங்களையும் இங்கே நிறைவேற்ற வேண்டும். தாம் வரும்போது மிகப்பெரிய வரவேற்பு நிகழ்ச்சி செய்து, தங்களை வரவேற்க வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. எப்போது வருகிறீர்கள் என்று தெரியப்படுத்தவும்' என்று கண்டேராயர் வேண்டினார்.*

*தமது மகனான தம்மப்ப நாயகனை அனுப்பி, அவன் மூலம் குருகாணிக்கை, பழம் பூக்களை அர்ப்பித்து, பாதபூஜைகளை செய்வித்து மேற்படி வேண்டினான். ஸ்ரீகளவரின் வருகையை தமது தந்தை மிகவும் ஆவலுடன் எதிர்பார்ப்பதாக மகன் தெரிவித்தான். மடத்து பண்டிதர்களும் சாவணூருக்கு செல்லலாம் என்று தெரிவித்தனர்.*

**குருர்ஜகத்யா: சஹ ராமசந்த்ரோ பவான்ன ஏதர்ஹி மனோரதாப்திம்।**
**சம்பூர்ணதாம் சேதுமஷ்டைது தூர்ணம் நாதேத்ய நானதிதி மத்பிதா த்வாம் ॥** *(ச.போ.வி.14.7)*

*ஆனால் அந்த சமயத்தில், துங்கா நதியில் கங்கை வரக்கூடிய சந்தர்ப்பம் ஆகையால், ஸ்ரீகளவர் அங்கேயே இருக்க விரும்பினார். இதை எண்ணியவாறு இருந்தவருக்கு அன்றிரவு ஒரு கனவு*

தோன்றியது. சாக்சாத் கங்காதேவியே ஒரு சுமங்கலி ரூபத்தில் வந்து வேண்டினார். 'யதிஸ்ரேஷ்டரே, கார்த்திக மாதத்தில் ஊருக்கு வெளியில் இருக்கும் கிணறுக்கு ஸ்னானம் செய்யப் போனால், அங்கு அத்தி மரத்தின் கீழ் சாக்ஷாத் கங்காதேவி தோன்றுவாள். உங்களுக்கு தினமுமே கங்கா ஸ்னானம் செய்யும் தகுதி இருக்கிறது. நீங்கள் சந்தேகப்படாமல் சாவணூருக்கு வரவும்'.

**.. சுவாசினி ஸ்வப்ன உவாச காசித்**
**யாம் தீர்க்ககாம் ஸ்னாதுமியா: நகர்யா:**
**பஹிஸ்த்வ மூர்ஜே சுரதீர்க்ககாம் தாம் ।**
**யாண்த்ராகதேத் யாகம மானகம்யா**
**சோதும்பராத் சர்வசமக்ஷ மேயாத் ॥** *(ச.போ.வி.14.10)*

'உங்களுக்கு தினமுமே கங்கா ஸ்னானம் கிடைக்கும்' என்று கனவில் அந்த தேவதை சொன்னதைப் போல, ஸ்ரீகளவர் சாவணூருக்குக் கிளம்பினார். பரிவாரங்களையும் கிளம்பச் சொன்னார். ஹரிஹரவிலிருந்து புறப்பட்டார் என்று தெரிந்ததும் அந்த ஊர் மக்களின் கண்களில் நீர் நிரம்பியது. அவருக்கு விடை கொடுக்க அவர்கள் என்றும் தயாராக இல்லை. ஹரிஹர மக்களுக்கு பிரிவின் கண்ணீர் என்றால் சாவணூர் மக்களுக்கு குருகள் தமது ஊருக்கு வருகின்றார் என்று எண்ணி ஆனந்தக் கண்ணீர். வழியில் நரசிம்மாசார்யரின் வீட்டில் ஸ்ரீகளவர் மூன்று நாட்கள் தங்கினார். இந்த ஏழை பிராமணர், தமது வீட்டில் ஸ்ரீராமனின் பூஜை நடக்கவேண்டுமென்று ஸ்ரீகளவரிடம் வேண்டியிருந்தார். அதை நிறைவேற்றிய ஸ்ரீகளவர், பின் அங்கிருந்து சாவணூருக்கு வந்தார்.

சர்வஜித் சம்வத்ஸரம் ஆஷாட சுத்த நவமியன்று ஸ்ரீகளவர் சாவணூருக்கு திக்விஜயம் செய்யப்போவதாக ஏற்கனவே தீர்மானித்திருந்தார். வரதா நதிக்கரையிலிருந்தே ஸ்ரீகளவரை ஊர்வலமாக அழைத்துப் போவதாக பேசியிருந்தனர். திவான் கண்டேராயர், விடியலிலேயே தனது ஸ்னான சந்தியாவந்தனைகளை முடித்துக்கொண்டு, ஊர்வலம் புறப்படும் இடத்திற்கு வந்து சேர்ந்தார்.

ஸ்ரீகளவரும் தமது சம்ஸ்தானத்துடன், சூரிய உதய காலத்திற்கு அந்த நதிக்கரைக்கு வந்தார். யானை, ஒட்டகம், குதிரை, காலாட் படை, சாவணூர் மக்கள் என அனைவரும் அந்த நேரத்தில் அங்கு

*தயாராக வந்திருந்தனர். ஸ்ரீகளவர் வந்தவுடன் அனைவரும் வந்து சாஷ்டாங்கமாக அவரை வணங்கினர். திவான் மற்றும் நவாப் இருவரும், வெறும்காலுடன் நடந்து வந்து, ஸ்ரீகளவரை வணங்கி, கொண்டு வந்திருந்த தங்கம், வெள்ளி பரிசுகளை அவரிடம் சமர்ப்பித்தனர். அவரை வரவேற்றனர்.*

**ஆத்வமாத்வமிதி மாத்வ சுவம்ஷோத்புதி மத்யுதிதவத்யுத போதே ।**
*(ச.போ.வி.14.21)*

*அனைவரும் அமரவும், அமரவும் என்று சம்ஸ்தானாதி பதியான ஸ்ரீசத்யபோதர் கை காட்டி சைகை செய்தார். பின் அனைவரையும் அன்புடன் நோக்கியவாறு பேசத் துவங்கினார்.*

*அதற்குமுன் கண்டேராயன் ஸ்வாமிகளை வரவேற்றுப் பேசினார். 'ஸ்வாமிகளே. நமது புண்ணியத்தினால் தங்களின் தரிசனம் கிடைத்தது. எங்களது பாவமும் பரிகாரம் ஆயிற்று. இந்த பகுதி மக்கள் வெகு நாட்களாக தப்த முத்ராதாரணம் பெற்றுக் கொள்வதற்காக காத்திருக்கின்றனர். தமது முக-கமலத்திலிருந்து சர்வமூல பாடத்தை கேட்க வேண்டுமென்று விரும்புகின்றனர். இன்றே அனைவரின் வேண்டுதல்களும் நிறைவேறும் சமயம் வந்திருக்கிறது'. என்றவாறு ஸ்ரீகளவருக்கு மரியாதை செலுத்தினார்.*

**வரரத சிபிகாந்தரே நிஷண்ணோ**
**த்விஜவரவீஜித சாமரோ யயௌ ஸ: ॥** *(ச.போ.வி. 14.25)*

*யானையின் தந்தத்தால் செய்யப்பட்ட அழகான பல்லக்கில் ஸ்ரீகளவரை அமர்த்தி, பிராமணர்கள் பலரும் அந்த பல்லக்கை தூக்கியவாறு, வேதகோஷம், பஜனை, வாத்ய கோஷங்களுடன் அவரை ஊர்வலத்தில் அழைத்து வந்தனர். வழியில் ஆயிரக் கணக்கான மக்கள் திரண்டு வந்து, ஸ்ரீகளவரை வணங்கி, அவரிடமிருந்து பல-மந்திராக்ஷதைகளை பெற்றனர்.*

**அக்ரேபாகே ப்ரணிஹித பலான் நந்தயன் வந்தமானான் ।**
**த்ருஷ்ட்வா வாசா ஜனபத ஜனான் ஜக்மிவான் வாக்மிவர்ய: ॥**
*(ச.போ.வி. 14.26)*

*அப்படி வந்தவர்கள் அனைவரையும் பார்த்து கையசைத்து, ஆசிர்வதித்து, அடையாளம் கண்டு, குசலம் விசாரித்து, வழியனுப்பி வைத்தார் ஸ்ரீகளவர். ஸ்ரீகளவர் நம்மைப் பார்த்து சிரித்தார், பேசினார்*

என்று அனைவரையும் மகிழ்ச்சியடைய வைத்தார். அக்கம்பக்க ஊர்களிலிருந்து ஆயிரக்கணக்கானோர் இந்த வரவேற்பு நிகழ்ச்சியில் வந்து கலந்து கொண்டனர். ஏகப்பட்ட சுமங்கலியர் கைகளில் ஆரத்தி தட்டுடன் நின்று ஸ்வாமிகள் வந்தவுடன் ஆரத்தி எடுத்தனர். ஒவ்வொரு அடிக்கும் பூக்களின் மழை பொழிந்தது.

பட்டத்து யானையின் மேல் அம்பாரி வைத்து, அதில் ஸ்வாமிகளை ஏற்றி, ஊர்வலம் தொடங்கியது. ஊரே மகிழ்ச்சியடைந்தது. மாலைகள், தோரணங்கள், கோலங்கள் என அனைத்து தெருக்களும் விழாக்கோலம் பூண்டன. பரமஹம்ஸ சக்ரவர்த்திகளின் வருகையினால் அனைவரும் பெருமையடைந்தனர். வேதகோஷம், வாத்திய கோஷங்களின் ஒலி ஆகாயத்தை எட்டியது. எங்கெங்கு பார்த்தாலும் மக்கள் கூட்டம், கால் வைக்க இடம் இல்லாத கூட்டம். அரண்மனையின் வாயிலை அடைந்து ஸ்ரீகளவர் சபை அரங்கத்தின் நுழைந்தார்.

கண்டேராயர் ஸ்ரீகளவருக்கு பாதபூஜை செய்தார். அபார செல்வத்தினை காணிக்கையாக கொடுத்த அவனின் பக்தி, பணிவினைக் கண்டு ஸ்ரீகளவர் மகிழ்ச்சியடைந்தார். தனிமையில் இருந்தபோது ஸ்ரீகளவரிடம் இவ்வாறு வேண்டினான். 'ஸ்வாமிகளே. தாங்கள் இந்த ஊரிலேயே பல காலம் தங்கியிருந்து, தங்களின் பாட பிரவசனங்களை செய்து எங்களை மேம்படுத்தவேண்டும்'. ஸ்ரீகளவரும் அதற்கு சம்மதித்தார்.

முதல் மூன்று நாட்கள் - தசமி, ஏகாதசி மற்றும் த்வாதசி - கண்டேராயரின் வீட்டிலேயே பூஜை, முத்ராதாரணம் நடைபெற்றது. அடுத்த நாள் கோபாலகிருஷ்ண நாயகரின் வீட்டில் பூஜை நடைபெற்றது. ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் தமது 22வது சாதுர்மாத விரதத்தை சாவணூரிலேயே நிறைவேற்றினார்.

**பிரதிதினம் குருணா ததனந்தரம் பஹு சுதாமஸமுத்ரீத ஹேமபி: ।**
**ரகுபதேர பிஷேகம சேகரத் ஸ்வயமஸௌ சகலைர் தனிகைரபி ॥**
*(ச.போ.வி. 14.51)*

கங்கை வந்து சேர்ந்த துங்கா நதியில் தினமும் ஸ்னானம், ஸ்ரீமூலராம திக்விஜய ராமருக்கு கனகாபிஷேகம், சர்வமூல, ஸ்ரீமன் நியாய சுதாதி கிரந்தங்களின் பாட பிரவசனம், தினமும் பல மந்திரங்களின் ஜபம், சஹஸ்ர துளசி அர்ச்சனை, பரமான்னங்

களுடன் நைவேத்யம், ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னதானம் ஆகிய நிகழ்ச்சிகள் மிகவும் வைபவத்துடன் நடைபெற்றன.

ஒரே இடத்தில் சில நாட்கள் ஸ்வாமிகள் இருக்கப்போகிறார் என்று அறிந்த கற்றறிந்த பண்டிதர்கள், தங்கள் சிஷ்யர்களுடன், ஸ்வாமிகள் இருக்கும் இடத்திற்கு, பாட பிரவசனங்களைக் கேட்பதற்கு விரைந்து வந்தனர். பல்லக்கியில் பயணம் செய்துவந்த கார்பாட ஸ்ரீனிவாசாசார்யர், மேதாவியான பாண்டிரங்கி நரசிம்மா சார்யர், தங்கள் பற்பல சிஷ்யர்களுடன் ஸ்ரீகளவரிடம் வந்தனர். பாண்டுரங்கி அண்ணய்யாசார்யர், வயதான பண்டிதரான லக்குண்டி ஆனந்ததீர்த்தாச்சார், அவரின் மகனான ரகுநாதாசார்யர், பாடம் படிப் பதற்காக வந்தனர். அண்ணிகேரி ஜயதீர்த்தாச்சார், மளகி தம்மண்ணாசார் என ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளின் சன்னிதியிலேயே பிரமாண பத்ததியில் தொடங்கி, ஸ்ரீமன் நியாயசுதா, வியாஸத்ர யங்கள் வரை தினமும் படிக்கும் நூற்றுக்கும் மேற்பட்ட பண்டிதர்கள் அங்கு இருந்தனர். 'மட: சாத்ராதி நிலய:' என்னும் வாக்கினை உண்மையாக்கினர். பங்காபுரத்தின் பண்டிதர் பீமாசார்யர், அவரின் மகன் ராமசந்திராசார்யர், இருவரும் தங்களின் சிஷ்யர் களுடன் வந்து இங்கேயே வசித்தனர்.

அன்யே ச யே யே ப்ரதிதா மஹீதலே விபஸ்சிதஸ்தே சகலா: சமாகதா: |
ஆரங்க ராமேஷ்வர தீர்த்த மா கயாகாஷி ஸ்திதா அஸ்ய ஹி சிஷ்ய வர்ககா: ||
(ச.போ.வி. 15.14)

மாத்வ சமாஜத்தில் மிகப் புகழ்பெற்ற பண்டிதர்கள், வித்வான்கள் என அனைவரும் சாவணூருக்கு வந்திருந்தனர். ஸ்ரீகளவரின் உலகப் பிரசித்தி பெற்ற பாண்டித்யம், ஆளுமை, நிரந்தமாக பாடம் சொல்லும் திறன், கருணை, தான தர்மங்கள் - அனைத்து வித்வாம்சர்களையும் ஈர்த்தது. பண்டிதர்களை உபசரிப்பது, மாணவர்களை ஊக்குவிப்பது அனைவரையும் மகிழ்வித்தது. ஸ்ரீரங்கம், ராமேஸ்வரத்தில் துவங்கி, காசி கயா வரைக்கும் இருக்கும் அனைத்து அறிஞர்களும் சாவணூருக்கு வந்தனர். அனைவரும் தீபாவளி வரை ஸ்ரீமடத்திலேயே தங்கினர். விடியலில் துவங்கி நடுநிசி வரைக்கும் பாட, பிரவசன, ஜப தபங்கள் தொடர்ந்து நடந்து வந்தன.

*நவராத்திரி நிகழ்ச்சி மிகவும் அற்புதமாக இருந்தது. அலங்காரங்கள், தோரணங்கள் என அனைத்து வீடுகளும் விழாக்கோலம் பூண்டன. வெள்ளி, தங்கத்திலான மண்டபங்களை ஸ்ரீசத்யபோதர் நிர்மாணித்தார். பல வைர வைடூரிய பதக்கங்களை செய்வித்து, ஸ்ரீராமனுக்கு மிகுந்த பக்தியுடன் அர்ப்பித்தார். ஸ்ரீமடத்து செல்வத்தை அதிகப்படுத்தினார். பெரும்புகழை ஈட்டித் தந்தார். ஒருமுறை கார்த்திக மாதத்தில் விடியலில் ஸ்ரீகளவர் தமது சிஷ்ய பரிவாரங்களை அழைத்துக்கொண்டு, ஸ்னானத்திற்கு புறப்பட்டார். ஊருக்கு வெளியில் இருக்கும் ஒரு கிணறுக்கு வந்தார். சுற்றிலும் பசுமையான தோட்டங்கள். அவற்றிற்கு நடுவில் இந்த கிணறு இருந்ததே பலருக்கும் தெரியவில்லை. சங்கல்பம் செய்தவாறு அங்கு ஸ்னானத்திற்கு இறங்கினார்.*

**கங்காகதா ஞாபயிதும் மஹத்தரம் மஹாத்ம்ய மஸ்யேதி விநிச்சிதாந்தரை: ।**
**ஆஷ்சர்ய பூரே க்ருதமஜ்ஜனைர்ஜனை: புர: சஹாஸ்ராத் ததுதாரவார்ஷ ஸ: ॥** *(ச.போ.வி. 15.34)*

*இந்த கிணற்றின் மூலையில் ஒரு பெரிய அத்தி மரம் இருந்தது. அந்த மரத்திலிருந்து முத்து முத்தாக தண்ணீர் வந்துகொண்டிருந்தது. அனைவரையும் அந்தக் காட்சியை பார்க்குமாறு கூறினார். ஹரிஹரவில் இருக்கும்போதே தனது கனவில் கங்காதேவி வந்து, இந்த மரத்தில் நான் தோன்றுவேன் என்று கூறியதை அனைவருக்கும் நினைவுபடுத்தினார். அனைவரும் கங்காதேவியை ஸ்தோத்திரங்களால் வணங்கினர். அங்கேயே ஸ்ரீகளவரும், மற்றவர்களும் தங்கள் ஸ்னான, ஆன்ஹிகங்களை முடித்துக் கொண்டனர்.*

*அன்று ஸ்ரீமடத்தில் அனைத்து சுமங்கலிகளுக்கும் முரத பாயிண, புடவை ரவிக்கைத் துண்டுகள் விநியோகிக்கப்பட்டன. அன்றிலிருந்து அந்த கிணறுக்கு விஷ்ணுதீர்த்தம் என்று பெயர் வந்தது. கண்டேராயர் அந்த கிணற்றில் குளிப்பதற்காக படித் துறையை கட்டினார். அங்கு அமர்ந்து, தினப்படி ஆன்ஹிகங்களை செய்து முடிப்பதற்கும் தகுந்த ஏற்பாடுகளை செய்தார்.*

**கௌதுஸ்குத: கஸ்ய இதி ப்ரப்ருச்சதா க்ராமந்தராதேத்ய நமன் ஜன: ஷுப: ।** *(ச.போ.வி.14.45)*

ஸ்ரீகளவர் அந்த படித்துறையில் அமர்ந்து பாடம் சொல்லும்போது, வெவ்வேறு கிராமங்களிலிருந்து பலர் வந்து அவரை வணங்கி வந்தனர். ஒவ்வொருவரையும் ஸ்ரீஸ்வாமிகள் இவ்வாறு கேட்டு வந்தார். 'நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்? நலமா?'. இக்கேள்விகளால் அனைவரும் மகிழ்ந்தனர். விஷ்ணு தீர்த்தத்தின் அருகிலேயே பெரிய குடிசை கட்டி ஸ்ரீகளவர் அங்கேயே வசித்தார். மடம் கட்டி முடிப்பதற்கான மூன்று தீபாவளி வரைக்கும், எண்ணெய்க் குளியலுக்கு விஷ்ணு தீர்த்தத்தின் அருகிலேயே இருந்தார் ஸ்ரீகளவர்.

சில நாட்களாக ஒரு பெரிய கருங்குரங்கு ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளின் அருகில் வந்து அமர்ந்து கொண்டிருந்தது. சிலர் கற்களை எறிந்து அதை விரட்டினாலும், சிறிதும் நகராது ஸ்வாமிகளின் பக்கத்திலேயே அது வந்து அமர்ந்தது. அதை யாரும் விரட்டக்கூடாதென்று ஸ்ரீகளவர் ஆணையிட்டார். ஸ்னானம் செய்தபிறகு அதற்கு கோபிசந்தனம் அணிவித்தார். தீர்த்தம், சந்தனம், துளசியைக் கொடுத்து வந்தார். அந்த குரங்கும் இவை அனைத்தை யும் பக்தியுடன் ஏற்றுக் கொண்டிருந்தது.

**சது ச துலசீ தீர்த்தாங்கரபாக் சர்வலோகம் ।**
**கமயதி பஹுசித்ரம் ஸ்மார்யவர்ய ப்ரஸாதீ ॥** *(ச.போ.வி.15.53)*

ஸ்ரீகளவர் அக்குரங்கிற்கு நைவேத்யத்தை அளித்துக் கொண் டிருந்தார். அதுவும் மிகுந்த பக்தியுடன் அதை வாங்கி உண்டுவந்தது. துளசி மாலையை வாங்கி கழுத்தில் போட்டுக் கொண்டிருந்தது. குரங்குகளின் சாமான்ய புத்தி அதற்கு இருக்கவில்லை. அங்கு ஸ்ரீகளவர் சொல்லி வந்த கீதாபாஷ்ய பாடத்தை ஒருமனதுடன் கேட்டு வந்தது. இப்படி ஓரிரு மாதங்கள் வரை பாடம் கேட்டு வந்த அக்குரங்கு, பின் இறந்தது. சொன்னெயின் கோனேரிராயர் தனது இந்த பிறவிப்பயனை அனுபவித்து, முக்தி அடைந்தார்.

தமது பூஜா, பாட, பிரவசனங்களுக்கும், ஊருக்கு வரும் பக்தர்களுக்கு உதவியாக இருக்க வேண்டுமென்றும், அங்கு ஒரு பெரிய மடத்தைக் கட்டினார் ஸ்ரீகளவர். அங்கு பழைய மடத்தில் இருந்த விட்டல மற்றும் த்ரிவிக்ரம பிரதிமைகளை ஸ்தாபித்தார். பேஷ்வா ராஜனின் தாய் மாமனான ஆனந்திராயர் மிகவும் நோய்வாய்ப் பட்டிருந்தார். எந்த வைத்தியரிடம் போனாலும்,

*எந்தவொரு முன்னேற்றமும் காணப்படவில்லை. ஆனால் அவர் ஸ்ரீபாதங்களவரை வந்து வணங்கி, அவர் கொடுத்த பாதோதகத்தை எடுத்துக் கொண்டதில் நல்ல முன்னேற்றம் காணப்பட்டது. ஸ்ரீகளவர் கூறியதைப் போல, விஷ்ணுதீர்த்தத்தில் அடுத்த மூன்று நாட்கள் ஸ்னானம் செய்து, முழுமையாக குணமடைந்தார் ஆனந்திராயர்.*

★★★

## குருகளுக்கு விஷம் கொடுத்தனர்

*ஸ்ரீசத்யபோதரின் பாட பிரவசன, தவம், ஜப தப அனுஷ்டானங்கள் எத்தகையவருக்கும் மகிழ்ச்சியை தரக்கூடியதாகும். அவரது அனைத்து நிகழ்ச்சிகளிலும் பல்வேறு மக்கள் கலந்து கொண்டு வந்தனர். ஆனால், இவற்றைக் கண்டு பொறாமைப்பட்ட சிலரும் இருந்தனர். அவர்களின் மனதில் வன்மம் குடி கொண்டிருந்தது.*

அசூயா எலவோனியாம் தாதா
தோகேசிஷ்ய தத்தாதா ப்ரவர்தலே ।
விஷகாலோனியா துர்தர
மாராவாயதீஷ்வர ருடகரீ ॥ *(மராடி ச.போ.வி. 4.18)*

ஹரிபக்தி குருபக்தி சஜ்ஜனரு பெளெசுத்திரெ
எரடொந்து துர்ஜனரு ஹொட்டெகெச்சினலி ।
துருளதனதலி பீட அபஹரிசலு நெனெது
கரள ஹாகிதரு ரஹஸ்யதி பாயஸதொள் ॥ *(பிரசன்ன ஸ்ரீனிவாச தாசர்)*

மருள போதனெயிந்தா கரளசூர்ண தந்து
பரமான்னதி ஹாகிரலு நைவேத்யத ஹரிகர்ப்பிஸி அந்து
சர்வக்ஞரே நீவே திளிது ஸ்ரீராமன கொரள கப்பகண்டு
ஏருதஹ விஷஹர த்வாதஷ ஸ்தோத்ரவ படிஸி பூர்ணவெந்தவு
மனனொந்தே ॥ *(நரசிம்ம விட்டலர்)*

*சிறிய-சமையலை செய்யும் சமையல்காரரை தன் வசப்படுத்தினர். முதலில் அவன் இதற்கு ஒப்பவில்லை. ஆனால் நூறு தங்க நாணயங்களைக் கொடுத்து இதற்கு சம்மதிக்க வைத்தனர். சமையலில் விஷம் சேர்க்க ஒப்புக்கொண்டான்.*

**யதி ஹத்யாசியா பாபா**
**லோகே நாஹி த்ருஷ்டாந்த பாபா ।**
**ஐஸே சாங்கோனியா கோபா**
**மனே சந்தாபா அணிதாசாலா ॥** *(மராத்தி ச.போ.வி.)*

*யதிகளை கொன்றால் அதற்கு எப்போதும் பரிகாரமே இல்லை. இதை நான் ஒருக்காலும் செய்யமாட்டேன் என்று மறுத்த அந்த சமையல்காரருக்கு நூறு தங்க நாணயங்களைக் கொடுத்து மயக்கினர். பேராசை யார் மனதையும் மாற்றிவிடும். இக்கொடுஞ் செயலுக்கு அவன் ஒப்புக்கொண்டான். விஷம் கலந்த சமையலை நைவேத்தியத்திற்குக் கொண்டு வந்து வைத்தான்.*

**அபிமந்த்ரோணி பகாவரே**
**ஸ்ரீராமாஸ அர்ப்பண கரே**
**த்யாஸமயே ராமகண்டாதரே**
**விஷபாரி திஸதே சாலே ॥** *(மராத்தி ச.போ.வி)*

*கொண்டு வந்த உணவின் மேல் நீர் தெளித்து, நைவேத்தியம் செய்தார். ஸ்ரீராமனின் கழுத்து நீல நிறமாக மாறியது. உணவில் விஷம் கலந்திருக்கிறது என்று அறிந்து கொண்டார். சமையல்காரரை அழைத்து விஷயம் கேட்டார். ஏன் இப்படி செய்தாய் என்று வினவினார். பேராசைப்பட்டு இப்படி செய்துவிட்டேன். என்னை மன்னித்துவிடுங்கள் என்று அழுதான் அவன்.*

*விஷம் கலந்த இந்த உணவை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டாம் என்று சிலர் கூறினர். ஆனால், ஸ்ரீராமனுக்கு நைவேத் தியம் காட்டியாகிவிட்டது. ஆகவே நான் இதை ஏற்றுக் கொள் கிறேன் என்றவாறு ஸ்ரீகளவர் அதை உண்டார். பாற்கடலிலிருந்து விஷம் வந்தது. அதிலிருந்தே மகாலட்சுமியும் வந்திருக்கிறாள். ஆகவே அவளை வேண்டினார். அந்த விஷத்தை ருத்ரதேவர் குடித்தார். ஆகையால், அவரையும் சிறப்பு ஸ்தோத்திரங்களினால் வணங்கினார்.*

*சிஷ்யர்கள் பயந்தனர். மருத்துவர்களிடம் கேட்டனர். விஷம் சாப்பிட்டதால், தூங்காமல் முழித்திருக்க வேண்டும் என்றனர் அவர்கள். ஸ்ரீராமதேவனின் அருளினால் தனக்கு எதுவும் ஆகாது என்று ஸ்ரீசத்யபோதருக்கு தெரிந்திருந்தாலும், சிஷ்யர்களின் ஆசைக்காக, பகலிலும் தொடர்ந்து வந்த இரவிலும் தூங்காமல், பாட*

*பிரவசனங்கள், ஜப தபங்கள் ஆகியவற்றை செய்தார். பிரச்னை எதுவும் வரவில்லை. விஷம் அதன் வேலையை செய்யவில்லை. ஸ்ரீராமனின் அருள் தனக்கு இருக்கிறது என்பதை இதனால் நிரூபித்தார் ஸ்ரீகளவர்.*

*தன்னைக் கண்டால் ஆகாதவர்கள் சிலர் இருக்கின்றனர் என அறிந்து கொண்டார் ஸ்ரீசத்யபோதர். ஒரு நாள் இரவு ஸ்ரீராமசந்திரனின் பூஜையை முடிக்கும் நேரம். மங்களாரத்தி செய்து அதை சிஷ்யர்களுக்குக் காட்டினார். ஒரு சிஷ்யனிடம் 'உள்ளே இருக்கும் பண்டிதர்கள், கிருஹஸ்தர்கள் அனைவரையும் சிறிது நேரம் வெளியில் அழைத்து வா. வந்து அவர்களை வானத்தைப் பார்க்கச் சொல்' என்றார்.*

**தோ ஆகாஸே தேகதாம் வித்வத்குணே**
**மத்யபாகி ஹோதா வாஸரமணே ।**
**சத்யபோதாச்யா தபோபளே**
**ராத்ரீ த்ருஷ்டீப ரவிமண்டல** *(மராத்தி ச.போ.வி)*

*அனைத்து பண்டிதர்கள் கிருஹஸ்தர்களும் வெளியில் வந்தனர். நல்ல மதியத்தைப் போன்ற வெளிச்சம். அனைவருக்கும் கண் கூசியது. நடுநிசியில் சூரியனா என அனைவரும் வியந்தனர். வெளிச்சத்தில் யாருக்கும் கண் தெரியவில்லை. இத்தகைய மகாமகிமரே ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள். அவரது சரம-ஸ்லோகமே அவரது மகிமைக்கான சாட்சியாகும்.*

**நைவேத்யக விஷம் ராமே விக்ஷ்ய தத் பக்திபாக்குரு: ।**
**யோண்தர்ஷயத் ரவிம் ராத்ரௌ சத்யபோதோஸ்து மே முதே ॥**
*(ப.ச.வி.4.66)*

*அவரை எதிர்த்தவர்கள் இந்த மகிமையைக் கண்டு பயந்து, அவரிடம் சென்று காலில் விழுந்து மன்னிப்பு கேட்டனர்.*

**அபஹாஸ்ய மாடிதவரிகாக்ஷண தபனன தோரித விபரீத மஹிமனே**
*- வெங்கடேச விட்டலர்*

**மதார்யா அபால்யம் தவபஜன சம்சக்தஹ்ருதயா**
**ஜஹுர்னித்ராம் தேஷாம் குருவர வியோஸ்ம்யவது மாம் ॥**
*- ஸ்ரீசத்யசந்தர்*

**ஆர்யோ அனிமிஷத்வ முர்விகுரு:**
**ராத்ரௌ வேதாந்த விசார பாரேண மனா ஜாகர்தி ।** *- (கு.வ.5.15)*

*ஸ்ரீசத்யபோதரின் தவ வலிமைக்கு இரவில் சூரியனைக் காட்டியது ஒரு சாதாரண விஷயமே. அவரது உபாசனா பலம் அத்தகையது. அவரின் ஹரிபக்தி மிகச் சிறந்தது. ஸ்ரீஹரியே அருளியபிறகு எதுவுமே சாத்தியம். ஸ்ரீகளவரை நிந்தித்தவர்களின் அகக் கண்கள் திறந்தன.*

*அக்கம்பக்கத்தில் இருக்கும் கிராமங்களுக்கு சஞ்சாரத்திற்கு புறப்பட்டார் ஸ்ரீகளவர். அப்போது மலைகளுக்கு காடுகளுக்கு நடுவே இருக்கும் ஒரு கிராமத்திற்கு வந்தார். அந்த கிராமத்தில் அது ஒரே ஒரு வீடுதான். மடத்தில் படிக்கும் ஒரு சிஷ்யனின் வீடு. வீட்டுக் கிணற்றில் தண்ணீர் இருக்கும் என ஸ்ரீகளவரைக் கூட்டி வந்து பார்த்தால், அங்கு ஒரு சொட்டு நீரும் இல்லை. சுற்றிலும்கூட எந்தக் கிணற்றிலும் நீர் இல்லை. கவலைப்பட்ட சிஷ்யனைப் பார்த்து ஸ்ரீகளவர் - எதற்கும் கவலைப்படாதே என்று தைரியம் ஊட்டினார்.*

**தயாஸ்தளே: வாரீ நசீக தாஹி**
**ஸ்வாமி ஐகலா காய யிதீல விசார ।**
**ஜல சமீப நாஹீ சுந்தர**
**காய கராவெ போலே அனந்தர ஆஸே ॥** *(ம.ச.போ.வி.4)*

*எங்கும் தண்ணீர் கிடைக்காததால் என்ன செய்வதென்று அனைவரும் செய்வதறியாது நின்றனர். ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் ஒரு கணம் ஸ்ரீராமனைக் குறித்து தியானம் செய்தார். அங்கு வீட்டு நடுவில் இருந்த ஒரு மரத்திலிருந்து தண்ணீர் வரத் துவங்கியது. அனைவரின் ஸ்னானம், ஆன்ஹிகங்கள் முடியும் வரைக்கும் அந்த தண்ணீர் வந்துகொண்டிருந்தது. ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளின் வாழ்க்கையில் இத்தகைய அற்புத சம்பவங்கள் தினந்தோறும் நடைபெற்று வந்தன.*

**ஐஸே லீலா கரீத பஹுவித**
**வித்வாம்ஸ சஜ்ஜனே சந்தோஷ அத்யந்த ॥** *(ம.ச.போ.வி)*

*ஞானிகளுக்கு ஸ்ரீகளவரின் இந்த அற்புதங்களைக் கண்டு அவரில் அதிக பக்தி உண்டாயிற்று. மகிழ்ச்சியடைந்தனர். சாவணூர் நவாபின் சகோதரரின் சம்பந்தி பஹிரம்கான், அங்கு ஒரு பெரிய அரசு பதவியில் இருந்தான். அவனிடம் அபாரமான செல்வம்*

*இருந்தது. அவனுக்கு நவாப் தனது அரண்மனையின் ஒரு பகுதியையும், ஒரு மிகப்பெரிய இடத்தையும் கொடுத்திருந்தார். அந்த இடத்தில் அதிக பொருட் செலவில், கான் இன்னொரு அரண்மனையைக் கட்டியிருந்தான். அங்கு கிருகப்பிரவேசம் செய்து குடிபோகவேண்டும் என்று நினைத்தால், அங்கு ஒரு மிகப்பெரிய பாம்பு ஒன்று இருந்தது தெரிய வந்தது.*

**த்யாமாஜி விஷதரா மோடா எபோனி ராஹே**
**த்ரவ்யவெஜோனியா அபார ।**
**பாந்தவிலோ அத்யந்த சுந்தர**
**விஷால சௌசூபெ மந்திர ॥** *(மராத்தி ச.போ.வி.4.76)*

*அதிக பணம் செலவு செய்து வீடு கட்டி, அதில் குடிபோக முடியாதவாறு பாம்பு வந்திருப்பதை, ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளிடம் வந்து முறையிட்டு கவலைப்பட்டான். என்ன செய்தாலும் அந்த பாம்பு வெளியில் வரவில்லை என்றான். ஸ்ரீசத்யபோதர் அவனை தேற்றினார். அந்த வீட்டில் அவர், ஸ்ரீராமனின் பூஜை செய்வ தாகவும், அதனால் அவனது சர்ப்ப தோஷம் தீரும் என்றும் ஆறுதல் கூறினார்.*

*அடுத்த நாள் ஸ்ரீசத்யபோதர் அந்த அரண்மனையில் ஸ்ரீராமனின் பூஜையை நடத்தினார். பூஜை துவங்கியபோது நாகராஜன் படம் எடுத்தவாறு வந்து பூஜையைப் பார்க்கத் துவங்கியது. பூஜை முடியும்வரை அங்கு இருந்தது. பூஜை முடியும் சமயம், ஒரு பிராமணரின் மேல் நாகராஜனின் ஆவேசம் வந்தது. அவன் குதித்தவாறே கூறினான். 'இந்த பூமிக்கு அடியில் பெரும் செல்வம் இருக்கிறது. நிறைய தங்கம் உள்ளது. நான் போன பிறவியில் சம்பாதித்தவை அவை. தற்போது எனக்கும், அதற்கும் முக்தி கிடைக்கவேண்டும்' என்றான்.*

*ஸ்ரீகளவர் காட்டிய இடத்தில் தோண்ட ஆரம்பித்தனர். செல்வம் கிடைத்தது. 'அதில் பாதியை ஸ்ரீமடத்திற்குக் கொடுக்க வேண்டும். பாக்கியை பஹிரம்கான் எடுத்துக் கொள்ளலாம்' என்றான். ஸ்ரீகளவர் நாகராஜனுக்கு தீர்த்தம் கொடுத்தார். நைவேத்திய பால் வைத்தார். அவற்றைக் குடித்தபிறகு பாம்பு அங்கிருந்து சென்றது.*

யாகோலீந்த ஸாத ஹண்டேதன
ஆஹே ஏகந்தர காஹடோன
மடாசத்யாவே அர்த்த மோஜூன
க்யாவே யஜமான பாவ வாஞ்சால்லேச்ச
உர்வரீத பாவவாண்டாவித்த
தரணீசுராந்தே வியாவே சமஸ்த
ஐஸே ப்ராம்மண சாங்கதாஞ்ச யதீத
தத்பக்ஷணே பஞ்சத்வ பாவதாஜாலா சரிஸ்ருப ॥ *(மராத்தி ச.போ.வி)*

*தனது ஞானதிருஷ்டியால் செல்வம் இருக்கும் இடத்தை கண்டு கூறினார் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள். அங்கு அபாரமான செல்வம் கிடைத்தது. அதிலிருந்து ஒரு லட்ச நாணயங்களை ஸ்ரீசத்ய போதருக்கு வழங்கினார் கான். அவற்றை ஸ்ரீசத்யபோதரின் உருவம் பொறித்த காசுகளாக மாற்றினார் மடத்து திவான். இது சமூகத்தில் பரிமாற்றத்திற்காக செய்யப்பட்டதல்ல. மடத்தில் பண்டிதர்களுக்கு, மாணவர்களுக்கு தானம் செய்வதற்கு, சில கிருஹஸ்தர்களுக்குக் கொடுப்பதற்காகவும் இந்த நாணயங்களை பயன்படுத்தினார்.*

*இதற்கு முன்னர், தனது குருவான ஸ்ரீசத்யப்ரியரின் பெயர் / உருவம் பொறித்த காசுகள் / நாணயங்களை கொடுத்து வந்திருந்தார் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள். இத்தகைய காசுகளை இன்றும் பலர் வீட்டில், பூஜையில் வைக்கப்பட்டிருப்பதை பார்க்கலாம். ஸ்ரீமத் உத்தராதி மடத்து ஸ்ரீமூலராம ஸ்ரீதிக்விஜயராம பெட்டிகளில் இன்றும் இக்காசுகள் இருப்பதை பார்க்கலாம்.*

*திவான் கண்டேராயர், ஸ்ரீமடத்து விவகாரங்களில் பயன்படுமாறு இத்தகைய நாணயங்களை, தங்கம், வெள்ளி மற்றும் தாமிரத்தில் செய்து கொடுத்தார். இந்த நாணயங்களினால் தினமும் ஸ்ரீமூலராமனுக்கும், ஸ்ரீகளவருக்கும் கனகாபிஷேகம் செய்து வந்தார்.*

ப்ரதிதினம் குருணா ததந்தரம் பஹு சுதாம சுமுத்ரித ஹேமபி: ।
ரகுபதேரபிஷேக மசேகரத் ஸ்வயமஸௌ சகலைர் தனிகைரபி ॥
*(ச.போ.வி)*

*அரசின் தொழிற்சாலையில் இந்த நாணயங்களை தயார் செய்திருந்தார் கண்டேராயர். இப்படியாக மடத்து விவகாரங்களில், சிஷ்யர்களில் இந்த நாணயங்கள் பயன்பாட்டில் இருந்தன.*

சாவணூரில் காசி மற்றும் மல்லன் என்னும் இரு அத்வைதிகள் இருந்தனர். இவர்கள் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளை வெறுத்து வந்தனர். கண்டேராயரைப் பார்த்து பொறாமையில் இருந்தனர். வைஷ்ணவர்களைக் கண்டாலே அவர்களுக்கு பிடிக்கவில்லை. கண்டேராயர் தமது குருவிற்கு கொடுக்கும் மரியாதையைக் கண்டு கவலைப்பட்டனர். அதே போல, தாமும் ஒரு குருவைக் கண்டு பிடித்து அவரை இந்த ஊருக்கு வரச் செய்யவேண்டும் என்று எண்ணினர். சாதாரணமான ஒரு அத்வைத பண்டிதரை தேடிக் கண்டுபிடித்து அவரை இந்த ஊருக்கு வரவழைத்தனர்.

இவர் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளுக்கு சமானமானவர் என்று சொல்லத் துவங்கினர். அவருக்கு இணையாக மரியாதைகளையும் செய்தனர். காசி, மல்லர் இருவரும் கண்டேராயருக்கு எதிராக எதை வைத்து பிரச்னை செய்யலாம் என்று பார்த்திருந்தனர். கண்டேராயர் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளுக்கு பெரிய மடம் ஒன்றை கட்டிக் கொண் டிருக்கிறார். பெரிய பெரிய கற்கள், மணல், சுண்ணாம்பு என பொருட்கள் வந்துகொண்டிருக்கின்றன. இதைப் பார்த்த காசி மல்லர்கள் இவ்வாறு சொல்லத் துவங்கினர்.

**பானேன மத்யஸ்ய கதாசனாத ப்ரமாதினம் நாதினமூததுஸ்தா ।**
**ம்லேச்சாம் மஹீபம் க்ருதசத்யபுத்திம் அஹத்வ பஹுதுஷ்டபுத்தீ ॥**
**குர்வர்த்தம் மடதீர்த்ததேவ நிலயான் நிர்மாபயித்ராஷ்மபி: ।**
**ராஷ்ட்ரஸ்தானி வினாசிதானி நிகிலான்ருக்ஹானி தம் தண்டயன்॥**
*(ச.போ.வி. 18.54)*

அந்த ஊரின் நவாப், மது மயக்கத்தில் இருந்தபோது இவர்கள் இருவரும் அவனிடம் சென்றனர். 'ஜனாப், இந்த கண்டேராயர் தமது குருவிற்காக ஒரு பெரிய மடத்தை கட்டிக் கொண்டிருக்கிறார். அதற்காக கல், மண் ஆகியவை அரசின் செலவில் போய்க் கொண் டிருக்கிறது. இது அதிகார துஷ்பிரயோகம். உங்களுக்கு மோசம் செய்கிறார்' என்றனர். அதைக் கேட்ட நவாப் எதையும் யோசிக் காமல், அந்த கட்டிடத்திற்கான பொருட்களை கவர்ந்து தன் அரண் மனையில் போடுமாறு ஆணையிட்டார். காசி மல்லர் தாம் ஜெயித்து விட்டோம் என்று நினைத்து மகிழ்ந்தனர். மது மயக்கம் தெளிந்து வந்த நவாப், தனது அரண்மனையில் கிடக்கும் கல், மண் ஆகியவற்றைக் கண்டார். 'இது என்ன? எங்கிருந்து வந்தன? யார் இதை போட்டது?' என்றெல்லாம் கேட்டார்.

'இது ஸ்ரீசத்யபோதர் தமது மடத்தைக் கட்டுவதற்காக கொண்டு வந்து போட்டவை. காசி மல்லர் இவற்றை இங்கு வந்து போட்டிருக்கின்றனர்' என்றனர். நவாப் பயந்தார். நடுங்கினார். ஸ்ரீஸ்வாமிகள் நம் ஊரில் இருப்பதாலேயே, இங்கு அனைத்தும் நலமாக இருக்கிறது. அமைதி நிலவுகிறது. அத்தகைய சாத்விக மகானுக்கு அபசாரம் செய்தால் அது தேசதுரோகம் என்று சொல்லி, காசி மல்லர் மற்றும் அவர்களின் குருவை ராஜமண்டபத்திற்கு வரச்செய்தார். அந்த அத்வைத பண்டிதர் மிகவும் பயந்து இரவோடு இரவாக ஊரைவிட்டே சென்றுவிட்டார். காசிமல்லர் கண்டே ராயரிடம் சென்று மன்னிப்பு கேட்டனர். தம் தவறை மன்னிக் குமாறு கேட்டனர். ஸ்ரீசத்யபோதருக்கு துரோகம் செய்யக்கூடா தென்று புத்தி வந்தது. அவரது மகிமை நன்றாகப் புரிந்தது என்று கதறினர்.

1764ம் ஆண்டில் ஹைதர் அலி சாவணூர் மேல் படையெடுத்து நவாப் ஹகீம்கானை தோற்கடித்து, இரண்டு லட்சம் ரூபாய்களை கப்பமாக வசூலிக்கிறான். ஆனால் ஹகீம்கானிடம் அவ்வளவு பணம் இருந்திருக்கவில்லை. தனக்கு வந்த பரிசுகள், சால்வைகள், பீதாம்பரங்கள் ஆகியவற்றை விற்று பணத்தை சேர்க்கிறான். அந்த காலத்தில் ஸ்ரீசத்யபோதர் இன்னும் சாவணூருக்கு வந்திருக்க வில்லை.

1765ம் ஆண்டில் மாதவராவ் பேஷ்வா அவர்கள் ஹைதரின் மேல் படையெடுத்து வந்து, அவனை வென்று, துங்காவின் அக்கரைக்கு அவனை துரத்திவிட்டார். சாவணூரின் மேல் இருந்த தனது அனைத்து அதிகாரங்களையும் விட்டு ஓடினான் ஹைதர். பிறகு சாவணூர் பேஷ்வாவின் அதிகாரத்தின் கீழ் வருகிறது. ஹைதர் மறுபடி 1773ம் ஆண்டில் போராடி சாவணூரின் பாதி அரசினை வென்றுவிடுகிறான். மீதி அரசை வெல்வதற்காக மறுபடி போரிட அவன் முயன்றபோது, ஸ்ரீசத்யபோதர், கண்டேராயர் மூலமாக ஹைதருக்கும் சாவணூரின் நவாபிற்கும் பரபஸ்பர ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொடுத்தார். அதற்கு தூதுவனாக கண்டே ராயரே ஸ்ரீரங்கபட்டணத்திற்குப் போகிறார்.

சாவணூர் நவாப் ஹகீம்கானின் மகளான ஜகானா பேகமை, ஹைதர் அலியின் இரண்டாவது மகனான கரீமிற்கு திருமணம்

செய்து முடிக்கிறார். ஹைதரின் மகளான சுல்தானா பேகமை சாவணூர் நவாபின் மகனான கைரனார்க்கு திருமணம் செய்வித்து முடிக்கிறார்.

1781ம் ஆண்டு நடந்த திருச்சிராப்பள்ளியில் நடந்த போரில் ஹைதர் அலி மற்றும் அவரது இரு மகன்களுடன் சேர்ந்து கண்டேராயரும் போர் புரிகிறார். அந்தப் போரில் ஹைதர் அலி வெல்கிறான். அதன்பிறகு, ஹைதர் அலி, சாவணூர் நவாப், திப்பு முதலானவர்களுக்கு மிகவும் வேண்டியவனாகிறார் கண்டேராயர். ஸ்ரீரங்கப்பட்டிணத்தில், கண்டேராயரை யானை மேல் ஏற்றி இரு முறை ஊர்வலம் வரச்செய்து தன் நன்றியைக் கூறுகிறார் ஹைதர். இத்தகைய கண்டேராயர், ஸ்ரீசத்யபோதரின் தாசானுதாசர்.

ஹைதர் அலி இறந்தபிறகு அவனின் மகன் திப்புவின் பட்டாபிஷேகத்திற்கு சாவணூர் நவாப் வரவில்லை. இதை காரணமாகக் காட்டி, திப்புவின் அமைச்சர் மிர் சாதிக், நவாப் மேல் தனது கோபத்தைக் காட்டுகிறார். இந்த மிர் சாதிக்கிற்கு கௌரி பிதனூரின் நவாப் மற்றும் சாவணூரின் நவாப் இருவரின் மேலும் கோபம் இருந்தது. தனக்கு அதிக மரியாதை தருவதில்லை என்று அவர்கள் மேல் த்வேஷம் இருந்தது. அதைக் காட்ட இதுவே சரியான தருணம் என்று நினைத்தான்.

எப்படியாவது இவர்களை அதிகாரத்திலிருந்து விலக்க வேண்டுமென்று நினைத்திருந்தான். மிகப் பெரிய முக்கியமான பட்டாபிஷேக விழாவிற்கு தாம் வராமல், தமது அதிகாரிகளை மட்டும் அனுப்பி, நம்மை அவமானப்படுத்தி விட்டார்கள் என திப்புவிடம் கோள் மூட்டினான். திப்புவிற்கும் இவர் சொல்வது சரி என்று தோன்றியது.

சில நாட்கள் கழித்து இவ்விரண்டு கோட்டைகளின் மேல் திப்பு படையெடுத்துப் போய், அதில் கௌரிபிதனூரை சுலபமாக வென்றான். சாவணூரரை வெல்வதற்கு பங்காபுரத்திற்கு வந்து தங்கி, அங்கிருந்து சாவணூர் நவாப்பிற்கு செய்தி சொல்லி அனுப்பினான். இச்செய்தியைக் கேட்ட நவாப் நடுநடுங்கிப் போனான்.

மக்கள் நலனை விரும்பிய நவாப்பிற்கு போர் வேண்டாம் என்று தோன்றியது. என்ன செய்யலாம் என்று யோசித்தான். ஆனால்

அமைதியை விரும்பிய இவரது நிலையைப் பார்த்தவர்கள், இவர் போருக்கு பயந்துவிட்டார் என்று எண்ணினர். இவரை போருக்குத் தயாராகும்படி கூறினர்.

சாவணூரில் போர் வந்துவிடும் என்னும் நிலை இருக்கிறது என்று அங்கேயே தங்கியிருந்த ஸ்ரீசத்யபோத தீர்த்தரின் காதுகளில் விழுந்தது. திவான் கண்டேராயரை அழைத்து, அனைத்து விஷயங் களையும் சரிவர அறிந்தார். திப்புவிற்கு நவாப்பை விட்டு 'போர் வேண்டாம். அமைதி தேவை' என்று கடிதம் எழுத வைக்குமாறு கண்டேராயரிடம் கூறினார். அதற்கு திவான் அவர்கள் - 'போருக்காகவே திப்பு இவ்வளவு தூரம் வந்திருக்கிறான். இப்போது அமைதி வேண்டும் என்று கூறினால் அதற்கு ஒப்புவானோ?' என்று கேட்டார்.

அதற்கு ஸ்ரீகளவர் 'திவான் அவர்களே. இதுவரை நீங்கள் சமாதானத்தைப் பற்றி பேசவே இல்லை. நீங்கள் எப்படி அவர்களை போரின் சூழ்நிலையில் இருக்கிறார்கள் என்று நினைக்கிறீரோ, அவர்களும் உங்களை அப்படியே நினைக்கிறார்கள். ஆகவே, சமாதானத்தைப் பற்றி ஒரு முறை பேசிப் பாருங்கள். நாம் பூஜிக்கும் ஸ்ரீராமசந்திரன் நம் பக்கமே இருக்கிறான்' என்று உபதேசித்தார்.

குருகளின் உபதேசத்தின்படியே, நவாப்பின் சமாதான கடிதத்தை எடுத்துக்கொண்டு, திவான் கண்டேராயரும், கைர கானும், பங்காபுரத்தில் கூடாரம் அமைத்து தங்கியிருக்கும் திப்புவிடம் சென்றார்கள். அமைதி, சமாதானத்தை வேண்டி நவாப் எழுதிய கடிதத்தைக் கண்டு திப்புவின் மனம் மாறியது.

ஆனால் அவருடன் இருந்த மீர் சாதிக் என்பவர், இது நவாப்பின் தந்திரம் என்றும், நம்முடன் போரிட பயந்து நவாப் செய்யும் கபட நாடகம் என்றும், சமாதானமாகப் போவதற்கு எதிர்ப்பு தெரிவித்தான். நவாப் நிஜமாகவே நம்முடன் போரிட விரும்பவில்லையெனில், நம் போர் செலவுக்காக ஒரு லட்ச வராகன்களை காணிக்கையாகக் கேளுங்கள். அப்படிக் கொடுத்தால் மட்டுமே அவர் அமைதியை விரும்புகிறார் என்று பொருள் என்று துர்போதனை வழங்கினான். இதே விஷயத்தை திவான் கண்டே ராயரிடம் சொல்லி, அவரை திருப்பி அனுப்பினான் திப்பு.

இதைக் கேட்ட நவாப்பிற்கு ஆகாயமே இடிந்து தலை மேல் விழுந்தது போலாயிற்று. சாவணூரின் நிதி நிலைமை அப்படி யொன்றும் சரியாக இல்லை. பஞ்ச காலத்திலிருந்து அப்போதே மக்கள் மெதுவாக மீண்டு வந்து கொண்டிருந்தனர். அவர்களை பணத்திற்காக மேலும் கஷ்டப்படுத்துவதற்கு அவரது மனம் ஒப்பவில்லை. சமாதான தூதின் விளைவினை ஸ்ரீசத்யபோதருக்குத் தெரியப்படுத்த, கண்டேராயரை அவரிடம் அனுப்பினான். ஸ்ரீகளவரும் நடந்த விஷயங்களை கேட்டு அறிந்தார்.

ஒரு லட்சம் வராகனுக்காக, ஆயிரக்கணக்கான மக்களின் உயிரை பணயம் வைப்பது சரியா என்று கண்டேராயரை கேட்டார். தம்மிடம் இருந்த ஒரு லட்சம் தங்க நாணயங்களை எடுத்துக் கொண்டு போகுமாறு கூறினார். தர்மகுருகளின் செல்வத்தை இப்படிப்பட்ட காரியத்திற்கு பயன்படுத்த தயங்கினார் திவான். அதற்கு குருகள் - 'சுக சந்தோஷத்தில் இருந்தபோது, ராஜர் கொடுத்த நிதியே இவை. அத்தகையவர் ஆபத்தில் இருக்கும்போது இதே நிதியை பயன்படுத்துவதில் என்ன தவறு? ஆற்று நீரை ஆற்றிலேயே விட்டு, புண்ணியம் சேர்த்துக் கொள்வதைப் போல, இதை பயன் படுத்திக் கொள்ள தயங்கவேண்டாம். இதை எடுத்து திப்புவிற்கு அனுப்பவும். நவாப்பிற்கு வந்த ஆபத்தினை போக்கவும். நமக்கு, உங்களுக்கெல்லாம் ஸ்ரீராமனின் அருள் இருக்கவே இருக்கிறது. இப்போது நாம் சமாதானத்திற்கான வழியைப் பார்ப்போம்' என்றார்.

ஒரு லட்சம் வராகன்களை சுமந்த ஒட்டகங்களுடன் திவான் கண்டேராயர் மற்றும் கைர கான், திப்புவின் இருப்பிடத்திற்கு சென்றனர். அமைதிக்காக பெரிய தொகையையும் கொடுக்க முன்வந்த நவாப்பின் மனதை அறிந்த திப்பு மகிழ்ந்தான். நாணயத்தை சோதிப்பதற்காக, மூட்டையிலிருந்த ஒரு நாணயத்தை எடுத்துப் பார்த்தான். அதில் ஒரு பக்கத்தில், தேவநாகரி லிபியில் 'ஸ்ரீகுருராஜோ விஜயதே' என்று இருப்பதைக் கண்டு, 'இவை ஸ்ரீசத்யபோதரின் நாணயங்கள். நவாப்பினுடையது அல்லவே' என்று கேட்டான். அதற்கு திவான், ஸ்ரீகளவர் இங்கேயே தங்கி யிருப்பதாகவும், போர் வேண்டாமல் சமாதானமாகப் போவதற்கு, அவர் செய்த தியாகமே இப்படி மடத்து செல்வங்களைக் கொடுத்திருக்கிறார் என்று விளக்கினார்.

ஒரு நிமிடம் யோசித்த திப்பு, அந்த நாணயத்தை மறுபடி மூட்டைக்குள் போட்டு இவ்வாறு கூறினான். 'திவான் அவர்களே. ஸ்ரீசத்யபோதரை நம் தந்தையவர்கள் கௌரவித்து மரியாதை செலுத்தியிருக்கிறார்கள். அவர் நாமும் வணங்கத்தக்கவரே. அத்தகையவரின் நாணயங்களை நான் பெற மாட்டேன்' என்றான். உடனே தனது அதிகாரிகளை அழைத்து, தன் கஜானாவிலிருந்து ஆயிரம் வராகன்களை வரவழைத்து, அதை திவானிடம் கொடுத் தான். 'இது ஸ்ரீசத்யபோதருக்கு என்னுடைய சிறு காணிக்கை. அவர் இருக்கும் இடத்திற்கு அறியாமல் வந்துவிட்டதற்கு என்னை மன்னியுங்கள்' என்று கூறி அனுப்பினான்.

இதைக் கண்ட கண்டேராயருக்கு பேச்சே வரவில்லை. 'குருதேவா, என்னே உன் மகிமை' என்று அரற்றினார். இன்றும் இந்த இடம் அமைதி, சமாதானத்துடன் இருக்கிறதென்றால் அதற்கு நம் குருகளே காரணம் என்று சொல்வதில் மிகையில்லை என்று கூறி அவரே முன்னின்று, பற்பல ஆட்களைக் கொண்டு, மிகவும் விசாலமான மடம் ஒன்றை ஸ்வாமிகளுக்காக கட்டிக் கொடுத்தார். சாவணூர் சம்ஸ்தானத்தில் 900 பிராமணர்களுக்கு, வைதிகர்களுக்கு, பண்டிதர்களுக்கு மாத சம்பளம் கொடுத்திருந்தார் என்பதை வரலாற் றிலிருந்து நாம் அறிகிறோம். ஸ்வாமிகளிடம் மூன்று மடத்தவர் களும் இருக்கின்றனர். பேஷ்வா ஒரு பிராமணரே. அவரது அரசிலிருந்து பிராமணர்களுக்கு, கோயில், மடம், வேத பாட சாலைகளுக்கு ஆண்டுக்கொருமுறை மானியம் வழங்கிக் கொண்டிருந்தார்.

பேஷ்வா அவர்களின் ஆட்சிக் காலத்தில், சுமார் 40 ஆண்டுகள் வரை, தென்னிந்தியாவில் அமைதி நிலவவும், பிராமணர்கள், ஆத்திகர்களுக்கு பற்பல உதவிகளை செய்தும், சமூக நலனுக்காக பற்பல அருமையான யோசனைகளை சொல்லியும், நல்லாட்சி புரியச் செய்ததில் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளுக்கு ஒரு பெரும்பங்கு இருக்கிறது. மாத்வ சமூகத்தின் ஒரு மாபெரும் அடையாளமாக, ஸ்ரீமத் உத்தராதி மடத்தின் மகா பீடாதிபதிகளாக அவர் செய்த சமூக, ஆன்மிக செயல்கள் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவை.

★★★

## சாவணூரில் 18 சாதுர்மாதங்கள்

*ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் தமது 18 சாதுர்மாத விரதங்களை சாவணூரிலேயே செய்து முடித்தார். அந்த 4 மாதங்களும் நாட்டின் பற்பல இடங்களிலிருந்து, பல பண்டிதர்கள் தங்கள் குடும்பம், மாணவர்களை அழைத்து சாவணூருக்கு வந்து அங்கேயே தங்கிக் கொண்டிருந்தனர். அந்த சமயத்தில், சாவணூரில் எங்கு பார்த்தாலும், பண்டிதர்கள், மாணவர்கள் காணப்பட்டனர். ஊரே ஒரு பெரிய குருகுலமாகத் தோன்றியது. ஸ்ரீகளவரின் தினப்படி நடவடிக் கைகளே இன்றைக்கும் உத்தராதி மட பீடாதிபதியின் நடவடிக் கைகளாக பின்பற்றி வருகின்றனர்.*

*பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்து, சுத்தமான ஆசனத்தில் அமர்ந்து தியானம் செய்து, காலையில் செய்ய வேண்டிய அனைத்து விதி களையும் நடத்தி, முகம் கழுவி, துளசியை வணங்கி, கோபிசந்தன, ஊர்த்வ புண்டரம் தரித்துக் கொண்டிருந்தார். அடுத்து பற்பல ஸ்தோத்திரங்கள், சாஸ்திர பாராயணங்கள் செய்வது வழக்கம். சிஷ்யர்கள் ஒவ்வொருவராக வந்து வணங்கும்போது, அவர்களிடம் பேசியவாறு நாராயண ஸ்மரணை செய்வார். அனைவரும் வந்து அமர்ந்தபிறகு, மந்திரம் சொல்லி, வேத கோஷங்களுடன் ஸ்ரீராம சந்திர, தேவியருக்கு, வந்து சேவையைப் பெற்றுக் கொள்ளுமாறு வேண்டுகோள் வைப்பார். இது தினமும் செய்யும் வேண்டு கோளாகும்.*

*அடுத்து குருகளான ஸ்ரீசத்யப்ரியரின் பாதுகா பூஜை நிகழ்ச்சி. நைவேத்தியம், மங்களாரத்திக்குப் பிறகு புராண பிரவசனம். ஸ்ரீகளவர் ஸ்னானம் செய்து பிரணவ மந்திரத்திற்கு அமரும்போது, சிஷ்யர்கள் புராணம் சொல்வர். பிறகு ஸ்ரீகளவரினால் நான்கு மணி நேரம் வரை சுதாதி கிரந்தங்களின் பாடம், பிறகு தங்க மண்டபத்தில் ஸ்ரீமூலராம பூஜை. வலது பக்கத்தில், ஸ்ரீகிருஷ்ணத்வைபாயனர் பூஜித்த பிரதிமைகளை வெள்ளித் தட்டில் வைத்திருந்தார். இடது பக்கத்தில், முக்யபிராணர், கருடன் ஆகிய பிரதிமைகளை வைத் திருந்தார். ஸ்ரீகளவர் ரிக்பாஷ்யம் பாடம் சொல்லிக் கொண்டிருந்தார்.*

*பாடம் முடிந்தபிறகு பூஜை தொடங்கும். நூற்றுக்கும் மேற் பட்ட சிஷ்யர்களின் சாஸ்திர பாராயணத்துடன் பூஜை*

துவங்கப்படும். ஸ்ரீதிக்விஜயராம, மூலராம, மூலசீதாதேவியரை முதல் படியில் அமர்த்தி, வம்சராம, விட்டல தேவரை இரண்டாம் படியில் அமர்த்தி, வேதவியாச சம்புடத்தை அவர்கள் நடுவில் வைத்து, பூஜையை தொடங்குவது வழக்கம். தங்க பாத்திரங்களில் அபிஷேகம், வஸ்திரங்களை அர்ப்பிப்பது, சந்தனம், துளசி ஆகியவை சமர்ப்பிப்பது நடக்கும்.

வேதவியாச சம்புடத்தின் மேல் சந்தனம், துளசி சார்த்தி, கிருஷ்ணாஜி பந்த் அவர்கள் கொடுத்த ரத்னத்தில் வடித்த ராம லட்சுமண சீதா தேவியரின் விக்ரகங்களை வைத்து பூஜித்திருந்தார். தீபாராதனை, துணியினால் மூடியாறு நைவேத்தியம் பற்பல வித உணவுப் பொருட்களை ஸ்ரீராமனுக்கு அர்ப்பித்து வந்தார். 12 மங்களாரத்தி, சாமர சேவை, சங்கு வாத்தியம், பிறகு மூன்று மங்களாரத்தி, மாலையில் பூஜை செய்து, தேவர்களை கிருஷ்ணாஜின பெட்டிகளில் கட்டி வைத்திருந்தார். அனைவருக்கும் தீர்த்தம், சந்தனம் கொடுத்து, புராண பிரவசனங்களை சொல்லிக் கொண்டிருந்தார்.

மதிய நேரத்தில், ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள், ரிக்பாஷ்யத்தின் உபன்யாசத்தை செய்து கொண்டிருந்தார். கார்த்திக மாதத்தில் முன்னர் பார்த்த விஷ்ணுதீர்த்த கிணற்றின் அடியிலேயே மகாபூஜை நிகழ்ச்சிகள், மாச மகாத்யம், புராண நடவடிக்கைகள் நடந்து வந்தன. நவராத்திரி, தீபாவளி சமயத்தில் மொத்த ஊரே கோலாகலமாக அலங்கரிக்கபட்டிருக்கும். ஸ்ரீகளவர் சாவணூரில் மொத்தம் 4 முறை சர்வமூல பாடங்களை, 10 முறை நியாயசுதா பாடங்களை கற்றுத் தந்தார். ஸ்ரீமத்வ நவமி, ஸ்ரீஜயதீர்த்தரின் புண்யதினம், ஸ்ரீரகூத்தமரின் புண்ய தினம் ஆகியவற்றை மிகச் சிறப்பாகக் கொண்டாடினார்.

ஸ்ரீகளவர் தினமும் ஸ்னானம் செய்யும் இடத்திற்கு அருகில் ஒரு அத்தி மரம் இருந்தது. ஸ்ரீகளவரின் பாதங்களைக் கழுவிய நீரைத் தொட்டு வந்த அந்த மரம், ஒன்பது மாதங்களில் தன் மர ஸ்வரூபத்தை விட்டு முக்தி நிலையை அடைந்தது. ஸ்ரீகளவரின் அருளினால், மரம், குரங்கு ஆகியவைகள்கூட முக்தி நிலையை அடைந்தன.

**சமூலம் தருதேஹம் சத்யக்த்வா தீர்த்த ஜலாந்தரே ।**
**முக்தோ பூத்வா பரம்ப்ராபஜீவ ஸ்ரீபாதசன்னிதெள ॥**

*ஸ்ரீமடத்தின் கட்டிடத்தில், த்ரிவிக்ரம வராக தேவர்களை நிர்மாணித்தார். கன்னட நாட்டின் எந்தவொரு பிராமணரின் வீட்டிலும் நடந்து வந்த உபனயனம், திருமணம் ஆகியவை, ஸ்ரீகளவரின் உதவி, அருளினாலேயே நடந்து வந்தன.*

*ஒரு நாள் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் இருக்குமிடத்தில், ஸ்ரீதீரேந்திர தீர்த்தர் வந்தார். ஸ்ரீசத்யபோதரை வணங்கினார். மூத்த பீடத்தின் மூத்த யதிகளும் சிறந்த தபஸ்விகளுமான ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளின் பாண்டித்யம், ஆளுமை, புகழ், தேஜஸ், மிகவும் அற்புதமானவை. மாத்வ சமூகத்தில் அனைவராலும் வணங்கப் படுபவராக இருந்தார்.*

**ஸ்ரீசத்யபோத தீர்த்தான் தே த்ருஷ்ட்வானத்வா தத: பரம் ।**
**கீர்த்தயித்வா ஆத்மவ்ருத்தாந்தம் கடிகார க்ருஹே ஸ்திதா: ॥**

*(பூ.கு.வ.க.30.11)*

*ஸ்ரீதீரேந்திர தீர்த்தர், ஸ்ரீசத்யபோதரின் சன்னிதியில் இரு மாதங்கள் வரை தங்கியிருந்தார். தினமும் ஸ்ரீசத்யபோதர் தனது பூஜையை துவங்கும் நேரத்தில், இவரும் வந்து பூஜையைக் காண அமர்ந்திருந்தார். ஸ்ரீசத்யபோதர் நைவேத்தியம் செய்தபிறகு, இருவரும் சேர்ந்தே பிக்ஷை ஸ்வீகரித்திருந்தனர். ஸ்ரீகளவர் அவருக்கு அனைத்து வித வசதிகளையும் செய்து கொடுத்திருந்தார். தமது மடத்தின் பிரச்னைகளை, ஸ்ரீவரதேந்திரரால் தமக்கு ஏற்பட்ட தொந்தரவுகளைச் சொல்லி, அதற்கான தீர்வு, உதவிகளைப் பெற்றிருந்தார் ஸ்ரீதீரேந்திர தீர்த்தர்.*

*இதற்குள், தம்மைப் பற்றிய ஒரு அபிப்ராயத்தை ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் பெற்றிருந்தார் என்று ஸ்ரீவரதேந்திரர் அறிந்தார். ஸ்ரீவரதேந்திர தீர்த்தரின் முக்கிய சிஷ்யரான ஸ்ரீஜகன்னாததாசர், கடந்த ஒரு ஆண்டாக ஸ்ரீசத்யபோதரிடமே இருந்தார். ஹரிகதாம்ருத சாரத்தின் இறுதிசந்திகளை அங்கேயே எழுதி முடித்திருந்தார். அந்த கிரந்தத்தின் மங்களம் சாவணூரிலேயே ஆகப்போகிறது என்பதை அறிந்தார். தானும் ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளைக் கண்டு, மடத்து விஷயங்களை அவரிடம் சொல்லி, அவரது அருள் / ஆசியைப் பெறவேண்டுமென்று ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் விரும்பினார்.*

**தத: ஸ்ரீமத் சத்யபோத தீர்த்தானுக்ரஹ காங்க்ஷயா ।**
**ஸ்வசிஷ்யான் ப்ரேஷயாமாஸு: சசவணாக்யா புரம்ப்ரதி ॥**

*(பூ.கு.வ.க. 31.15)*

*ஸ்ரீசத்யபோதரின் அருளுக்காக நாம் வந்து அவரை தரிசிக்க விரும்புகிறோம். நீங்கள் சம்மதித்தால் வந்து பார்க்கிறோம் - என்று சிஷ்யர் மூலமாக சொல்லி அனுப்பினார் ஸ்ரீவரதேந்திர தீர்த்தர். ஆனால் ஸ்ரீசத்யபோதரோ - தீரேந்திரர் மூலமாக அனைத்தும் அறிந்தோம். தற்போது நிலைமை சரியில்லை. ஆகவே சிறிது காலம் பொறுத்திருக்கவும் - என்று பதில் அளித்தார். மேலும் இரு முறை அனுமதி கேட்டும், சரியான பதில் கிடைக்கவில்லை.*

*இறுதியில் சக 1695 விஜய சம்வத்ஸரம் ஆண்டு 1774 மார்கசீர்ஷ சுக்ல பிரதமையன்று, தனுர் மாத பூஜைகளை முடித்துக் கொண்டு, யாரிடமும் சொல்லாமல், ஸ்ரீவரதேந்திர தீர்த்தர், ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளின் இடத்திற்கு வந்தார். ஸ்ரீசத்யபோதரை வணங்கினார். 'ஸ்ரீதீரேந்திர தீர்த்தரின் மேல் இருக்கும் புகார்களை நாம் மறந்திருக்கிறோம். அவரிடம் மறுபடி நட்பு வளர, தாங்கள் தான் அருள வேண்டும்' என்று முறையிட்டார். 'மாத்வ சமூகத்திற்கு, சிஷ்யர்களுக்கு இதைப் பற்றிய தப்பான அபிப்பிராயம் வந்திருக்கிறது. தாங்கள் அனைவருக்கும் இதைப் பற்றி தெரிவித்து, இந்த கருத்து வேறுபாட்டினை களையவேண்டும்' என்று கேட்டுக் கொண்டார்.*

**பவதாம் ச க்ருபாலுத்வம் ஷ்ருஷ்வா த்ரிமடகை: த்விஜை: ।**
**பரித்யஜ்யாத மாத்ஸர்யம் ப்ரசன்னான் கர்துமாகத: ॥**

*'ஸ்ரீசத்யபோதரே, உங்களின் கருணை மனம் மூன்று மடத் தவர்க்கும் தெரிந்திருக்கிறது. நாம் அனைத்து இடங்களிலும் திக் விஜயம் செய்வதற்கு அனுமதி கொடுத்து அருள வேண்டும்' என்றார். இதற்கு ஸ்ரீகளவரும் அனுமதித்தார். ஸ்ரீவரதேந்திரர் பங்காபுரத்திற்கு சென்று, அங்கு தமது தேவதார்ச்சனை, பூஜைகளை முடித்துக் கொண்டு, ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளிடம் வந்தார்.*

*ஸ்ரீசத்யபோதர் செய்யும் தேவதார்ச்சனையைக் கண்டு, தீர்த்தம் வாங்கி, இருவரும் சேர்ந்தே பிக்ஷை ஸ்வீகரித்தனர். 15 நாட்கள் வரை ஸ்ரீவரதேந்திரர் அங்கேயே இருந்தார். சாவனூரில் ஸ்ரீவரதேந் திரருக்கு தினமும் பல வீடுகளில் பாதபூஜைகள் நடந்திருந்தன.*

*ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீசத்யபோதரின் சன்னிதியிலேயே இருந்தார். ஸ்ரீசத்யபோதர் ஸ்தோத்திரத்தை சம்ஸ்கிருதத்தில்*

*இயற்றினார். 'நா தன்யனாதேனெந்து' முதலான ஐந்து பாடல்களை இயற்றினார். ஸ்ரீசத்யபோதரின் ஆணையின்படி சாவணூரில் அனைத்து பண்டிதர்களும், மாணவர்களும் தங்குவதற்கு ஏற்பாடு செய்து கொடுத்தார் கண்டேராயர்.*

**ஏவம் அத்யாபகை: மத்வசாஸ்த்ர வியாக்யான தத்பரை:**
**வித்வத்பி: சம்யுதம் சக்ரே சோக்ரஹாரம் மனோஹரம் ॥**
**அக்ரஹாரம் ப்ராம்மணானாம் ரக்ஷணார்த்தம் ப்ருதக் ப்ருதக் ।**
**சர்வேஷாம் தனமர்யாதாம் அகரோத் ஸ்வாமி போதத: ॥**

*(பூ.கு.வ.க.32)*

*அனைத்து பண்டிதர்களுக்கும், பிராமணர்களுக்கும் அவர்களுக்குத் தகுந்தவாறு மாதாந்திர சம்பளத்தை கண்டேராயர் ஏற்பாடு செய்திருந்தார். ஸ்ரீகளவரும் யாராக இருப்பினும், எந்த வேலைக்காக வந்திருந்தாலும், யாருக்கும் இல்லை என்று சொல் லாமல் அனைவருக்கும் தகுதிக்கேற்ப உதவிகளை செய்துவந்தார். சம்பாவனை, தக்ஷிணை கொடுத்தே வந்தார்.*

**தேன நாஸ்தேதி நைவோக்தம் கதாசிதபி சர்வதா ॥**

*அவர் யாரையும் வெறுக்கவில்லை. சமூகத்தின் அனைத்து மக்களுக்கும் கருணை காட்டினார். ஸ்ரீகளவரின் சுபாவமே இப்படியாக இருந்தது. ஸ்ரீகளவரிடம் நூற்றுக்கும் மேற்பட்டோர் படித்து, பெரிய பண்டிதர்களாயினர். அவரில் நால்வர் ஸ்ரீகளவரின் சிஷ்யரே ஆகி, அவரிடம் பாடம் படித்து, ஸ்ரீகளவருக்குப் பின் ஸ்ரீமத் உத்தராதி மடத்து பீடத்தை அலங்கரித்தனர். ஸ்ரீசத்யசந்தர், ஸ்ரீசத்யவரர், ஸ்ரீசத்யதர்மர் மற்றும் ஸ்ரீசத்யசங்கல்பரே அந்த நால்வர்.*

*ஸ்ரீசத்யபோதர் இமயம் முதல் குமரி வரை அனைத்து இடங்களுக்கும் பயணம் செய்தார். வைஷ்ணவ சித்தாந்தத்தின் பிரசாரத்தை செய்தார். ஸ்ரீமத் உத்தாரதி மடத்து புகழை பட்டொளி வீசிப் பறக்கச் செய்தார். காசியில் துர்கா காட்டில் மிகப்பெரிய மடத்தைக் கட்டினார். திருச்சிராப்பள்ளி மற்றும் ஹுரளிகொப்ப ஆகிய இடங்களில் நடைபெறவிருந்த இந்து முஸ்லிம் பிரச்னை / சண்டைகளை தாமே போய் சமாதானப்படுத்தி நிறுத்தினார். பங்கா புரத்தில், மைசூரின் ஹைதர் அலிக்கும், புணேவின் கோபாலராவ் பட்வர்தனுக்கும் புத்ரபாக்கியத்திற்கு ஆசிர்வதித்தார். 40 ஆண்டுகள்*

அவர் வீற்றிருந்த பீடத்தின் ஒவ்வொரு நாளும் முக்கியமானவை. அனைத்து மடங்களின் பீடாதிபதிகளுடன் நட்பு வளர்த்திருந்தார்.

ஜகன்னாததாசர், தமது குருவான ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகளுக்கு சமர்ப்பித்த மந்திராக்ஷதை தட்டு இன்றும் ஸ்ரீகளவரின் பிருந்தா வனத்தருகில் இருக்கிறது. அனைவருக்கும் இந்த தட்டிலிருந்தே மந்திராக்ஷதை கொடுத்திருந்தார். ஸ்ரீசத்யபோதர், தமது பாதுகை களை, துளசிமணிகளை சிஷ்யரான ஜகன்னாததாசருக்குக் கொடுத்திருந்தார். அதை இன்றும் மானவியில் ஸ்ரீஜகன்னாததாசரின் சன்னிதியில் காணலாம்.

சோபனக்ருத் சம்வத்ஸரம் பால்குண மாதத்தில், தமது சிஷ் யரான பெரிய பண்டிதரான, ஹாவேரி ராமாசார்யருக்கு சன்யாசத்தை வழங்கி அவருக்கு, ஸ்ரீசத்யசந்த தீர்த்தர் என்று பெயரிட்டார். ஸ்ரீசத்யசந்தர் இன்றும் ஆன்மிக மற்றும் தத்வ உலகில், ஸ்ரீராகவேந் திரரின் நான்காவது அவதாரம் என்றே போற்றப்படுகிறார். பற்பல கிரந்தங்களை இயற்றியிருக்கிறார். தமது விஷ்ணு ஸ்துதியில் ஸ்ரீசத்யபோதரை மிகவும் அற்புதமாக் வர்ணித்திருக்கிறார்.

ஸ்ரீசத்யசந்தருக்கு சன்யாசம் அளித்த குருவான ஸ்ரீசத்யபோதர் தமது ஞானதிருஷ்டியால் சிஷ்யரின் எதிர்காலத்தைப் பார்த்தார். சிஷ்யருக்கு ஆயுள் முடியப்போவதை அறிந்தார். 12 பாத்திரங்களில் நீர் நிரப்பி, ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு ஆண்டு ஆயுளை மந்திரித்தார். ஸ்ரீசத்யபோதர், அவருக்கு 10 ஆண்டுகள் ஆயுள்தானம் செய்தார்.

தமது இறுதிக்காலம் நெருங்குவதை அனைவருக்கும் தெரிவித்தார். தமது 74வது வயதில் 41 ஆண்டுகள் சர்வோத்தமனான இந்த ஸ்ரீமத் உத்தராதி மடத்தின் பீடாதிபதியாகி சக 1783 சோபக்ருத் சம்வத்ஸரம் பால்குண பகுள பிரதமை அன்று காலையில், தாமே நிர்மாணித்த பிருந்தாவனத்தில், நிரந்தர பிரணவ மந்திரத்தை ஜபித்தவாறு பிரவேசம் செய்தார்.

ஸ்ரீசத்யபோதரின் பிருந்தாவனத்தால் சாவணூர் இன்றும் புனிதமான க்ஷேத்திரமாக ஆகியிருக்கிறது. இன்றும் பிருந்தா வனத்தில் சாக்ஷாத்தாக இருந்துகொண்டு, ஆயிரக்கணக்கான மக்களுக்கு அருளிக் கொண்டிருக்கிறார். அவரது ஆராதனை

